

# திருவள்ளுவர் கலம்பகம்
# மற்றும்
# உள்ளுதற்கினிய திருவள்ளுவம்

ஆசிரியர்
கவிஞர் இளம்பூரணனார்
(சி.து. கன்னிசாமி)

நூல் வெளியீடு
**நூலாசிரியர் மாணாக்கர் குழாம்**
மதுராந்தகம் வட்டம்

# திருவள்ளுவர் கலம்பகம்

மற்றும்

# உள்ளுதற்கினிய திருவள்ளுவம்



ஆசிரியர்:

கவிஞர். இளம்பூரணனார்

[சி. து. கன்னிசாமி]

குருகுலம், திருக்குறள் பீடம், மதுராந்தகம்.



வெளியீடு:

ஆசிரியரின் மாணாக்கர் குழாம்

மதுராந்தகம் வட்டம்

## -: நூல் வரலாறு :-


| | | |
|---|---|---|
| நூல் | : | திருவள்ளுவர் கலம்பகம் மற்றும் உள்ளுதற்கினிய திருவள்ளுவம் |
| ஆசிரியர் | : | **கவிஞர் இளம்பூரணனார்** (சி. து. கன்னிசாமிப் பிள்ளை) |
| பிறந்த நாள் | : | 23.5.1917 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| பதிப்பு | : | முதற் பதிப்பு சன. 1999. |
| தாள் | : | 10.5 G டபுள் கிரௌன் ஒயிட் |
| அளவு | : | 1X8 கிரௌன் |
| பக்கம் | : | |
| எழுத்து | : | 12 புள்ளி |
| படிகள் | : | 1,000 |
| அச்சு | : | **மணி பிரிண்டர்ஸ்,** 85/3, ஜி.எஸ்.டி. ரோடு, பேருந்து நிலையம், மதுராந்தகம்-603306. |
| கட்டடம் | : | கார்டு போர்டு |
| விலை | : | ரூ. 25-00 |
| வெளியீடு | : | ஆசிரியரின் மாணாக்கர் குழாம். |

கிடைக்குமிடம்: குருகுலம் திருக்குறள் பீடம், மதுராந்தகம்-603306




**க. அன்பழகன்**, எம். ஏ.,
கல்வி அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள்: 2—3—99

# அணிந்துரை

கவிஞர் இளம்பூரணனார் என்னும் பெயரைச் சிறப்பாகக் கொண்ட திரு. சி. து. கந்தசாமி அவர்கள் இளமை முதலே முப்பாலைப் பருகி, அறவுணர்வில் தோய்ந்து, திருக்குறள் மாட்சியைத் தெளிந்து, திருவள்ளுவரைத் தெய்வமாகவே உளங்கொண்ட புலவர்.

தமிழகத்தில் முதன் முதலாகத் திருக்குறளுக்கென்றே அழகரடிகளார் அமைத்த ஆதீனத்தில் திருக்குறள் பீடமும் அமைத்து அதன் முதல்வராகவும் அழகரடிகள் விளங்கினார். அந்தக் குருகுலத்தின் சிறப்புக்குரிய கவிஞராகத் திகழ்ந்தவர் இளம்பூரணர். அவரிடம் பயின்ற பலர் திருக்குறள் நெறி போற்றும் நற்றமிழ்ப் புலவர்களாக விளங்குகின்றனர் என்பது அவரது தொண்டுக்குக் கிடைத்த பயனாகும்.

இளம்பூரணர் இயற்றியுள்ள திருக்குறட் செம்மணி மாலை, திருவள்ளுவர் நூற்றெட்டுப் போற்றித் திருவகவல், அம்மானை, திருத் தசாங்கம் ஆகிய இலக்கியங்கள், திருவள்ளுவரின் மீது கவிஞர் கொண்டுள்ள அளவற்ற பற்றையும், உள்ளம் கரையும் ஈடுபாட்டையும் (பக்தி) புலப்படுத்துவனவாகும்.

அவற்றின் தொடர்ச்சியாக இதுகாலை 'திருவள்ளுவர் கலம்பகம்' என்னும் இந்த அரிய கவிதை இலக்கியத்தையும், 'உள்ளுதற்கினிய வள்ளுவம்' என்னும் தலைப்பில் கட்டளைக் கலித்துறை யாப்பில் 102 கருத்துமிகு பாடல் களையும் இயற்றி இணைத்துள்ளார். அப்பாடல்களில், திருக்குறளின் அருமை கண்டு எடுத்துரைத்த வின்செண்ட் ஸ்மித் என்னும் வரலாற்றுப் பேரறிஞரும், தேம்பாவணி இயற்றிய வீரமாமுனிவர் என்னும் பாதிரியாரும் போற்றி யுரைக்கப்பட்டுள்ளனர். வின்செண்ட் ஸ்மித் குறித்து,

"தன்னிகரில் மெய்க்குறள் நூலினைச் சால்புடன்
ஆய்ந்ததன்சீர்
மன்னும் சிறப்பினை ஒவ்வா வடவர்தம் நூல்களென
உன்னியெழுதினர் என்றால் இதன்சீர் உரைப்பரிதே''

— என்று சிறப்பிக்கின்றார்.

அப்படிப்பட்ட கவிஞர், திருக்குறள் நூலால் பெற வேண்டிய நல்லறிவை நாடு பெறத் தவறியதை இவ்வாறு வரைகின்றார்.

'ஒன்றே குலமாம் ஒருவனே தேவனிவ் வுண்மையினை
அன்றே திருக்குறள் ஆய்ந்துரை செய்த தறிந்திருப்பின்
ஒன்றாச் சமயங்கள் சாதிகள் ஓராயிரங் கொழுத்து
நின்றே உலகை நலிவிக்கும் இந்நிலை நீங்குமன்றே!'

இளம்பூரணர் சைவசமய உணர்வினராதலின் திருவள்ளுவரையே அனைத்துக்கும் ஆதியாம் சிவமாகவே போற்றுவதையும் காண்கிறோம். தொன்மைச் சிவநெறி பொதுமறையாம் குறள் நெறிக்கு இசைவுடையதாக நிலவியிருப்பினும் இடைக்காலத்தில் வைதிகத்தின் ஆதிக்கத் திற்கு ஆட்பட்ட சிவநெறி, மதவெறி நோக்குக்கும் பிறவி சாதி தர்மத்துக்கும் இடம் கொடுத்ததால், திருவள்ளுவரின் உயர்நோக்கும் அறமும், மக்கள் வாழ்வினின்றும் விலகி, ஏட்டளவில் ஒடுங்கலாயிற்று என்பதும் கருதுதற்குரியதாம்.

மேலும் இளம்பூரணர் இயற்றியுள்ள கலம்பகத்தின் பாக்கள் அந்தாதித் தொடையில் இயற்றப்பட்டுள்ளன. அரிய பல கருத்துக்களை வளமான நடையில் இயம்பி யுள்ளதைப் படிப்பவர் உணரலாம். ஒரு வெண்பா இது —

"தேவர் குறள்வடவர் செய்தநூல் பின்பற்றி
மேவியதென் பார்புனையும் வெண்மொழிகள் —ஓவா
மழலைப் பெயரனிடம் வந்தவன்றன் பாட்டன்
மொழிகற்ற தன்றோ முனைந்து"

பிறிதொரு பாடல், "தென்திசையில் அகத்திய முனி தங்கியதால் வடதிசை இமயத்திற்கு ஈடாகிச் சமநிலை பெற்றது என்னும் அக்கதை ஏற்பதற்கில்லை தென் தமிழகத்தில் திருவள்ளுவனார் தோன்றியதால் வடதிசை யன்றி மற்று எத்திசையும் அதற்கு ஈடாகவில்லை என்பதே தெளிந்தோர் கருத்து" என்று விவரித்திடுகின்றது.

மேலும் திருவள்ளுவர் சிறப்பினை உணரத் தலைப் பட்ட இக்காலமே பல்லாற்றானும் சிறந்தது என்பதை ஒரு பாட்டில் இயம்பியுள்ளார். அப்பாடல் —

வாழுமவர் வாழ்வியல்கள் வகுத்துணரும் காலம்,
மயங்கியநல் கருத்தினிலொளி வயங்கிடுநற் காலம்
காழுலவு மனமன்பே கண்டுயருங் காலம்
காதலன்பி லறம்பொருள்கள் கவினிசையுங் காலம்
ஏழிசைகள் தமிழன்னை இறைமைபெறுங் காலம்
எல்லாரு மோர்குலமென் றெண்ணமுறுங் காலம்
ஊழினுயர் திருக்குறணூல் உளந்தழைக்குங் காலம்
ஓங்குதிரு வள்ளுவர்சீர் பாங்குறுமிக் காலம்!

இப்படிப்பட்ட இனிய பாடல்கள் வாயிலாக வள்ளுவர் சீர் பரவும் சிந்தனை பரப்பும் இந்நூல் படிப்பவர்தம் சிந்தையை மகிழ்விப்பது மட்டுமன்றிக் குறள் நெறியை மனங்கொளச் செய்து, வைதிகத்தின் தாக்குறவால் நுழைந்த சாதி மத வேற்றுமைகளைக் களைய வழி

செய்யும்! ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்னும் பொதுநோக்கு வளர்ந்திடவும் ஏதுவாகும்!

இந்த அரிய கவிதை நூல் கவிஞரின் உள்ளக் கிடக்கையைப் புலப்படுத்தும் திறனைப் பாராட்டுவதுடன், இளம்பூரணர் முயற்சிக்கும் என் வாழ்த்துக்களை உரித் தாக்குகிறேன்.

அன்பன்,

(க. அன்பழகன்)

திருவருள்

# முன்னுரை

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்னடி யோங்களுக்கே.

— அப்பரடிகள் தேவாரம் 4ந் திருமுறை

'வள்ளுவர் செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள், உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக்கொரு நீதி' என்று மனோன்மணீயத்தில் அறிஞர் பெருமான் சுந்தரம் பிள்ளை அவர்கள் திருக்குறள் மாட்சிமை பற்றிய தம் கருத்தினை மிக அழகாக மொழிந்திருப்பதைப் பார்க்கிறோம். உலகில் நடைமுறையிலுள்ள மொழிகளில் பல்லாயிரம் கோடி நூல்கள் இருப்பினும், அவை அனைத்தும், மக்கள் இனம் அனைத்தும் பொதுவாக வாழ்க்கையில் பின்பற்றி 'எல்லாரும் ஓரினம் எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஆண்டவன் மக்கள்' என்று மனங்கலந்து வாழ வழிகள் வகுத்துத் தரும் திருக்குறளுக்கு ஒப்பாகும் என்று சொல்லுவதற் கில்லை! மக்கள் நல்வாழ்வுக்கு வேண்டிய இன்றியமையாத கருத்துக்களைச் சொல்லும் திருக்குறளின் முதன்மையைக் கருதி அதனை உலக மாந்தர் அனைவரும் தத்தம் மொழிகளில் அமைத்து அதன் அருமையைக் கற்றறிந்து மகிழ்வதனை நாம் நன்கு அறிந்துள்ளோம்.

திருக்குறளில் அடியேனுக்கு இளமைக் கால முதற் கொண்டே நல்லதோர் ஈடுபாடு உண்டு. அதனால் நூல் முழுவதையும் இளமையிலேயே மனப்பாடம் செய்து

விரும்பிய போதெல்லாம் தெய்வ நூல்களைப்போல ஓதி மகிழும் பேறு வாய்த்தேன். பரிமேலழகர் போன்ற உரையாசிரியர் கருத்துக்களையும் ஒப்பு நோக்கி உணரும் பழக்கமும் எனக்குண்டு.

திருவள்ளுவர்தம் தெய்வச் சிறப்பியல்புகளைச் செய்யுள் வடிவில் படைத்து மகிழ வேண்டும் என்ற எண்ணம் பல ஆண்டுகளுக்கு முன்னரே எனக்கு ஏற்பட்டது. அதன் பயனாக முதன் முதலாகத் **திருக்குறட் செம்மணி மாலை** என்றதொரு நூலினை இயற்றினேன். இது அதிகாரத்துக்கு ஒன்று என்னும் அளவில் 133 பாடல்கள் அமைந்தது. வெண்பா யாப்பில் அமைந்த இந்நூல், மாம்பாக்கம் குருகுலம் திருவள்ளுவர் மடம் திருக்குறள் பீடத்தின் முதற் குரவராக வீற்றிருந்த சிவத்திரு அழகரடிகள் (இளவழகனார்) அவர்களின் அருள் நோக்கம் பெற்றது. நூலாகக் கண்ட பின்னும் பொதுமறை இதழில் வெளியிடப் பெற்றது.

பாட்டுடைத் தலைவர் சிறப்பியல்புகளை, அணி நலன்கள் அமையப் பலவகை சந்தப் பாடல்களில் வெளிப்படுத்துவதற்குக் கலம்பகம் ஒன்றுதான் சிறந்த வழியாகும். தொண்ணூற்றாறு வகையான பிற்காலப் பிரபந்தங்களில் கலம்பகமும் ஒன்றாகும். கலம்பக நூலின் சிறப்புக்களைத் திருவருணைக் கலம்பகம், திருவரங்கக் கலம்பகம் போன்ற நூல்களில் காண இடமுண்டு. எனவே தெய்வப் புலவர் மாட்சிமைகளை ஒரு கலம்பக நூலின் வழி அமைத்து மகிழலாம் என்றதோர் உள்ளத் துடிப்பு எனக்கு ஏற்பட்டது. திருவருளால் ஏற்பட்ட இவ்வுணர்வின் காரணமாக இத் திருவள்ளுவர் கலம்பகம் அடியேனால் இயற்றப் பெற்றது. திருவருளையே பெரிதும் நம்பி யான் தொடங்கிய முயற்சி தங்குதடையின்றித் தொடர்ந்து இனிது நிறைவேறியது.

இவ்வகையில் அடியேனால் படைக்கப்பட்ட கலம்பகப் பாடல்கள் இரண்டு ஆண்டுகட்கு முன்னர் பொள்ளாச்சியிலிருந்து வெளியிடப்பெற்ற 'கதிரவன்' திங்களிதழில் தொடர்ந்து வெளிவரலாயிற்று. கதிரவன் இதழின் சிறப்பாசிரியர் ஆக விளங்கிய தமிழ்ச் செம்மல் கவிஞர் மணிமொழி அவர்கள் என்னுடைய படைப்பில் தமக்கிருந்த ஈடுபாட்டைக் காட்டி மிக்க அன்புடன் தம் இதழில் கலம்பக நூலினை வெளியிட்டது காலத்தில் செய்ததொரு நல்லுதவி யாகும். நேரில் அறிமுகம் இல்லாதிருப்பினும் அன்பர் அவர்கள் என்னிடம் தாம் கொண்ட ஈடுபாட்டினை இந்த வகையில் உதவியதை யான் என்றும் நினைவு கூர்வேன். எல்லாம்வல்ல திருவருள் அவர்களுடைய அனைத்து முயற்சிகளுக்கும் துணை நின்து உதவ வேண்டும் என்று ஆழ்ந்த அன்புடன் நினைக்கின்றேன்.

இதழில் வெளிவந்த பகுதிகளை நிரல்பட அமைத்து அச்சியற்றி நூல் வடிவாக அன்பர் பெருமக்களிடையே உலவ விடவேண்டும் என்று விரும்பினேன். இவ் விருப்பத்தினை என்னிடம் தமிழ் பயின்று, தமிழாசிரியர்களாக விளங்கும் புலவர் திரு. நா. வேணுகோபாலன், எம். ஏ., பி.எட்., புலவர் திரு. சி. வெ. சுந்தரம், எம்.ஏ., பி.எட்., இருவரும் அறிந்தனர். வெளியீட்டு முயற்சியில் இறங்கப் போவதாகச் சொல்லினர். வயது முதிர்ச்சியும் தளர்ச்சியும் உடல்நலக் குறைவும் தொடர்ந்து நலிவு செய்யும் நிலையில் இருக்கும் எனக்கு இம் மாணவர் உறுதியைக் கண்டு நல்லதொரு நம்பிக்கையே ஏற்பட்டது.

புலவர் திரு. நா. வேணுகோபாலன் தொடர்ந்து மேற்கொண்ட முயற்சியால் என்னோடு மொழி நலம் கண்டு

அளவளாவிப் பழகிய செய்யூர் புலவர் திரு. அ. இராசேந்திரன், எம்.ஏ., பி.எட்., கண்டரச்சேரி புலவர் திரு. முத்துவடிவேல், எம்.ஏ., பி.எட்., புலவர் திரு. சோ. தண்டபாணி, பி. லிட். ஆகிய மூவரும் ஒருங்கிணைந்து கலம்பக நூலினை வெளியிடும் பணியில் தம்மை முழு மனத்துடன் ஈடுபடுத்திக் கொண்டனர்.

இக் கலம்பக நூலுடன் என்னால் படைக்கப்பட்டுக் குருகுலத்திலிருந்து வெளியிடப்பெறும் பொதுமறை இதழில் தொடர்ந்து வெளிவந்த **'உள்ளுதற்கினிய திருவள்ளுவம்'** என்ற நூலினையும் சேர்த்து அச்சிடுவது என்ற முயற்சியில் இவ் வன்பர்கள் முழு முயற்சியுடன் இறங்கியுள்ளார்கள்.

நூல் வெளிவருவதானால் அதற்கு நல்லதோர் அணிந்துரை இன்றியமையாதது என்பதை நாம் அறிந்துள்ளோம். இந்த முதன்மையினை உணர்ந்த திரு. நா. வேணுகோபாலன், மயிலம் தமிழ்க்கல்லூரி முதல்வர், செஞ்சொற் புலவர், திருப்புகழ் அமுதனார் எனப் பாராட்டப்பெறும் முனைவர் திரு. சு. திருநாவுக்கரசு அவர்களோடு தொடர்பு கொண்டதன் பயனாகச் செஞ்சொற் புலவர் அவர்கள் இந்நூலுக்கு ஆராய்ச்சி வகையில் அணிந்துரை ஒன்றின் வாயிலாக இப் படைப்புக்களின் பெருமையை நன்கு விளக்கமாக அளித்துள்ளார்கள். ஏற்கனவே அன்பு வகையில் எனக்கு நன்கு தெரிந்தவர் தாம் என்றாலும் அளவுக்கு அதிகமான தம் கல்லூரிப் பணிகளுக்கு இடையில் இந்த அணிந்துரையை மிக்க ஆர்வமுடன் எழுதி அளித்துள்ள முனைவர் அவர்கட்கு என் உள்ளம் நிறைந்த நன்றியினைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். திருப்புகழ் அமுதனார் அவர்களின் எண்ணம் மொழி செயல்கள் யாவும் வெற்றிப்பாதையில்

வீறுநடை கொண்டு செல்லத் திருவருள் துணை செய்யும் என வாழ்த்துகிறேன்.

புலவர் திரு. நா. வேணுகோபாலன் மேற்கொண்ட சிறந்த நூல் வெளியீட்டுப் பணி எவ்வித இடையூறும் இன்றி வெற்றி பெறும் வகையில் என்பால் ஏற்கனவே அறிமுகமான பல மாணவ மணிகளும் பல அறிஞர் பெரு மக்களும் அன்புக் காணிக்கை நன்கொடை போன்ற வழிகளில் பொருளுதவி புரிந்துள்ளார்கள். அவர்களு டைய மெய்யன்பும் நல்லுணர்ச்சியும் என் உள்ளத்தில் அளத்தற்கரிய உருக்கவுணர்வை உண்டாக்குகின்றன. நல்லதொரு செயல் நன்முறையில் வெற்றி பெற வேண் டும் என்று விரும்பும் அவர்கள் எண்ணம் திருவருளால் நிறைவெய்தும் என்ற உறுதி அடியேனுக்கு உண்டு. அவர்கள் அனைவரும் வாழ்வில் பல நலங்களும் தொடர முன்னேற வாழ்த்துகிறேன். இம் முயற்சியில் இடை யறாது ஈடுபடும் திரு. நா. வேணுகோபாலன், திரு. அ. இராசேந்திரன், திரு. முத்துவடிவேல் திரு. சோ. தண் டபாணி முதலானவர்களுக்குத் திருவருள் என்றும் துணைசெய்து வாழ்க்கையில் முன்னேற வழிவகுத்தருள வேண்டும் என்று உளமார வாழ்த்துகிறேன்.

இந்த நூலினை நல்ல முறையில் அச்சிட்டு உதவ நல்லுணர்வும் ஈடுபாடும் கொண்டு செயல்படும் மதுராந் தகம் மணி அச்சக உரிமையாளர் சூனாம்பேடு திரு. பூ. சுப்பிரமணியம் அவர்களின் நல்லுதவி பாராட்டுக்குரியது. திருவருள் அவர்களுடைய நன் முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து உதவ வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

இங்ஙனம் அன்புள்ள,

**கவிஞர் இளம்பூரணன்**

**(சி. து. கன்னிசாமி)**

கண்டரச்சேரி.

குருகுலம் திருக்குறள் பீடம்
சிவத்திரு குருபழநி அடிகள்

## ஆதிபகவன் முதற்றே உலகு.

சிந்தனைச் செம்மல் குருகுலக் கவிஞர் சி. து. கன்னி சாமி (கவிஞர் இளம்பூரணன்) அவர்கள் அண்மையில் படைத்த திருவள்ளுவர் கலம்பகமும், குருகுலத் திங்கள் இதழாகிய 'பொது மறை'யில் தொடர்ந்து வெளிவந்து தமிழறிந்த உள்ளங்களுக்கு உவகை நல்கிய அவர்தம் படைப்பாகிய 'உள்ளுதற்கினிய திருவள்ளுவம்' என்ற நூலும் இணைந்து ஒரு நூலாக அச்சிடப்பெறுவது திருவள்ளுவப் பெருமான் மாட்சிமையுணர்ந்த தமிழறிஞர் உள்ளங்களுக்கு உவப்பூட்டும் செய்தியாகும். கவிஞர் அவர்கள் தெய்வப் புலவர் திருவள்ளுவர்பால் அளவற்ற ஈடுபாடு கொண்டவர் என்பது திருவள்ளுவர்தம் தெய்வத் தன்மையையும் திருக்குறள் மாட்சிமையையும் விளக்கும் அவர்தம் படைப்புக்களால் இனிது பெறப்படும் உண்மையாகும். இதனை அவர்தம் படைப்புக்கள் ஆகிய திருக்குறட் செம்மணி மாலை, திருவள்ளுவர் நூற்றெட்டுப் போற்றித் திருவகவல், அம்மானை, திருத்த சாங்கம் ஆகிய அனைத்தும் இனிது எடுத்தியம்புவதைக் காண்கிறோம். வெளியிடப்படும் கலம்பக நூலில் நம் திருக்குறட் பீடம் திருவள்ளுவர் மடம் இவற்றின் பெருமைகளையும் அவர் மிக்க அன்புடன் குறித்திருப்பது பீடத்தின்பால் ஆசிரியருக்குள்ள தனிப்பட்ட ஈடுபாட்டினைக் காட்டுகிறது. கலம்பகத்துள் இணைந்துள்ள மற்றொரு நூல் குருகுல வெளியீடான பொதுமறை இதழில் தொடர்ந்து வெளிவந்ததாகும். இந்த அரிய படைப்புக்கள் தமிழறிந்த நல் உள்ளங்களில் இடம் பெற்றுத் தெய்வப் புலவர் மாட்சிமையை நன்கு பரப்புவது உறுதியாகும்.

# அணிந்துரையும் ஆய்வுரையும்

செஞ்சொற்புலவர், திருப்புகழ் அமுதனார்,
திருப்புகழ் அரசு, கற்பனைக் களஞ்சியநம்பி,
பேராசிரியர்,
**முனைவர் சு. திருநாவுக்கரசு**, எம்.ஏ., பிஎச்.டி.,
முதல்வர்,
ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி,
மயிலம் - 604 304, விழுப்புரம் மாவட்டம்.

*'யாமறிந்த புலவரிலே கம்ப னைப்போல்*
*வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்*
*பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;*
*உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை'*

என்பது பாட்டுக்
கொரு புலவராம் பாரதியாரின் வாக்கு.

மனித இனம் சாதி, சமயம், இனம், நாடு முதலிய வேற்றுமைகளைக் கடந்து, வையத்துள் வாழ்வாங்கு வாழ வாழும் நெறிகளை வடித்துத் திருக்குறள் என்னும் செந் தமிழ் வேதத்தை அருளியவர் வான்புகழ் வள்ளுவர். அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டினாலொக் கும். குறுகத் தரித்த குறட்பாக்கள் அவர்தம் கூர்த்த மதி யின் வெளிபாடுகளாகும். வினையின் நீங்கி விளங்கிய அறிவினாராம் அவர் தம்மையும் அவரருளிச் செய்த திருக் குறளையும் போற்றாத கவிஞர் இலர்; போற்றாதவர்கள் கவிஞரே இலர். காலங்கள் தோறும் தோன்றிய கவிஞர் கள் வள்ளுவர் தம்மையும், வள்ளுவத்தையும் போற்றிப் புகழ்ந்து நெறிநின்று வாழ்ந்து காட்டியுள்ளனர்; தம்

படைப்புகளில் வரைந்து காட்டியுள்ளனர். தம் படைப்பு களை மெருகேற்றிக் கொண்டுள்ளனர்; காலத்தை வென்று வரலாற்றில் நிலைத்துள்ளனர். இவ்வாறு தோன் றியவை எண்ணற்ற நூல்கள், எண்ணற்ற உரைகள்; எண்ணற்ற திறனாய்வுகள். இன்னும் இன்னும் அத்த கைய துய்ப்புகள் தொடர்ந்து கொண்டேயுள்ளன. அவ் வகையில் இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் இடம் பெறும் ஈடிணையற்ற கவிஞர் மிகச் சிலருள் ஒரு வராகத் திகழ்பவர், மாம்பாக்கம் - திருக்குறட் பீடம். குரு குலக் கவிஞர் சி. து. இளம்பூரணர் அவர்கள். இவர் 'திருவள்ளுவர் கலம்பகம்' என்னும் அற்புதச் சிற்றிலக்கிய நூலினைப் பொற்புற யாத்துத் தமிழன்னையின் பொன் னடிகளுக்குச் சூட்டியுள்ள தவப் புதல்வர் ஆவார். அந் நூலின் நீர்மைகளையும் சீர்மைகளையும் செவ்விதின் உணர்ந்த வகையில், ஒரு சிலவற்றையேனும் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் நோக்கில் அறிவிக்க முயலுவதே இவ்வணிந்துரையின் நோக்கம். எய்ப்பில் வைப்பெனத் திகழும் இத் துய்ப்புநிலை எல்லை கடவாமல் ஆய்வுரையாக மலர்கின்றது. நூலாசிரியரின் புலமையும் பெருமையும் நூலின் அமைப்பும் அழகும், நூற் படு பொருளின் சிறப்பும் செழுமையும் என்னும் முத்திற மாக ஒன்றுக்கொன்று தொடர்புடைய முத்தமிழ் போல இவ்வணிந்துரை அமைகின்றது.

## நூலாசிரியரின் புலமையும் பெருமையும்:-

'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' என்பது ஔவையாரின் அமுத வாக்கு. இதற்கேற்ப இந் நாட்டில் தோன்றிய சான்றோர்கள் பலர். சங்க காலம் முதற்கொண்டு இக்காலம் வரையில் தோன்றிய சிலரைக் குறிப்பிட்டாலும் இந் நாட்டுச் சான்றோர்களின் புலமைத்

திறத்தை அறியலாம். இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், தெய்வப் புலவர் திருவள்ளுவர், கச்சியப்ப சிவாச்சாரியார், தெய்வச் சேக்கிழார், வள்ளுவப் பிரகாசர் என்னும் வான்புகழ் பெற்ற கற்பனைக் களஞ்சியம் சிவப் பிரகாச சுவாமிகள், புகழேந்திப் புலவர், படிக்காசுப் புலவர், அந்தகக்கவி வீரராகவர், அழகரடிகள் வரிசையில் இளம்பூரணரும் ஒருவர். வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு சார்ந்த இவர், இளமை முதற் கொண்டே திருக்குறளை வாசித்தும் நேசித்தும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் பொன்றாப் புகழ் எய்தியவர்.

எண்டிசை போற்றும் தண்டமிழ்ச் சான்றோராம் மறைமலையடிகள், அழகரடிகள் ஆகியோரின் அன்பர வணைப்பில் வளர்ந்தவர்; தனித்தமிழின் விளக்கமெனும் திருக்குறளின் பெருவிளக்கமாகத் திகழ்பவர்; தனித் தமிழ்ப் பற்றின் காரணமாக, கன்னிசாமி என்னும் இயற் பெயர் பெற்ற இவர் இளம்பூரணர் ஆனவர்; பன்மொ ழிப் புலமையும், பன்னூற் பயிற்சியும் உடையவர்; அருள் நிறை நெஞ்சினர்; அறங்கரை நாவினர்; தண்டமிழ் நூல்களாம் இலக்கண இலக்கிய தோத்திர சாத்திரங் களைக் கசடறக் கற்றவர்; கற்றவர்க்குத் தாம் வரம்பா கிய தலைமையர்; கற்றவண்ணம் ஒழுகும் கவினுறு வாழ்வினர்; ஆயிரம் பிறைகண்ட அண்ணலாகிய இவர், தம் பன்னிரண்டாவது அகவையில் படைத்தளித்த கவி தையால், பாரதியாரைப் போலத் தம்மைப் 'பிறவிக் கவி ஞர்' என்று உலகுணரச் செய்தவர். வள்ளலார் தோன் றிய கருணீக மரபினர்; இதுவரையில் இவர் எழுதியவை கவிதை நூல்கள், உரைநடை நூல்கள், ஆய்வு நூல்கள், தெய்வப் பாமாலைகள், கவிதை நாடகங்கள் எனப் பல பிரிவுகளுக்குரியன வாகும். எழுபத்தைந்தாண்டுகளுக்கு முன்னே தோன்றிய 'கருணீக மித்திரன்' முதலாக செந்

தமிழ்ச் செல்வி, பொதுமறை முதலிய தமிழகத்தின் தலை சிறந்த இலக்கிய இதழ்களில் இவர்தம் படைப்புகள் தொடர்ந்து வெளிவந்துள்ளன. வெளிவந்து கொண்டிருக் கின்றன. இன்னும் வெளிவராத படைப்புகள் பல. பல் கலைக் கழகங்களும், வானொலி நிலையங்களும் ஏற்றுப் போற்றிக் கொண்டவை சிற்சில.

பாக்களுள் வெண்பாவும், பிள்ளைத்தமிழில் அம்பு லிப் பருவமும், உலாவில் பெதும்பைப் பருவமும் பாடுதற் கரியனவாகும். புலவர்களின் புலமைத் திறத்தை அளப் பதற்குதவும் அளவுகோல்களாகும் இவை. இவற்றுள் வெண்பா யாப்பில் காரைக்காலம்மையாரின் அருள் வர லாற்றைப் பெரியபுராணப் பொருண்மை மாறாமல் பாடிய வித்தகக் கவிஞர் இவர். வீரசைவ ஞானியர்கள் சிவப்பிரகாசர், சாந்தலிங்கர் போலவும், திறனாய்வாளர் கள், மு. இராகவையங்கார், இரா. இராகவையங்கார் போலவும், திருக்குறள் நெறி பரப்பும் சான்றோர் வரிசை யில் அழகரடிகளும், இளம்பூரணரும் அமைந்துள்ளனர். மலையிலிருந்து இழும் எனும் ஓசையுடன் இடையறாது ஒழுகும் அருவி போலவும், வற்றாத ஆற்றின் நீரோட்டத் தைப் போலவும், இளமை முதற்கொண்டு இடையறாவு படாமல் இவர் உருவாக்கிய படைப்புகள், கவிதை ஊற் றுப் பெருக்கெடுத்து அறிஞர் உள்ளங்களைக் கொள்ளை கொள்வனவாகும். கம்பர் காட்டும் சான்றோர் கவிக்கு, இவர்தம் படைப்புகள் விளக்கமானவையாகும்.

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராகிய இவ்வ ருட் பெரியார், வள்ளுவர்தம் திருவுருவை, உயிராவணம் இருந்து உற்று நோக்கி, உள்ளக் கிழியில் உருவெழுதி, வள்ளுவர்க்கும், வள்ளுவத்திற்கும், உயிர் ஆவணம் செய்து வாழ்ந்து கொண்டிருப்பவர். உணவுக்குச் சுவை

கூட்டும் உப்பைப் போல, வள்ளுவத்தைப் பரப்பும் திருத் தொண்டிலே, தம்மைக் கலந்து கொண்டவர்; கரைத்துக் கொண்டவர்; பயனுள்ளூப்புச் சான்றோர் ஆவார். தமிழ் கூறும் நல்லுலகில் முதன்முதலாகத் திருக்குறளுக்கு ஆதீனத்தை உருவாக்கி, திருக்குறள் பீட முதல்வராகத் திகழ்ந்த அழகரடிகள் நிறுவியருளிய குருகுலத்தின் தனிப் பெருங் கவிஞர். இத்தகைய பெருமைகளுக்குரிய இவர், புலமைநலம் ஓங்குமாறு பாடிய 'திருவள்ளுவர் கலம்பகம்' பற்றி ஒரு சில காண்போம்.

## நூலின் அமைப்பும் அழகும்:

**'திருவள்ளுவர் கலம்பகம்'** எனப் பெயரிய இந் நன்னூல் சிற்றிலக்கிய வகையைச் சார்ந்தது. பல்வகை மலர்களும் பாங்குறத் தொடுக்கப்பெற்ற தொடையலுக்குக் 'கலம்பகம்' என்னும் பெயர் பண்டைக் காலத்து வழங்கப் பெற்றது. இதற்குச் சான்றாக 'களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த அலங்கலந் தொடையல்' (திவ்வியப் பிரபந்தம் - தொண்டரடிப்பொடி யாழ்வார் - திருப்பள்ளியெழுச்சி - 5) என்னும் பாடல் தொடரையும், பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப்படைக்கு உரை வரைந்த உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் 'பல பூக்கள் கலந்து நெருங்கிய கலம்பகமாகிய மாலை' என்றெழுதிய உரைக் குறிப்பினையும் (பெரும் பாண். 174 - நச்சர் உரை) குறிப்பிடுவார் ஆராய்ச்சிப் பேரறிஞர் உ. வே. சா. அவர்கள்.

பாக்களும் பாவினங்களும் விரவியுள்ளதாலும், அகப் பொருள், புறப்பொருட் கூறுகள் கலந்துள்ளமையாலும் 'கலம்பகம்' என்னும் பெயர் இத்தகைய சிற்றிலக்கியங் களுக்குச் சாலப் பொருந்துவதாகும்.

இத்தகைய இலக்கிய அமைப்பினைத் தேர்ந்து, திருவள்ளுவர், திருக்குறட் பெருமைகள் பளிச்செனத் தோன்றிப் பயில்வோர் நெஞ்சில் பதியுமாறு பாக்களைப் படைத்துள்ளார் கவிஞர் அவர்கள். எத்தகைய பாக்களையும் பாவினங்களையும் அவ்வவற்றுக்குரிய இலக்கணமும் இன்னோசையும் பொதுளவும், சொற்சுவையும் பொருட்சுவையும் தோய்தரவும் எளிதில் பாடும் **'கவிதைக் கலைக்குரிசில்'** இவர். என்பதனை இந்நூல் வனப்புற விளக்குகிறது.

இந்நூல் பாயிரம், நூல், வாழ்த்து என்னும் முப்பிரிவுகளில் 106 பாடல்களைப் பெற்றுள்ளது.

முதற்கண் பாயிரம் தெய்வ வணக்கம், அவையடக்கம், காணிக்கை என்னும் முப்பொருள்களில் (1,3,1) ஐந்து பாடல்களைக் கொண்டுள்ளது. நூலானது, உலகு என்னும் மங்கலச் சொல்லோடு தொடங்கி, அந்தாதி யாப்பில் நடந்து, உலகு என்னும் சொல்லோடு நிறைவுறுமாறு நூறு பாடல்களைக் கொண்டுள்ளது. வாழ்த்துப் பொருண்மையில் ஒரு பாடல், நூலின் இறுதியில் உள்ளது.

பாக்களுள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பாவும், பாவினங்களுள் ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலி விருத்தமும், வஞ்சித்துறையும் ஆசிரியத் தாழிசையும் இடம் பெற்றுள்ளன.

இந்நூல், மறம், களிமகன், இடைச்சியார், தூது, ஊசல், தழை, குறம், புயவகுப்பு, காலம், சம்பிரதம், தவம், அம்மானை, ஊர், பாணாற்றுப்படை முதலிய உறுப்புகள் அமையப் பாடப்பெற்றுள்ளது. கவிதையின் உடலெனப் போற்றத்தகும் வடிவ அமைப்பும், உள்ளம் எனக் கருதப்

பெறும் பொருளடக்கமும் சிறப்பாக அமைந்த நிலையில் சோதிமிக்க நவ கவிதைகளாக ஒவ்வொன்றும் விளங்கு கின்றன.

### பாடுபொருளின் சிறப்பும் செழுமையும்:

இந்நூல், திருவள்ளுவர் பெருமை, திருக்குறட் பெருமை, திருக்குறட் பாக்கள் சிலவற்றுக்கு விளக்கங்கள், உவமை நலன்கள், உருவக அணிகள், சொல்லாட்சிகள், நூலாசிரியரின் பண்புகள், அவர்தம் விழைவுகள், முதலாகப் பன்முக நோக்கில் ஆய்வு செய்த வகையில், வேண்டியவற்றை வேண்டியவாறே வழங்கும் கற்பகச் சுரங்கமாகவும், தெள்ளூற்ற தமிழமுதை வற்றாமல் வாரியென வாரி வழங்கும் அமுதசுரபியாகவும் விளங்குவதை உணரமுடிகின்றது. அச் சிந்தனைகளை முற்ற எடுத்துரைக்கின் மிக விரியும் ஆகலான், பயில்வோர்க்கு ஈடுபாடு தோன்றுவான் வேண்டிச் சுருக்கக் குறிப்பில் சிற்சிலவற்றை மட்டும் காணுதல் தகும். குறிப்புகளைச் சார்ந்து வரும் எண்கள், பாட்டுக்குரிய எண்களாகும்.

### திருவள்ளுவர் பெருமை - சில குறிப்புகள்:

நான்முகன், திருமால், உருத்திரன் என்னும் மூவர்க்கும் முதல்வனாகிய ஆதியே திருவள்ளுவர் (67).

திருவள்ளுவர் 'சிவமே' (16); உண்மை, அறிவு, இன்ப வடிவினர் (17); திருநீறும் சந்தனமும் மணக்கும் திருப்புயத்தினர் (60); சிவனே, வள்ளுவராகத் தோன்றித் திருக்குறளைப் படைத்தார் (84); கொள்ள வேண்டுவன, தள்ள வேண்டுவன கொளுத்திய ஞானச்சுடர் (7); இறைவனைப் போலவே தான் அறிந்ததைப் பிறருக்கு அறிவுறுத்தும் பெற்றியர் (69); நினைப்பவர் மனம் கோயிலாகக் கொள்ளும் நிமலனைப் போலவே, திருக்குறள்

தொண்டர்தம் சிந்தையைக் கோயிலாகக் கொண்டவர் (85); திருவள்ளுவர் நின்றவூர் மதுரையோ, மயிலாப் பூரோ, கயிலாயமோ, பாற்கடலோ, அமராவதியோ யாதா யினும் ஆகுக; ஆனால் அவர் இருப்பிடம் அன்பர் இத யமே (48); இல்லறத்தின் ஏற்றமும் பயனும் அறிய, வாசுகியாரை மணந்து வாழ்ந்து காட்டியவர் (52); இப் பாடலை எண்ணும்போது, சிவபிரான் புவன வாழ்க்கைச் செயல்வண்ணம் நிலைநிறுத்த, மலைமகளை மணந்த தாகச் சொல்லப்பெறும் கலிங்கத்துப்பரணிப் பாடல் நினை வுக்கு வருகிறது. இது, சிவனே திருவள்ளுவர் எனத் துதிக்கும் கவிஞர் சிந்தனைக்கு முழுமை தருகின்றது. கவிஞர் அவர்கள், சமயக் கணக்கர் மதிவழி கூறாது, 'உலகியல் கூறிப் பொருள் இது' என்ற வள்ளுவரை, 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனார் தாம் வருகுவர்' என்னும் மெய்ப் பொருள் நூற்கருத்துக்கு ஒப்ப, ஆதிபகவன் என்னும் பண்ணவனாகப் போற்றுகின்றார் (தெய்வ வணக்கம்). சமயவெறி சாராத சமயப் பற்று ஒவ்வொருக்கும் வேண் டப்படுவதேயாகும்.

வடதிசை, தென்திசை சமநிலையுற்றதற்குக் கூறும் புராணக் கதையை விடுத்து, வள்ளுவர் தமிழ்நாட்டில் தோன்றியதால், நாற்றிசை நாடுகளும் பயன் கொண்டன என்றும், அதனால் தமிழ்நிலம் 'இமயம் போன்று உயர்ந்து விளங்குகிறது' என்றும் குறிப்பிடுவது, மிகச் சிறந்த கருத்தாகும். இச் சிந்தனை,

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'

என்னும் பாரதியார் பாட்டினை

உறுதிப்படுத்துவதாகும்.

**திருக்குறட் பெருமைகளுள் சில குறிப்புகள்:**

கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள், தாம் அருளிய திருவெங்கைக் கலம்பகத்தில் திருவள்ளுவரை 'என்னடிகள்' என்றும், திருக்குறட்பாவின் அடியமைப் பினை ஒக்கும் உமையொரு பாகனின் திருவடி என்றும் பொருள் அமையப் பாடியுள்ளார். 'உவமையென்பது உயர்ந்ததன் மேற்றே' என்னும் இலக்கண நெறிப்படி நோக்கும் போது, உமையொரு பாகனின் திருவடிக்குத் திருக்குறட்பாவின் அடியமைப்பை உவமைப் படுத்தி யமை, சிவப்பிரகாசர் உள்ளத்தில் திருக்குறள் பெற்றுள்ள உயர்வைப் புலப்படுத்துகிறது. மேலும் திருவள்ளுவரை 'என்னடிகள்' என்று துதித் திருப்பதும், அவ்வாறே எண் ணத் தகுவதாகும். இலக்கிய நெடும்பரப்பில், திருக் குறளைப் பற்பலர், பலவாறாகப் போற்றியிருப்பதைக் காண்கிறோம் ஆனால் சிவப்பிரகாசர் கருத்தினைப்போல எவர் சிந்தனையும் இல்லை என்பதே உண்மையுரை யாகும். அதனால்தான் 'வள்ளுவப்பிரகாசர்' என்று அவர் அனைவராலும் போற்றப்பெறுகிறார்.

*'என்னடிகள் வெண்குறள்நேர் அடியிரண்டும்*
*என்தலையில் இருத்தும் இறை'*

- என்பது சிவப்பிரகாசர் செந்தமிழ்.

இக்கருத்தினை அடியொற்றியே, இந்நூலாசிரியர்

*'அடியொடு முடியவ னறிவரு மொருமுதல்*
*அடியிணை யிவையென அலர்தரு குறளினை' (1)*

என்று பாடியுள்ளார். இது முன்னோர் மொழியை, மொழி பொரு ளைப் பொன்னே போல் போற்றும் அவர்தம் புலமைப் பாங்கினை உணர்த்துவதாகும்.

அடுத்து, வேதத்தையும் திருக்குறளையும் ஒப்பிட்டு, வேதத்தினும் திருக்குறள் உயர்ந்தது என்பதை 31, 42

ஆகிய இருபாடல்களில் புலப்படுத்துகிறார். நூலாசிரிய ரின் இச்சிந்தனைகள், சிவப்பிரகாசர் தாம் பாடிய நால்வர் நான்மணிமாலையுள் வேதம், திருவாசகம் ஆகியவற்றை ஒப்பிட்டுக் காட்டிய திறத்தையே எதிரொலிப்பதாக அமைகின்றன.

தனக்குவமை இல்லாதான் தாள் தொழுதலே, மனக்கவலை மாற வழி என்பார் வள்ளுவர். ஆனால் இந் நூலாசிரியர் 'உள்ளத்து நோய் தீர உதவுவது திருக்குறளே' என்றுரைப்பது (20, 26) திருக்குறள்பால் இவர் கொண்ட ஈடுபாட்டினையும், அனுபவத்தையும் நமக்குப் புலப்படுத்துகிறது.

திருக்குறள் பொருட்பால் செய்திகள், மன்னர்க்கு மட்டுமன்றி, ஒவ்வொரு மனிதனுக்கும் தேவை (56).

மேலும் திருக்குறள் உரைச்சிறப்புகள் (61) மூல நூலுக்கிணையான பரிமேலழகரின் உரையைப் போற்றுதல் (97) துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் தருவது திருக்குறள் (62) திருக்குறளின் பல்வேறு பெயர்கள் (89) ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன. திருக்குறள் வடவர் நூலின் (அர்த்தசாஸ்திரம், மனுஸ்மிருதி முதலானவை) மொழிபெயர்ப்பு என்பார்தம் கூற்றைத் தக்க உவமைகளைக் காட்டி மறுக்குந் திறம் (64) திருக்குறட் பீடத்தையும் அங்கிருந்து வெளிவரும் 'பொதுமறை' இதழையும் போற்றுதல் (91, 92) திருக்குறள் தொண்டர் சீர் பரவுதல் (71) தலைவன் தலைவிபால் கூறும் கூற்றாக அமைந்த பாடலில், தமிழக அரசு அமைத்துள்ள வள்ளுவர் கோட்டத்தையும், அழகரடிகள் அமைத்துள்ள திருக்குறட் பீடத்தையும் குறிப்பிட்டுள்ள பாங்கு, புதுமையானதாகவும், பொருத்தமானதாகவும் விளங்குதல் (95) மால்

ஈரடியால் உலகளந்தது நூலளவையால் அறியலாகும் என்றும், ஆனால் திருக்குறள் தன் ஈரடியால் உலகளந்தது காட்சியளவையால் அறியலாகும் என்றும் கூறுதல் (10) 'கடவுள் இல்லை; யாவும் இயற்கையே, எனப் பேசும் கடவுள் மறுப்பாளரும் திருவள்ளுவரையும் திருக்குறளையும் போற்றுகிறார்கள் எனில், பெருமை சொல்லற் பாலதோ? எனல் (82) முதலான பகுதிகள் கற்போர்க்குக் களிபேருவகை நல்குவனவாகும்.

**ஓசைநலம்:-** 'ஊசல் எனும்படி' எனத் தொடங்கும் 47-ஆவது பாடல், 'ஆழநெடுந்திரை' எனத் தொடங்கும் கம்பனின் கவியோசையை நன்கு எதிரொலிக்கிறது; இன்பம் சேர்க்கிறது. 'தேனுலாவு' (93) எனத் தொடங்கும் தாழிசைப் பாடலில் பாட்டின் பொருளும், இசையும் ஒன்றையொன்று முந்தும் நிலையில் அருமையாக அமைந்துள்ளன. 11, 16, 27, 30, 78 முதலான பாடல்களும் அவ்வாறே. தற்காலச் சமுதாய நிலையின் பின்னடைவுத் தன்மையைக் கூறி (96), அணுகுண்டால் ஏற்படும் அழிவுகளை எடுத்துரைத்து, இக்காலத்தே திருக்குறள் நெறியைப் போற்றுதல் இன்றியமையாத தேவை என்பதனையும், இத்தேவை அவசியமும் அவசரமும் உடையது என்பதனையும் பயில்வோர் உள்ளங்கொள்ளுமாறு நூலாசிரியர் எடுத்துரைத்துள்ளார்.

நுனிக்கொம்பர், காமம், அறத்தாற்றில் எனத் தொடங்கும் திருக்குறட் பாக்களுக்கு விளக்கமாக 35, 44, 80 எண்ணுள்ள பாடல்கள் விளங்குகின்றன.

5, 28, 34, 57, 58, 72 முதலான பாடல்களில் உவமை நலன்கள் மிக்கு விளங்குகின்றன. 46, 99 ஆகிய இருபாடல்களில் உருவக அணிகள் இடம்பெற்

றுள்ளன. 46-ஆவது பாடலில் ஆடவர்க்குரிய நாற் பெரும் பண்புகளாக அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி ஆகியவை குறிப்பிடப் பெற்றுள்ளமை அரிய செய்தி யாகும். இறையனார் அகப்பொருள் நூலுக்கு நக்கீரர் வரைந்துள்ள உரையில் இடம்பெறும் இக்கருத்துகளுக்குத் தாம் படைத்துள்ள இந்நூலில் வாழ்வு கொடுத்துள்ளார் நம் கவிஞர். 91, 95 பாடல்களில் தம் ஊராகிய மதுராந்த கத்தின் இயற்கை வளம் உரைக்கப் பெற்றுள்ளமை, இயல்பு நவிற்சியாக அமைந்துள்ளன.

சிறந்த சொல்லாட்சியாக திருமொழி (1) ஒருமொழி (1) ஆகியவற்றைக் குறிக்கலாம் வள்ளலார் ஆளுடைய அடிகளைப் போற்றிய அருண்மாலையில் 'ஒருமொழி' என்னும் சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதை இதனோடு ஒப்பு நோக்கி மகிழலாம். முப்பால் என்பதற்கேற்ப 'அயில்வோமே' என்று பாடியிருத்தல் (40) பொருத்தமா னதாகும். குறத்தியின் வாய்மொழியாகப் 'பழஞ்சீலை' (59) என்னும் சொல்லாட்சி, பேச்சுவழக்கின் செல் வாக்கை நிலை நிறுத்துகிறது

சிலம்பி யொன்றற்கு அருள்புரிந்த கண்ணுதற் பெரு மானைப் போல, தம்திருவடிக்குச் சூட்டும் இப்பாமாலை யைத் திருவள்ளுவர் ஏற்றுத் தாக்கு அருள் செய்வார் என்று கவிஞர் உறுதியுரைப்பது, அவர்தம் எண்ணத்தின் திண்மையைக் காட்டுகிறது. அவைக்கு அடங்குவதை யும் தாம் புலமை பெற்றவாற்றை நினைவுறுத்தி அவை யையடக்குவதையும் பாயிரத்தில் இடம்பெறும் 3, 4 ஆம் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

பண்டைக் காலச் சான்றோர்களைப்போல 'உலக' நினைவில் தொடங்கி, வள்ளுவர் வழியில் உலகம், திருக் குறளைப் பல்லாற்றானும் பயன்கொள்வதை நினைவு

கூர்ந்து, நூற்பகுதியை நிறைவுறுத்தி, வாழ்த்திசைத்து 'ஒளிபடைத்த உலக'த்தைக் காணச் செய்துள்ள திறம் மிகவும் போற்றற்குரியதாகும்.

நீரின் தன்மை, அதன் ஒவ்வொரு துளியிலும் புலப் படுமாறு போல, இந்நூலிலுள்ள பாடல்கள், பாடலடிகள், சீர்கள் சொற்கள் ஒவ்வொன்றிலும் திருவள்ளுவர் பெரு மையையும் அவர்தம் படைப்பாம் திருக்குறளின் நோக்கத் தையும் பயனையும் நன்கு உணர முடிகிறது. சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாது அடுக்கிப் புந்தி மகிழ் அற் புத அணித்தாய், முந்தையோர் செய்யுள்போல் இச்செய் யுள்கள் யாவும் விளங்குகின்றன.

'நன்றியால் உலகம் வாழ்கிறது' என்னும் நயப் பாட்டில், இந்நூலினை 'அழகரடிகள்' அடியாலர்க்குக் காணிக்கை யாக்கியிருப்பது மிகமிகப் பொருத்தமான தாகும்.

திருவள்ளுவர் கலம்பக நூல் மாட்சிமையை இது காறும் ஆய்ந்து அதன் சிறப்பியல்புகளை உள்ளவாறு தெரிவித்து மகிழ்ந்ததாக எண்ணுகிறேன். அந்த மகிழ்ச் சிக்கு மேலும் சுவையூட்டும் வகையில் இக்கலம்பகப் படைப்பில் நாம் கண்ட கருத்துக்களுக்கு மேலும் வலு ஊட்டும் வகையில் கலம்பகத்தின் பிற்சேர்க்கையாக அமைக்கப்பட்ட **'உள்ளுதற்கினிய திருவள்ளுவம்'** என் னும் நூலின் சிறந்த அமைப்பினைப் பற்றிச் சில கருத்துக் களை இங்குக் கூறுவது பொருத்தமாகும். திருவள்ளு வப் பெருமானுடைய ஒப்புயர்வில்லாத திருக்குறளின் பெருமையை உள்ளபடி அறியாதாருக்கு, அதன் பெரு மையை நுனித்தறிந்து விளக்கி உள்ளத்தின் மயக்கத்தை முற்றும் அகற்றி நூலினை ஆழ்ந்து பயிலுவதற்கு வழி

காட்டும் நல்லாசிரியர் நிலையில் இந்த நூல் விளக்கு கிறது. கட்டளைக் கலித்துறையில் அமைந்த பாடல்கள் ஒவ்வொன்றுக்கும் சிறந்த விளக்கங்களும், மேற்கோள் களும் நூலாசிரியரே தந்திருப்பது மிகவும் சிறப்பாக இருக் கிறது. உண்மையிலேயே இந்நூலைப் படிப்பவர் இது காறும் திருக்குறளைப் பற்றித் தாம் கண்டிராத பல உண் மைகளைக் கண்டு மகிழ்வார்கள் என்பதில் ஐயமில்லை. திருக்குறளைத் தம் நூல்களில் அமைத்தும் அதன் கருத் துக்களைத் தம்பாடல்களில் புகுத்தியும் தம் நூல்களுக்குப் பெருமை தேடிய நல்லறிஞர்கள் நம் சங்ககாலம் முதற் கொண்டு இந்நாள் வரையும் காணப்படும் பெருமையெல் லாம் இந்நூலிற் காண முடிகிறது. எம். ஆரியல் [M. Ariel] வின்சென்டு சுமித் [Vincent Smith] போன்ற மேலை நாட்டுப் பெருமக்கள் திருக்குறளின் பெருமைகளில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்த சிறப்புக்களையெல்லாம் இந் நூலால் அறிந்து மகிழ்கிறோம். குருகுலம் திருக்குறட் பீடத்தின் முதற் குரவராக இருந்து அருளுரை பகர்ந்த சிவநெறி செஞ்சொற்கொண்டல் சைவசித்தாந்தச் செழு ஞாயிறு சிவத்திரு அழகரடிகள் குறித்தும் (கலம்பகத்தில் 91,92 பாடல்களைப் பார்க்க) திருக்குறளைக் குறித்தும் புகழ்ந்த கருத்தினையும் இந்நூல் குறிப்பிடத் தவற வில்லை. அறிஞர்கள் தொடர்ந்து வற்புறுத்தியும் திருக் குறள் அரசு நூலாக இன்னும் ஆக்கப்படாததை இந்நூல் காட்டுகிறது. உயர்நிலை மேனிலைப் பள்ளிகளில் தமிழ் ஆங்கிலம் வரலாறு எனப் பாடங்கள் அமைக்கப்பட்டு மதிப்பீடு பெறுவதைப் போலத் திருக்குறளும் தனியொரு பாடமாக (Subject) அமைக்கப்பட வேண்டும் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளது சிந்திப்பதற்குரியதாகும். இந்த நூலின் சிறப்புக்களை மேலும் விவரித்துக் கொண்டே போகலாம். நூலின் சிறப்பியல்புகளை இங்குக் கூறிய சில கருத்துக்களின் அடிப்படையில்

யாவரும் கற்றுப் பயன்பெறவேண்டும். அதுவே நம் விருப்பமாகும் என்று கூறுவதோடு, இவ் ஆய்வுரையை இத்துடன் முடிக்கிறேன்.

வாழ்க திருவள்ளுவப்பிரான் சேவடிமாட்சி!

**இவ்வணிந்துரையின் நிறைவாகச் சில (கருத்துகள்) விழைவுகள்:**

மனம், மொழி, மெய் யென்னும் முக்கரணத் தூய்மையுற்ற நம் கவிஞர் பிரான் நலம்பல பெற்று நீடுவாழ வேண்டும். இவர்தம் படைப்புகள் யாவும், விரைவில் அச்சிடப் பெறுதல் வேண்டும். இவர்தம் சிந்தனைகளை மேன்மேலும் நாடும், ஏடும் போற்றிப் பயன் கொள்ள வேண்டும். இலக்கிய அமைப்புகளும், ஆய்வு மையங்களும், ஆர்வலர்களும் இவர்தம்மைப் போற்றிப் பாராட்டி பயன்கொள்ளுதல் வேண்டும். செறுத்த செய்யுள் செய் செந்நாப் புலவராகிய இவர்தமக்கு, தமிழக அரசு **'திருவள்ளுவர் விருது'** வழங்கிப் பெருமைப் படுத்தவும், பெருமை கொள்ளவும் வேண்டும். வயது மூப்பினர், தொண்டிற்கு உரியவர் என்னும் இருபெருந் தகுதி படைத்த **'தொண்டு கிழவர்'** ஆகிய இவர்தமக்கு வேண்டிய வளங்களையும், நலங்களையும் தந்து தமிழுலகம் பெருமை கொள்ளவேண்டும். **'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்'** என்னும் நன்னெறியைச் சார்ந்து, உள்ளத்தினிலும் வாக்கினிலும் உண்மையொளியைத் தாங்கி, 'நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற்கு உழைத்தல், இமைப் பொழுதும் சோராதிருத்தல் என்னும் கடைப்பிடியோடு, சமுதாய முன்னேற்றத்திற்குத் தொண்டு செய்யும் கவியோகியாகிய இவர் எண்ணியதெல்லாம் எண்ணியவாறு எய்தும் வண்ணம் அருள் புரிய வேண்டுமென்று' எல்லாம் வல்ல

மயிலந் தண்மாமலை, வள்ளி தெய்வயானை உடனுறை மணக்கோல முருகப் பெருமானின் திருவருளையும், எங்கள் ஆதீன குரு முதல்வர் ஸ்ரீபாலசித்தர், ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகளின் குருவருளையும் முக்கரணத் தூய்மையுடன் நினைந்து, வாழ்த்தி, வழிபடுகின்றேன். கவிஞர் தம்மையும், அவர்தம் படைப்புகளையும் நெஞ்சார வாழ்த்துகின்றேன்.



உ
திருவருள்

# பாராட்டுப் பாடல்கள்

## ஆர்கொலோ சதுரர்!

சைவ சித்தாந்தப் புலவர்.
திரு. மா. அமிர்தலிங்கம் அவர்கள், காஞ்சீபுரம்.

1. உலகு புகழ் திருக்குறளின் விளக்கம் என்றே
ஓங்கிவளர் குருகுலத்தின் கவிஞர் கோமான்
நிலவும் இளம் பூரணராய்த் திகழும் செம்மல்
நீடுதமிழ் பீடுபெறப் பாடும் அண்ணல்
குலவுபெரும் புலமையினில் சிமயம் ஆகக்
கொண்டல்எனப் பொழிந்ததமிழ்க் கடலே ஆகப்
புலவருக்குள் புலவரென விளங்கும் அன்னார்
புகழ் அனைத்தும் தமிழ்ப் புகழாய்ப்
பொலிவ தாமால்.

2. சொல்லுகின்ற சொற்களெலாம் கவிதை யாகும்
தொகுத்திருந்தால் காவியங்கள் பலவே ஆகும்
மல்லல்நெடுந் தமிழென்று சேக்கி ழாரும்
மகிழ்ந்துரைத்த மொழிக்கினிய சான்றே ஆகப்
பல்வகையாம் பாவகையும் துறையும் தோன்றப்
பரிந்துரைக்கும் நூல்பலவும் நோக்கும் போது
வெல்லுகின்ற சொல்லினுக்கோர் செல்வர் ஆகும்
மீனாட்சி சுந்தரனார் நினைவே தோன்றும்.

3. "மொழியரசி" புகழ்வளர்த்த முதன்மை சான்ற
மூத்த தமிழ்ப் பெருங்கவிஞர் அன்பால் இந்நாள்
தொழுதுலகு போற்றுதிரு வள்ளு வர்க்கோர்
சுவைகலந்த 'கலம்பகத்தை' உவந்த ளித்தார்

பழகுதமிழ்ச் சொல்லருமை தேர்ந்த பண்பின்
பாங்குடைய மாணவர்கள் பரிந்து கூடி
விழ்வியநற் கவிஞரவர் நூல்கள் தம்மை
வெளியிடும் ஓர் அமைப்பதனை உவந்து கண்டார்.

4. உள்ளுவதற் கினியதிரு வள்ளு வத்தின்
உயர்வனைத்தும் பலநோக்கில் எடுத்து ரைக்கும்
தெள்ளுதமிழ்க் கணிகலனாய்த் திகழு கின்ற
திருக்குறளின் புகழ்விளக்கைத் தமிழ றிந்தார்
உள்ளமெலாம் தித்திக்கும் புதுவி ருந்தை
உலகறியச் செய்வதுநம் கடமை என்னும்
கொள்கையினால் அச்சியற்றும் பணிமேற் கொண்டார்
குருவருளைப் பெறுகின்றார் பெருமை கொண்டார்.

5. சிந்தனைக்கோர் செம்மலெனத் திகழு கின்ற
சிறுநல்லூர் தந்தகுரு குலக்க விஞர்
செந்தமிழ்க்கு வளம்பெருக்கும் நூல்கள் தந்தார்
சேயனையார் வெளியிடும்ஓர் அமைப்பும் கண்டார்
முந்துதமிழ் தந்தவரோ பொதுமை ஆக்க
முனைந்தவரோ ஆர்கொலோ சதுரர் என்றே
சிந்தைகளி கூர்ந்(து) அவரைப் போற்று கின்றேன்
செந்தமிழ்த்தாய் திருவருளால் வாழ்க வாழ்க!

---

o 'மொழியரசி' அரை நூற்றாண்டுக்கு முன்னர் வெளிவந்த தமிழ்த்தாய் வாழ்த்துத் தொகுப்பு நூல்.



புலவர் திரு. முத்துவடிவேல் அவர்கள், கண்டரச்சேரி.
(கவிஞர் சி. து. க. அவர்களின் மாணாக்கர்.)

*****

1. அன்னமிடும் சத்திரங்கள் அளவில் லாமல்
அமைத்தவற்றை நடத்தலினும் சிறந்த செய்கை
எந்நாளும் இறையுணர்வைப் பரப்பும் கோயில்
எண்ணிறந்த இயற்றலினும் சிறந்த செய்கை
இந்நாட்டின் ஏழையர்க்குக் கல்விச் செல்வம்
ஈந்துவைத்தல் ஆகுமென இயம்பி வாழ்ந்த
தந்நேரில் பாரதியார் வழியெம் ஆசான்
சார்ந்திட்ட எமக்கெல்லாம் கல்வி தந்தார்.

2. இறவாத புகழ்சான்றார் எங்கள் ஆசான்
எத்தனையோ புலவர்தமை உருவாக் கிட்டார்
மறவாத மாணவர்கள் ஒன்று சேர்ந்தோம்
மற்றிவரைப் புகழ்வதல்லால் வேறென்
செய்வோம்!
துறவியென வாழ்கின்றார் 'சி.து. க.'வும்
தூயரின்று படைத்திட்டார் கலம்ப கப்பா
அறமுரைத்த வள்ளுவர்போல் வாழ்நாள் காறும்
அழியாத இலக்கியங்கள் படைத்து வாழ்வார்.

3. வள்ளலென கல்விதனை ஏழை யர்க்கே
வாரியென வழங்கிட்டார் சி.து. க.வும்
உள்ளுதொறும் சுவைபெருகி உணர்வில் ஓங்கும்
ஒண்படைப்பாம் கலம்பகநூல் உலகுக் கீந்தார்
தெள்ளமுதத் தமிழணையார் கவிதை யெல்லாம்
தேனினிமைச் சுவையுடனே எளிமை சேர்ந்து
வெள்ளமென மக்கள்உளம் விரும்பிக் கற்கும்
விருப்புயரக் கலம்பகநூல் விளங்கக் கண்டோம்!

4. மொழியரசி எனும்நூலில் தமிழ்த்தாய் ஊசல்
   மூதறிவு காட்டுமதைச் சுவைத்துப் பாரீர்!
அழியாத புகழ்க்காந்தி மறைந்த அந்நாள்
   அவரிசைத்த பாடல்களின் அருமை காண்பீர்!
பழியற்ற காரைக்கா லம்மை வெண்பா
   பயின்றார்தம் உளம்நெகிழ்க்கும்; கலம்ப கத்தை
அழகுதமிழ் நடையினிலே ஆக்கித் தந்தார்
   அழியாத புகழுடையார் எங்கள் ஆசான்.

5. பண்பட்ட தமிழ்நிலத்தின் வேத மென்று
   பார்புகழும் திருக்குறள்நூல் படைத்துத் தந்த
மண்பட்ட புகழ்த்தெய்வ வள்ளு வன்சீர்
   மறவாத காதலுளார் எங்கள் ஆசான்
கண்பட்ட இடமெல்லாம் கருப்பஞ் சாறாய்க்
   கனிந்தினிக்கும் கலம்பகநூல் கருதித் தந்தார்
விண்பட்ட புகழுடனே வாழ்க வென்று
   வேண்டுகிறோம் இறையருளை! விளங்கி
                                    வாழ்க!



புலவர் திரு. நா. வேணுகோபாலன் அவர்கள், சித்திரவாடி.
(கவிஞர் சி. து. க அவர்களின் மாணாக்கர்.)
*****

1 சிந்தனைச் செம்மல் எம்மாசான்
செந்தமிழ்க் கடலின் பதம்போற்றி,
நந்தமிழ் இலக்கண இலக்கியங்கள்
நன்கனம் பயின்ற மாணவரேம்
எந்தமிழ்க் குருவின் படைப்பெல்லாம்
இந்நாள் அச்சில் வெளிக்கொணர்வான்
பைந்தமிழ் மாணவர் அமைப்பொன்றைப்
பாங்குடன் அமைத்துப் பணிசெய்வோம்.

2. "உரைசால் கவிதைக் கலைக்குரிசில்
ஒண்டமிழ்க் கவிக்கோர் 'சி.து க.'
உரைப்பின் இவர்போல் தமிழ்க்கவிஞர்
உண்டோ இன்றெ"னச் சான்றளித்தார்
உரையின் திறம்பாச் சான்றோராம்
ஒண்டமிழ்ச் சீலர் அழகரவர்
திரைசூழ் வையம் கரையேறத்
திருவள் ளுவர்க்கோர் மடங்கண்டார்.

3. பிறவிக் கவியெம் சி.து.க.
பிறந்து மொழிபயில் நாள்முதலா
இறவாப் புகழ்நூல் பலயாத்தார்
என்றும் தமிழ்க்கே வளம்சேர்த்தார்.
அறநூல் வள்ளுவம் கற்றோர்ந்தே
அமிழ்தின் பிழிவாய்ப் பலநூல்கள்
சிறந்தே வையம் போற்றிடவே
செய்தார் மானிடம் உய்ந்திடவே.

4. தமிழால் வாழ்ந்தார் பலராவார்
தமிழ்க்கே வாழ்ந்தார் இவராவார்.
இமையா நாட்டம் கொண்டென்றும்
இன்றமிழ்க் கடலைக் கடைந்திட்டார்
அமிழ்தாய்ப் பருகிக் குறட்கருத்தை
அருட்கவி மழையாய்ப் பொழிந்திட்டார்.
இமிழ்நீர் வைப்பின் மக்களெலாம்
இன்புற் றினிதே வாழ்ந்திடவே.

5. செந்தமிழ்ப் பாவின் யாப்பெல்லாம்
சீர்பெறத் திரட்டி எம்மாசான்
சந்தம் தோயக் **'கலம்பகநூல்'**
சாற்றி மகிழ்ந்தார் வள்ளுவர்க்கு.
பைந்தமிழ்த் தாயின் குழல்சூடும்
பன்னிற மாலை இதுவாகும்.
நந்தா மணங்கமழ் இந்நூலால்
நானிலம் உய்ந்து நலம்பெறுமால்.

6. வள்ளுவன் போற்றி அவதானம்
வாழ்நாள் முழுதும் செய்தோர்ந்தார்.
**'உள்ளுதற் கினிய வள்ளுவமே'**
ஒண்டமிழ் முழுதும் பொதிந்துளதைத்
தெள்ளுநற் கவியால் திரட்டித்தார்
தீந்தமிழ்க் கவியாம் சி.து.க.
உள்ளுக புலவீர்! உளமினிக்க
உரைப்பீர் இதனை உலகவர்க்கே.

7. பத்துக் குறளின் கருத்தெல்லாம்
பதித்தே கவிஞர் ஒருபாட்டில்
சத்தாய்க் கருத்தின் பெட்டகமாய்ச்
சதமொடு முப்பான் முப்பாட்டில்
சித்தர் எம்குரு சி. து. க.
'செம்மணி மாலை' செய்திட்டார்;
முத்தமிழ்த் தாய்க்கு முத்தாரம்
முயன்றே நன்கு சூட்டிட்டார்!

8. பிறவா யாக்கைப் பெரியோனே
பிறங்கி மண்மேல் வள்ளுவராய்
இறவா அறநூல் யாத்திட்டார்.
இவரே உலகின் தலைவரென
மறவா திவர்க்கே 'தசவங்கம்'
மாண்கவி எம்மான் செய்திட்டார்.
பிறவிப் பயனைப் பெற்றிடுவீர்
பெம்மான் வள்ளுவர் நெறிச்சென்றே.

9. பைங்குழல் மடவார் பாடலிலே
படித்தார், பாமரர் அனைவோர்க்கும்
நங்குரு வள்ளுவர் கருத்தெல்லாம்
நன்கனம் திரட்டி 'அம்மானை'
எங்குரு நாதர் இயற்றிட்டார்.
எய்ப்பில் வைப்பாம் இந்நூலைப்
பொங்கும் கடல்சூழ் புவிக்கெல்லாம்
பொதுவே ஆக்கிப் போற்றிடுவோம்.

10. செந்தமிழ்த் தாயின் தவப்புதல்வர்
செகத்தாய் மைந்தர் வள்ளுவர்க்கு
நந்தா விளக்காய் நன்னூல்கள்
நானிலம் விளங்க நவின்றிட்டார்.
பைந்தமிழ் மாணவர்க் குழுவினரோம்
பாங்காய்த் திரட்டி அச்சிட்டோம்.
எந்தமிழ்க் குருவின் காணிக்கை
இந்நூல் முதற்கண் படைக்கின்றோம்.

11. வள்ளுவர் உள்ளக் கிடக்கைதனை
வகுத்தே உரைத்தோர் வாழியவே!
தெள்ளுநற் கவியால் வள்ளுவத்தைத்
திரட்டிய நூல்கள் வாழியவே!
வள்ளல் எனவே மாணவர்க்கு
வண்டமிழ் உரைத்தோர் வாழியவே!
வள்ளுவர் நீதி வையமெலாம்
வழங்குமெய்க் கவிஞர் வாழியவே!



# திருவள்ளுவர் கலம்பகம்

*******

## பாயிரம்

### தெய்வ வணக்கம்.

1. திருவள் ளுவர்தம் திருவடி சூட்டும் கலகம்பகப்பா
பெருகி வளர்ந்திடப் பெய்முகிலாகிப் பிறங்குநலம்
தருவ னடியார் தனியுளம் வேண்டுருத்
தான்படைத்துப்
பருகமுற தாய்வரும் ஆதிபகவனெம் பண்ணவனே.

### அவையடக்கம்

2. தலம்புகழ் தெய்வத் திருவள் ளுவர்செழுந்
தாண்மலர்க்குக்
கலம்பக மென்னுங் கவிபுனைந் தேனருட்
கண்ணுதலார்
சிலம்பியொன் றந்நாள் திருமுடி மேல்வலை
செய்பணிக்கா
உலம்பெறா வாழ்வளித் தாண்டமை யென்னும்
உறுதியிலே.

3. ஆர்கட லாழும் அகலம் இனைத்தென் றறிவதனால்
தேர்பவ ரில்லை திருவள் ளுவனார் சிறப்பியல்பில்
ஓர்துளி ஞானமு முற்றிலன் ஏழை உரைக்கு
மென்றன்
ஆர்வம தெண்ணி யிகழா தருள்செய்வ ரான்றவரே.

4. என்செய லன்றிது வள்ளுவர் மாட்சி இயம்பு
மிந்நூல்
முன்செய் தவத்தின் முடிந்ததொன் றாமிம்
முறைமை யெண்ணி
இன்றிதிற் குற்றமெண் ணார்தம் இயலருட்
பாங்கதனால்
அன்புடன் நல்லன ஆய்ந்துளம் பூப்பர் அறிஞர்களே.

### காணிக்கை

5. பழகிடும் இன்சொலும் பார்வையில் அன்பும்
பணைத் தருளின்
வழியெனை யூக்கியென் வண்டமி ழார்வம் வளரச்
செய்தார்
அழகு ரடிகள் அடிமலர்க் கேயென் றன் அன்பிசையும்
கழிமகிழ் காணிக்கை வள்ளுவர்க் காமிக் கலம்பகமே!

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

உலகுயிர்தாம் உவப்பெய்த உலவாச்சீர் ஓங்குபுகழ்
நிலமதனிற் பிறந்தருளி நிறைந்துயரும் உளத்தருளால்
எவ்வுலகும் எவ்வுயிரும் எச்செயலும் எத்திசையும்
செவ்விபெறுந் திறமுணர்த்தும் தெய்வநலம் திகழ்மரபில்
இருக்குமுதல் நூலனைத்தும் இணையின்றாம்
எனவறிஞர்
சுருக்கமிலாப் புகழ்பாடத் தொல்லுலகோர் துயர்தீர்ந்து
வாழ்வாங்கு வாழுநெறி வகுத்தபெருந் திருக்குறளால்
சூழன்பு சுரந்தளித்த தூமுனிவ! இவைகேட்டி!
- எட்டடித் தரவு.

நலங்குலையும் ஆருயிர்கள் நண்ணிநலம்
பெறுகவென
கலங்கரையுங் மணிவிளக்காக் காட்டுவதுன்
திருமொழியே!
சொல்லியழப் பொருளாலே சுருக்கினிலே வீடதுவும்
நல்லியல்பில் வாய்க்குமென நவின்றதுநின்
திருமொழியே!
அன்பினிலே தொடங்கியருள் ஆட்சிபெறும்
இல்வாழ்வில்
நின்றிடுவார் பெரியாரென நிகழ்த்தியதுன்
திருமொழியே!
ஊனுண்டு வாழாதிர்! ஓங்கும்அருட் பான்மைவழி
மானுடராய் வாழ்கவென வகுப்பதுமுன்
திருமொழியே!
செய்கையிலே செம்மைநலம் சேர்ந்திடுமேல்
வாழுமிந்த
வையகமே துறக்கமென வகுப்பதுமுன்
திருமொழியே!
விருந்தோம்பல் ஒப்புரவு கண்ணோட்ட
விளைவுகளான்
திருந்திடுமிவ் வுலகனவே தெரிப்பதுநின்
திருமொழியே!

**- இவை யாறும் ஈரடித் தாழிசைகள்.**

முறைமுறை பலகலை முழுதுண ரறிஞரும்
இறையென வழிபடு மினியதொ ரருளினை.
அருமையி லெளியநி னடிதொழு மவருள
மருவிய துயர்கெட மடமைக ளொருவினை.
அடியொடு முடியவ ணறிவரு மொருமுதல்
அடியிணை யிவையென அலர்தரு குறளினை.
விடிவில வெனவரு வெகுதுய ரவைகெடு
முடிவுக ளருளிய முதுமொழி திருவினை.

**- இவை அராகம்**

தோட்டத்துப் பச்சிலைபோல் சுரந்தருளால்
துவள்மனத்து
வாட்டத்தைத் தவிர்த்திடுநின் வண்குறளின்
ஒருமொழியே!
சற்றுமனந் தடுமாறித் தவறுசெயத் தாழுங்கால்
உற்றதனைப் போக்குவதுன் ஒண்குறளின்
ஒருமொழியே!
இப்பிறவி மாட்சிமையும் இசைபெருக வாழ்ந்திடலும்
ஒப்புநிலை உணர்த்துவதும் உயர்குறளின்
ஒருமொழியே!
இந்நெறிதான் சென்னெறியிங் கிவ்வழியே
செல்லுகென
மன்னுயிரை வழிபடுத்து மாண்குறளினொ ருமொழியே!

**- இவை நான்கும் ஈரடித் தாழிசைகள்.**

உள்ளனைகிற உணர்ந்திடுவார் உளத்துவகை
நிறைந்தனையே!
மண்ணுலகிற் பழியனைத்தும் வழியொதுங்க
வகுத்தனையே!

**- இவை நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்.**

கற்பனைகள் கடந்தோய்நீ!
கருணையுள நிறைந்தோய்நீ!
தற்பரமாய்ச் சிறந்தோய்நீ!
தண்ணுலகம் அளந்தோய்நீ!

**- இவை முச்சீர் ஓரடி அம்போதரங்கம்.**

தகைசி றந்தனை! தவநி றைந்தனை!
தண்ணு ளத்தினை! தமிழ்வ ளர்த்தனை!
அகநி றைந்தனை! அமிர்த ளித்தனை!
அன்பு ளத்தினை! அருள்வ லத்தினை!

**- இவை இருசீர் ஓரடி அம்போதரங்கம்**

எனவாங்கு - தனிச்சொல்

கடவுண்மா முனிவநின் கழலடி பரவுதும்
மடனுடைப் பிறவி மயக்கினில் வருந்திச்
சென்றநாள் செல்க ஒன்றிடு சிந்தை
எதிர்நா ளனைத்தும் புதுமகிழ் சிறப்பத்
தெய்வத் திருமறை மெய்வகை வழியில்
மனமொழி மெய்கள் வினைதடு மாறாப்
பொற்பினில் நாளும் பொலியும்
சொற்பெறு வாழ்வில் சுகம்பெறற் பொருட்டே.

- நேரிசை ஆசிரியச் சுரிதகம்

## 2. நேரிசை வெண்பா

சொற்பெருக நும்மைத் துதிக்கு மரபறியாச்
சிற்றுணர்வேன் சிந்தையினும் தேவரே! - உற்றடியேன்
சொல்லு மவையனைத்தும் தொல்லறிஞர் உள்ளமதும்
வெல்லும் பொருளாக்கு வீர்!

## 3. கட்டளைக் கலித்துறை

பொருட்டாக வென்னையும் பொய்த்தலில் முப்பாற் பொருளருளித்
தெருட்டா நலங்கொளச் செய்தளித் தான்செலு மேய்புலத்துக்
குருட்டாவு மூர்புகக் கோவலர் மேற்கொளுங் கொள்கையென
அருட்பா லுயர்திரு வள்ளுவ னந்தண னாண்டகையே.

## 4. பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

ஆண்டகை நீசொல் அரும்பொருட் குறணூல்
அமைந்துறும் கருத்துக ளறியேன்
அகிலமீ தடியேன் அரியவாழ் வனைத்தும்
அணுவெனும் பயனிலா தொழியக்
காண்டலே முதலாக் கருதுமைம் புலனும்
களிமகன் செயலெனப் பிறழாக்
கண்டதே காட்சி கொண்டதே கோலங்
கருத்தினில் ஒழிந்தன இனியான்
வேண்டிநீ யருளும் விதத்தினில் மனமும்
விரிதரு புலன்களும் விருப்பு
வெறுப்பிலா தொழுகி விரைவினில் நலங்கள்
மேவிடத் திருவருள் வருமோ!
ஈண்டிய மும்மை இயல்புறு செயல்கள்
இரிந்திடின் வீடென இயம்பும்
எந்தையே உலகப் பொதுமறை தந்த
ஈசனே! மாசிலா மணியே!

## 5. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மாசிலா மணியே! மாண்டகு மும்மைத் தமிழதன்
முடிமணி யாகத்
தேசினால் கதிர்முன் மின்மினி யெனவே தெரிதரு
ஞாலநூ லனைத்தும்
ஆசுடன் ஒளிக்கத் திருக்குறள் அருளும் அருமையால்
குருவென உலகோர்
பேசிடும் கருணைப் பெய்தவ முகிலே! பெரிதருள்
புரிகவெம் இறையே!

### 6. கலி விருத்தம்

இறுவ தின்றி யெமைப்பிடித் தாட்டிடும்
சிறுமை முக்குணச் செல்லல் களைந்திடு
முறைமை யிங்கு மொழிந்தருள் வாய்குறள்
மறையி னாலெமை வாழ்விக்கும் வள்ளலே!

### 7. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வள்ளலாய் ஞால மெல்லாம் வாழுமா மறைநூல் சொற்ற
தெள்ளுசீர்ப் புலவ! எங்கள் தேசிக! தெரிகி லோமைக்
கொள்வன தவிர்வ வுள்ளம் கொளுத்திய சுடரே! சீர்சால்
வள்ளுவப் பெருந்த காய்!நின் மலரடி மறக்கி லோமே.

### 8. மேற்படி வேறு

மேதக் கோனை மெய்த்தமிழில் வேதம் பொருளா
விளைத்தானைத்
தீதுக் கவரின் தெளிஞானச் சிந்தை யுலவாச்
செழுந்தேனை
ஏதப் படுமா வாழ்வார்கள் என்றும் அறியா
இறையோனைப்
போதப் பொருளாம் வள்ளுவனைப் புகழ்வார் ஞாலம்
திகழ்வாரே.

### 9. வேறு

வாரி சூழுல கிதனிடைப் பலமதம் வளரினம் பலகோடி
சீர தோர்கிலார் அவரவர் செலும்வழி தெரித்திடற்
பலகோடி
தீர மாறுபா டானவை அனைவரும் சேர்ந்தொரு
குலமாகக்
கூடும் ஓகையில் ஒற்றுமை கொண்டிடச் செய்வதக்
குறணூலே!

## 10. வேறு

அன்றொருகால் திருநெடுமால் உலகனைத்தும்
அடியிரண்டால் அளந்தா னென்னத்
தொன்றுயரு நூல்கள்பல உரையளவில்
சொலக்கேட்டோம் கண்டோ மில்லை
இன்றுதிருக் குறள்நூல்தன் இரண்டடிகள்
கொண்டிந்த இருநீர் வைப்பை
வென்றிகொள அளந்துதன தடிப்படுத்தல்
கண்டுமனம் வியக்கின் றோமே!

## 11. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் (மறம்)

வியப்பிதுகாண்! வீரமறக் கொடியை நாடி
வேந்தனவன் திருமுகத்தோ டுற்ற தூதா!
நயப்புடனே குறள்முழுது நணுகி ஓர்ந்த
நங்குடியில் பெண்கொள்ளல் எளிதோ! நங்கை
கயற்கணிவள் தோள்வேட்டார் கானத் தப்பால்
கன்னின்றார் ஆயிரவர் போய்ப்பார்! காணும்
இயற்கையுறு படைச்செருக்கில் இசையும் எம்பால்
எய்தவரி தாமெனல்போய் இயம்பு வாயே.

## 12. கலிவிருத்தம்

வாய ருந்து மலிசுவைத் தேனென
தூய வள்ளுவம் சொல்லி மகிழ்ந்திடார்
காய ருந்திக் கனிச்சுவை காண்கிலார்
பேயர் செய்வன பேதமை முற்றுமே.

## 13. கலிநிலைத் துறை

செய்ய இல்லறக் கடமையிற் சிறந்தவர் வேறு
செய்ய வேண்டுவ திலையவர்க் கிருமையும் சிறக்கும்
ஐய மின்றென வள்ளுவர் மொழிந்திடும் அறநூல்
கையில் நெல்லியங் கனியெனக் காட்டுதல் காணீர்!

## 14. மேற்படி வேறு

காணும் விருப்பிற் கணக்கேயில நூல்கள் கற்றே
வேணப் பொழுதும் விரைந்தோடின மேவு மன்பிற்
சேணும் திகழும்திரு வள்ளுவர் செய்கு றட்குள்
மாணும் ஒருசொல் மகிழ்ந்தோதுதி வாழ்தி நெஞ்சே!

## 15. நேரிசை வெண்பா

மகிழ்வாய் மடநெஞ்சே மானுடத்தை வெல்லும்
தகைமாண் சிறப்பிதனைச் சார்வாய் - இகழ்வாரை
வென்று புறங்காண லாகும் விளங்குகுறள்
நன்றறிக தேர்க நயம்!

## 16. மடக்கு தாழிசை

தேரு மறிவிற் கினியாரைத்
தேராச் சிறியார்க் கினியாரைச்
சிந்தைக் கினிய தமிழாரைச்
செருக்கும் உள்ளத் தமிழாரைப்

பாரோர் பரவும் படியாரைப்
பாவ ரினத்தே படியாரைப்
பகரும் அன்பர் பாலாரைப்
பழுத்த தமிழ்முப் பாலாரைச்

சீரார் குறணூல் தெரித்தாரைச்
சிந்தைத் துயர தெரித்தாரைச்
சிவமே தாமென் றிருப்பாரைச்
சிறுமைப் பவத்திற் றிருப்பாரை
நீரார் செந்நாப் போதாரை
நீசர் உளத்துப் போதாரை
நேர்ந்தே உண்மை யறிவாரார்
நேரும் தீமை யறிவாரார்.

## 17. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அறிவா லயமாந் திருக்குறணூல்
அதனுள் நுழைந்து மனமொழிமெய்
நெறியே ஒன்றாம் நிலைமையிலே
நிறையுந் தெய்வ நிலையறிந்து
செறியும் உண்மை அறிவின்பத்
தெய்வ மதனை உள்ளுருக
இறையும் தாழா திறைஞ்சிடுவார்
இருமைப் பயனுக் குரியாரே.

## 18. கட்டளைக் கலித்துறை

உரியா ரிவரிவர் இல்லையென் றொன்றும் இலையுலகில்
தரியாநீர் வேட்கையில் சாருநர் யாருமொண் ணீர்மடுவிற்
பரியா முகந்து பருகுதல் போல்முதற் பாவலனார்
தெரிமாண் திருக்குறள் ஞாலத் தெவரும் பெறுந்திருவே.

## 19. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருவுறும் கல்வி ஞானம் திகழுமிப் புவியில் வாழ்வு
பெருகிடும் புகழும் தேசும் பிறரெடுத் தேத்தும் கொள்கை
மருவிய செயல்கள் வாழும் வள்ளுவக் கடவுள் தந்த
ஒருகுற ணூலைக் கற்ற ஒண்டவத் திருவி னார்க்கே!

### 20. வேறு (தலைவி கூற்று)

ஆர்க்கும் கடலும் அகல்விசும்பில்
அழலே தூற்றும் கொடியநிலா
ஈர்க்கும் வாளோ இளந்தென்றல்
என்னோ வறியீர் மின்னிழையீர்!
பார்க்கே யளவாப் பயன்தருமுப்
பாலில் ஓர்சொல் பகர்ந்துளநோய்
தீர்ப்பீர்! அருளார் வருங்காலும்
தீராச் செல்லல் ஓரீரே!

### 21. கட்டளைக் கலிப்பா

செல்லல் போக்கும் திருக்குறள் தந்தெமைச்
செல்வ ராக்கினர் தேவரம் மாவினி
நல்ல யாவும் நணுகிடும் வாழ்விலே
நாலெ னும்பொருள் சீலமொ டாகிடும்
இல்லை யிங்கினி யீனமு றும்பவை
யாரு நம்முற வாயினர் அன்பினால்
வெல்லு நல்வழி மேதக வாய்த்தனம்
மேன்மை யுற்றனம் ஆன்ம நலத்திலே.

### 22. எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (தோழி கூற்று)

நலமே நினைத்தி ரடிகேள்! இவட்கு மலயா நிலத்தி
னனலே
கலவா மதிப்பி னெறிதீ வெதுப்பக் கடலே யொலிப்ப
மதனார்
அலகா லொறுக்கு முனமே திருக்கு றளிலே பழுத்த
அறிவால்
விலகா அருட்கண் மிகுமா தரத்தில் விரைவீ ரிவட்க
ணினியே.

### 23. நேரிசை வெண்பா

இனியே வினையிர்க்கென் வேலைகாண்! எந்தம்
முனிவர் முதற்பா வலனார் - பனிமலரார்
சேவடியைச் சூடிச் செழுங்நலங்கண் டோம்விலகிப்
போவதுவே நுந்தம் பொருள்!

### 24. கட்டளைக் கலித்துறை

பொருளே பொருளெனப் புன்மைகள் யாவினும்
போந்திடுமிம்
மருளே தவிர்ந்து மகிழ்ந்திட லாமது ரைப்புலவோர்
தெருளேறி மெய்ப்பொருள் சிந்தையில் தேக்கிடச்
செந்தமிழால்
ஒருநூ லுரைத்திட்ட நான்முக னார்புகழ் ஓதுமினே!

### 25. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (களிமகன்)

ஓதுகுறள் அறியான்கள் உண்டு வீழ்ந்தே
உரைமயங்கிக் குழறிடுவான் ஒருவன் றன்னை
ஈதுணர்வில் விலங்கெனவே எண்ணில் மாந்தர்
இகழ்ந்தெள்ளி ஒதுங்குதலைக் கண்டான் இந்தத்
தீதினிலே நேற்றுவரைச் செருக்கி யானும்
சென்றதெலாம் சிந்தித்தேன் சீசீ! யிந்தப்
பாதகக்கள் பக்கமினித் திரும்பேன் என்றே
பாரறியக் களிமகன்றான் பகர்ந்திட் டானே.

### 26. கட்டளைக் கலிப்பா
(தலைவன் கூற்று)

பாரொ டுங்கி உருகிடப் பல்கதிர்ப்
பகல வன்தெறு பாலை நெடுவழி
ஆரொ டுங்கிள வாதென் றன் பின்வரும்
அன்னமே! திரு வள்ளுவ னாரருள்
ஈர மென்குறள் இன்பொருள் நன்னயம்
யானு ரைக்க இளந்தளிர் உன்முகம்
தேரு நெஞ்சின் மகிழ்ச்சி தெரித்தலால்
சிந்தை நோயும் திசைப்புறம் போயதே!

### 27. பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தேரு மாறு நீயு ரைத்த செய்யு ளுற்ற வொண்பொருள்
செப்பு முண்மை நின்ற னுள்ள மின்ன தென்று
தெரிகிலார்
ஆர வோர்ந்து ளார்க ளாக மேடை யேறி ஆர்த்திடும்
ஆர வார மோய்ந்த பின்னர் அருவ ருக்கு நிலையிலே
ஈர மோடு சார மின்றி எண்ணி லாத சூதொடும்
எள்ளு மாறு கள்ளு மூனும் எந்த நாளு நீங்கிடார்
தீரநீ யுரைத்த அன்பில் திகழு மாறு புரிதி யோ!
திருவி ளங்கு குறளு ரைத்த பொருவி லாத தெய்வமே!

### 28. கட்டளைக் கலித்துறை (செவிலி கூற்று)

மேவு மழலையென் மென்குயிற் பேடை விளங்குமுப்பால்
தேவுயர் செம்மை தெரிகிலர் நெஞ்செனச் செங்கதிரோன்
ஓவரும் ஆட்சி யுயர்நெடும் பாலையில் ஓர்மகன்பின்
போவதென் தீவினை யன்றோ! எனதுளம் புண்ணுறவே.

### 29. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வேறு வேறுள சமயமெண் மிகுமதம்
விளக்கிடும் பொருளாலே
மாறு பாடுறு சழக்குகள் உலகிலே
வளர்வது நிதம்காண்பார்
ஈறி லாதியம் பகவனல் லருளினால்
இயலறம் பொருள்வாழ்வும்
தேறு மென்றிடு திருக்குறட் கருத்தினைச்
சிந்தனை செய்வீரே,

### 30. பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (தாழிசை)

வீர மோடுபல வேத நூன்மனுவொ டேகி வேகமொடு
வாதுசெய்
வித்த கப்புலவிர்! மெய்த்த வேதமனு மேவி
ஞாலமிசை யாவரும்
சார மோடுணரு மாறு தம்முளம்த ழைக்கு மாறுகொள
வல்லவோ!
தரணி மீதுமத சாதி பேதமொரு கோடி
யானவை தரிப்பவோ!
தேரு மாறுசில சாதி யார்பெருமை செப்பி வாழ்வது
மறுப்பிரோ!
தெய்வ மாமுனிவர் செய்தி ருக்குறளின் செய்ய
மாட்சிமைகள் தெரிகிலீர்
யாரு மெம்முரிமை யாரு மெம்பொருளி தென்று
போற்றுவது மறிகிலீர்!
ஏத மானவினி கேள லம்பொழுதி னேகு
வீர்விரைவொ டாகவே.

## 31. கலிவிருத்தம்

வேதம் ஆற்றல் மெலிவுறல் அஞ்சியே
ஏதும் ஏட்டில் எழுதிலர் நங்குறள்
தீதிலாதுரு ஏட்டிற் செழித்தபின்
ஓது ஞாலத் துயர்ந்திடும் ஆற்றலே.

## 32. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

ஆற்ற லொண் புலவர் அவரவர் சமைக்கும்
அரியநூற் படைப்பினி லெல்லாம்
தேற்றுமெய்க் குரவர் வள்ளுவர் செய்யுட்
செழுங்கருத் தொடுமுழு வடிவும்
தோற்றிடல் அணிபொன் தொழினலங் காண்பார்
சுடர்மணி யிடையிடை யழுத்தி
யாற்றிடு முறைமை யழகுறத் தெரிப்ப
தாகுமூ வாநல மதுவே.

## 33. கொச்சகக் கலிப்பா (இடைச்சியார்)

மூவினத்தின் பால்விலைகள் முறைகூறி மறுகிடையே
காவியங்கண் ணாலுளத்தைக் கட்டவிழ்க்கும்
சிற்றிடைச்சி!
பாவுயர்மூப் பாற்சுவையுன் மூவினத்துப் பாற்குளதேல்
ஈவதுதான் பொருளொன்றோ ஏனையிரண் டுனதன்றோ!

## 34. நேரிசை வெண்பா

ஒன்றி அடியினித்தே ஒல்லைநுனி யிற்கரிப்பாய்த்
துன்றுங் கரும்பன்று சொல்லுங்கால் - குன்றா
மொழியாம் திருக்குறளுூல் முற்றுமே யின்பங்
கழியாச் சுவையுடைத்தாங் காண்!

### 35. விருத்தக் கலித்துறை

காணார் மாந்தர் கண்க ளிருந்தும் கலைமுப்பால்
பேணார் வாழ்வில் பித்துற நாளும் பிழையேறிச்
சேணார் கொம்பர் சென்றன ரூக்கிச் சிதைவார்போல்
நாணா ளும்பல் நன்றல செய்தே நலிவாரே.

### 36. கொச்சகக் கலிப்பா

ஏறுமறைப் பொருளாளர் எண்ணுமவர்க் கருளாளர்
மாறுமவர்க் கரிதானார் மாறிலவர்க் கினிதானார்
கூறுதிருக் குறணூலார் கொள்கைதருந் துணையானார்
தேறுநமக் குறவானார் தேவரெனத் திரிவோமே.

### 37. நேரிசை வெண்பா
(தூது)

தேவர் தருங்குறளைத் தேர்ந்திட்டேம் என்பார்பால்
காவளரும் இன்பக் கருங்குயிலே! - நீ விரைக
சாரமா யன்பர்பாற் சாற்று பிரிவிதன்கண்
மாரவேள் தந்த மயல்.

### 38. கட்டளைக் கலித்துறை
(செவிலி கூற்று)

மயலே மிகுந்த மதவேழ மாயிரம் வென்றசெங்கைப்
புயலே யனையாய்! புனத்தவர் பொற்கொடி யோடுநின்றன்
செயலேறு மில்லறச் செய்கையெல் லாந்திரு வள்ளுவனார்
உயலே றுரைக்குறள் ஒண்மொழிச் செம்மை உணர்த்துநவே.

### 39. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வேறாவெனை நாளுமொ றுத்துவினை
விளைவித்திடும் ஐம்புல னானவைதாம்
நீராவெனை யாக்குமு னேயடிகேள்!
நிலைகொண்டிட ஓர்வழி நேடியுமைப்
பேறாவெணி வந்தனன் நும்அடிகள்
பெறுமா(று) அருள்தந்தெமை யாண்டிடுவீர்!
தேறார்கள் மனந்திரு வாக்குபெருந்
தேவேதிரு வள்ளுவ ராந்தகையே!

### 40. வேறு

தேவர் தருமுப் பாலினிமை
தேக்கு முளத்தில் பிறபுலவோர்
பாவந் தொதுங்கும் இடமுண்டோ!
பயிலும் வேறு கருத்துண்டோ!
காவில் எழுந்த கற்பகமும்
கருதும் இதுபோல் வழங்கிடுமோ!
நாவந் தினிக்க முப்பொழுதும்
நவில்வோ முப்பா லயில்வோமே.

### 41. வேறு. செவிலி கூற்று

அயிலெ டுத்திடும் காளைபின் போனவென்
அருந்தமிழ்க் குலப்பாவை
செயல டுத்தசீர் முதுக்குறை வுற்றனள்
திரும்பினள் துணையோடும்
பயிலு நம்பெரு நாவலர் திருக்குறள்
பயின்றுளார் மகிழ்வெல்லாம்
இயலு நெஞ்சினேன் இனிவரும் இடரிலை
இன்புறும் இவர்வாழ்வே.

## 42. கட்டளைக் கலிப்பா

வேத நூன்மனு சாத்திரம் வேள்வியால்
விதித்த தென்ன விழுக்கினை யுண்குவார்
பாத கச்சம யங்களிற் பட்டிலேம்
பாரு ளாரிவர் யாவரும் பண்பினால்
காத லோடு கலந்துயிர் ஓம்பிடக்
காட்டு நந்திரு வள்ளுவர் கான்மலர்
ஓது வார்செலும் ஒண்ணெறிச் செல்வதால்
உய்ந்த னம்உயர்ந் தோமிவ் வுலகிலே!

## 43. வஞ்சித் துறை

உலகுடன் புகழ்பெறுங் குறண்மலிந் தேத்துமின்
இலகுமெய்ப் பொருளுணர் நிலைமைகண் டார்க்கவே.

## 44. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

ஆர்க்கு முப்பகை நாமமும் கெடுமிடம்
அஞ்ணியதாம் வீடென்றே
தீர்க்க மாகவே அடிகள்நீர் இயம்பிய
திருக்குற ளதுகண்டேம்.
ஈர்க்கு மப்பகை மிகமிகக் கொடியவே
என்பதால் அவைபோக்கும்
மார்க்க மொன்றையும் வழங்கியிச் சிறியெமை
வாழ்ந்திடப் புரிவீரே.

## 45. கலி விருத்தம்

புரிவதும்பெரு நாவலர் பொன்னடி
தெரிவதுங்குறள் மாமறைச் செம்பொருள்
இரிவதுந்துயர் ஏறிடு தீவினை
வெருவலென்னை வியப்பிது நெஞ்சமே!

### 46. ஊசல். எண்சீர் ஆசிரிய விருத்தம்

நெஞ்சகமே பொற்பலகை யாக நீடு
நிறையறிவு கடைப்பிடியோ டோர்ப்பு நாலும்
விஞ்சுகயி றாக்கொள்கை விட்டம் ஆர்த்த
விளங்குமணி யூசலிலே யமர்ந்து மின்னும்
மிஞ்சுகதிர்க் குண்டலங்கள் விளங்கி யாட
மெய்ப்புலவர் வாழ்த்தொலிகள் விண்ணிற் கூட
அஞ்சுவைசேர் குறள்தந்தீர்! ஆடி ரூசல்!
அன்புறுசெந் நாப்போதார்! ஆடி ரூசல்!

### 47. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

ஊச லெனும்படி வோது பவம்பல
ஊறு விளைத்ததும் ஓயாதோ
ஆசை யதன்வழி யாகு கொடுந்துயர்
ஆயிர மாயிர மாயாவோ
நேச முடன்குறள் ஓதி நிலைத்திடு
நேர்வழி யேசெலல் காணாயோ
மாசுறு நெஞ்சுனை மாண வழுத்துவன்
மாநிதி கண்டிது வாழ்வாயே!

### 48. கட்டளைக் கலிப்பா

நிதிய மாங்குறள் நேயமொ டுந்தரும்
நித்த ரெந்திரு வள்ளுவர் நின்றவூர்
மதுரை யென்பர் மறுத்துரைப் பாரவர்
மயிலை யிற்பிறந் தாரென மாற்றுவார்
கதித ருங்கயி லாயமப் பாற்கடல்
கமல னூர்அம ராவதி காண்பதி
எதுவ தாயினு மாகுக தேவர்தாம்
இருப்பி டம்துதிப் பார்க ளிதயமே!

## 49. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்
### (தோழி கூற்று)

மேத குஞ்செய லாநி னைந்தனிர்
மேன்மை யன்றிது மேலைநாள்
பேதை நெஞ்சினி லேபு குந்தனிர்
பீழை யேதர லாகுமோ!
காத லின்பொருள் நீர றிந்திடு
கால மிங்கிது காணுவீர்!
ஓதி மன்னவ ஓர்க நங்குறள்
ஓது மின்பமி தென்பதே,

## 50. கட்டளைக் கலிப்பா

தேவர் தாந்தொழு தெய்வப் புலவர்தம்
திருக்கு றட்சுவை தேர்ந்தன மிங்கினி
காவ ளந்தரு கற்பக நாடுறும்
கற்ப பனைப்பொருள் நூல்கள் விழைகிலேம்
ஆவ லோடு மனையறம் ஆங்கவர்
அறிவு றுத்த வகைசிறந் தாற்றியே
மீயு யர்ந்திடு வீடும் பெறுகுவம்
வெற்றி வாய்ப்பிது பெற்றன முண்மையே!

## 51. கட்டளைக் கலித்துறை

உண்மை யுமதுரை ஒண்மறை யாகுநும் சீரடிகள்
மண்படு மாயினம் மண்ணெம் பிறவிக்கு மாமருந்து
கண்ணருள் பார்வையக் காலனை வெல்லுங்
கவயமன்றோ!
பண்ணிசை மூப்பாற் படைத்தெமை யாள்முதற்
பாவலரே!

## 52. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பண்ணுமில் லறத்தி னார்க்கே பயின்றிடும் இருமை
விடும்
திண்ணமென் றறிவித் தற்கே தேவரீர் புவியில்
வாழ்க்கை
நண்ணினீர் வாசு கிப்பேர் நங்குல தெய்வத் தோடும்
புண்ணியர் போற்ற வாழ்ந்தீர் பொதுமறை தந்த தேவே!

## 53. நேரிசை வெண்பா (தோழி கூற்று)

தேவிற் சிறந்த திருவள் ளுவர்புகழைப்
பாவிற் பகர்ந்துவரு பாணகேள்! - காவிற்போய்
அன்பரென் பார்பால் பொதுமறையின் அன்புநெறி
இன்னதெனக் கூறுகநீ யின்று.

## 54. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (தழை - தோழி கூற்று)

இன்ன கைச்சிறு மான்பிணை நீதரும்
இளந்தளிர் தனைமோந்து
மன்னு மார்பொடு முகம்விழி யணைத்திடு
மலர்ச்சிமெய்க் குறள்நூலை
முன்ன ளித்திடு முனிவர்தம் சேவடி
மூழ்கிடு முளத்தார்தம்
தன்னி கர்த்திடு முருக்கமே போன்றதாம்
சாற்றிடின் வேறுண்டோ!

### 55. அம்மானை - மடக்கு

சாற்று புலவரெலாம் தாழ்ந்தொழிய மெய்க்குறளூல்
ஏற்றது சங்கப்பலகை என்றிட்டார் அம்மானை
ஏற்றது சங்கப்பலகை என்றிடினவ் வொண்புலவர்
மாற்றுசினத் தாலேதும் வைதனரோ அம்மானை
**மாலையிட்டு வள்ளுவரை வாழ்த்தினர்கா ணம்மானை!**

### 56. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வள்ளுவனார் பொருட்பாலில் மன்னரவர்
ஆட்சிமுறை வகுத்த தெல்லாம்
தெள்ளுமொரு குடிமகற்கும் சிறந்தமையும்
திறத்தாலே திருந்து வாழ்வில்
எள்ளலிலா தனைவர்க்கும் எப்பொழுதும்
எத்திறத்தும் இசையும் இந்நூல்
விள்ளுமுறை நயங்களிலே வியனுலகர்
படிந்திடவே விரைதல் காணீர்!

### 57. மேற்படி - வேறு (தலைவி கூற்று)

விரைந்து கதிரோன் மேல்கடல்போய்
வீழ்ந்தான் குறளூல் படிந்தறியார்
கரிந்த உளம்போல் இருளெங்கும்
கடுகிற் றெழுந்த முழுமதியும்
திருந்து முப்பால் வழிச்செல்லார்
செய்கை யெனவே தீச்சொரியும்
மருந்து காணேன் என்நோய்க்கு
மறந்தார் அவரும் துறந்தாரே!

### 58. கட்டளைக் கலித்துறை (தோழி கூற்று)

தாரகை தோன்றவும் தண்மணற்கூடல்
இழைத்திழைத்துத்
தீர வருந்தினை யன்னை! நஞ் சீரூர்த் தெருமுனையில்
தேர்வரு மோசை செவிமடுப் பாய்நந் திருக்குறளைத்
தேருநர் போல்மகிழ் வாய்நமர் வந்தனர் சேயிழையே!

### 59. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (குறம்)

வந்தொழுகு நீரருவிச் செந்தமிழ்மா மலையம்
வாழ்குறத்தி என்மொழிகள் தாழ்வதிலை யென்றும்
தந்துதவு பழஞ்சீலை தவிர்த்திடுவாய் பசியும்
தத்தையுன தங்கையிலே பொய்த்தலிலா வரைகள்
செந்தமிழர் செல்வமெனும் திருக்குறளால் ஆய்ந்த
செம்மலுனை அணைவனெனும் மெய்ம்மையது
பேசும்
இந்தமொழி பொய்த்திடுமேல் எங்குமினிக் குறிகள்
எய்தவுரை யேனறிக செய்திடுகூ ளம்மே!

### 60. மேற்படி - வேறு (புயவகுப்பு)

செய்தவமார் ஞானியர்தம் சிந்தைக்கு கந்தன!
சிந்தனையில் நேரானார் அன்பிற்கு வந்தன!
உய்தலுற மாஞால முற்றும்பு ரந்தன!
உண்மையறி கில்லார்த முள்ளந்து றந்தன!
கைதவத்தார் செய்கையது காணத்த டிந்தன!
கற்றறியா என்கவியும் காத்தற்கி சைந்தன!
தெய்வமண நீறுடனாச் சந்தந்தி மிர்ந்தன!
செய்யதிரு வள்ளுவனார் செம்மைப்பு யங்களே!

### 61. நேரிசை வெண்பா

வள்ளுவனார் உள்ளமறி மாட்சிப் பதின்மரவர்
தெள்ளுரைகள் ஞாலம் திகழ்வித்தார் - விள்ளுமவர்
சென்னெறியி லாயிரவர் செய்யிமுரை யாவுமவர்
மன்னுமிசை போற்று மலிந்து.

### 62. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மலியும் பிறவி மருந்தாகும் வாழ்க்கை நெறிக்கு
வழிகாட்டும்
கலிமுப் பகையைக் களைந்தெறியும் கருதும் இருமை
நலம்புரியும்
தலைமை கொள்ள உலகனைத்தும் சாற்றும் பெருமை
தந்தருளும்
மலைவு போக்கும் வள்ளுவர்வாய் மலர்ந்த தெய்வத்
திருமறையே!

### 63. வேறு

திருமுனிவர் வள்ளுவனார் திருக்குறளை
எமக்களித்த சிறப்பி னாலே
பெருவுலகில் யாமடைந்த பெருமையிது
பிறர்தமக்குப் பேச லுண்டோ!
அரிதரிது மானிடராய்ப் பிறத்தலென
அவ்வையன்று சொன்ன தெல்லாம்
வரமெனயாம் பொதுமறைநூல் வாய்த்திடுசீர்
வளமறிந்தே வகுத்த தேயோ!

### 64. நேரிசை வெண்பா

தேவர் குறள்வடவர் செய்தநூல் பின்பற்றி
மேவியதென் பார்புனையும் வெண்மொழிகள் - ஓவா
மழலைப் பெயரனிடம் வந்தவன்றன் பாட்டன்
மொழிகற்ற தன்றோ முனைந்து!

### 65. கலிநிலைத் துறை

நைந்தி டாவகை நமையெடுத் தாண்டிடப் புயனோர்
சிந்தை யார்திரு வள்ளுவர் இருந்திடல் தெரியார்
வந்தி யாவணங் காப்பிற தேவர்தம் வழியே
இந்த மானுடர் இருந்துய ருழப்பதென் னியல்போ!

### 66. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

இருந்து நுகர்ந்தார் இன்பமெலாம் இழந்து மீண்டும்
புவியிழிந்து
வருந்து மாறு செயுமிமையோர் வாழ்வும் ஒன்றோ!
இருந்துநலம்
திருந்து மூன்று படிநிலையில் செலுத்தி வீடும்
தருங்குறளால்
பொருந்த நல்கு புவிவாழ்வே போற்றற் குரிய
நல்வாழ்வே!

### 67. கட்டளைக் கலிப்பா

வேத னன்று விளங்குது ழாய்முடி
வித்தக னன்று வெள்விடை ஊர்தியந்
நாத னன்று நலமுறு மூவர்க்கும்
நல்கி முத்தொழில் நாளும் புரந்திடும்
ஆதி யேதிரு வள்ளுவ ரென்றிடும்
அண்ண லாகி அருளொடு நின்றமை
தீதி லாப்பெரு ஞானியர் கண்டருள்
செய்த துண்டு திறமறி வார்கட்கே.

### 68. கலிவிருத்தம்

கண்ணினுக் கெழில்தரும் காமர் தாமரை
விண்ணினுக் கெழில்தரும் விளங்கு வெண்மதி
மண்ணினுக் கெழில்தரும் சாலி நீள்வயல்
எண்ணினுக் கெழில்தரும் குறள தென்பவே.

### 69. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

என்பவம் பார்க்கில் எழுகடல் சிறிதாம்
எடுத்தவிப் பிறவியில் ஏதோ
முன்செயும் சிறிய புண்ணிய முதவ
மூர்த்திநின் பெருமையை வேட்டேன்
அன்பதன் பெருமை அளந்தறி வுறுத்த
அண்ணல்நீ அறிகுவை யதனால்
நன்றெனக் கருள்க திருக்குறள் பயந்த
நாதனே நல்லருட் கடலே!

### 70. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கடலாம் நின்றன் பெருமையெலாம் கருதிக் கருதி முகந்தெடுத்து
மடவேன் என்றன் சிறுமனத்தில் வைப்ப தறியேன் மயங்குகிறேன்
அடைவே அளவாப் புகழடங்கும் அகன்ற மனமொன் றருள்கண்டாய்
கடவுட் புலவா! திருக்குறளைக் கருதி யளித்த பெருமானே!

### 71. கட்டளைக் கலித்துறை

பெருநா வலர்மொழி பேணித்தம் வாழ்வினிற் பிடிசைந்தார்
தருமா ணலத்தொடு தாம்பெற்ற வின்பமித் தாரணியில்
அருகா தனைவர்க்கும் ஆக்கும் பணியினில் அன்புடனுள்
உருகா நிலைத்திடு வாரவர்க் கில்லையொ ரொப்புமையே.

### 72. விருத்தக் கலித்துறை (தலைவன் கூற்று)

ஓதுங்கு றட்பாவி லொன்றேனு மோதா ருளம்போலவே
தீதுற் றிடித்துச்செ லும்மேக மென்சொல்
செவிக்கொள்வையோ
காதற் குயிற்பேடை காணப்பொ றாள்முன்
கனைத்தேறிநீ
ஏதங்கொ ளச்சேறல் இன்னாமை யன்றோ
இடஞ்சூழவே!

### 73. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கொள்ளப் படுவன தள்ளப் படுவன
குறுகா தொழிவன இசையாவென்(று)
எள்ளப் படுவன இவைகா ணென்றிடு
பொதுமா மறையிது பயிலாதார்
உள்ளத் தமைதியொ ரெள்ளத் தனையவர்
எய்தார் உண்மையில் இரைதேடும்
கள்ளக் குறுநரி யனையார் கவலையில்
அலைவார் உலகினில் உலைவாரே.

### 74. குறள்வெண் செந்துறை

உலகெ லாமுணர்ந் தோது திருக்குறள்
அலகி லாப்பொருள் ஆரண மாகுமே.

### 75. கலிவிருத்தம்

மேலை நாட்பெரு நாவலர் வேண்டிநற்
கால மீந்த திருக்குறள் கண்டபின்
ஞால மீதிவண் யாமிது நாள்பயில்
நூலெ லாமிக நொய்ம்மைய வானவே!

### 76. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வேறுபல் வழியிற் சென்று மெய்வழி உணரா திந்நாள்
காறுநாம் கழித்த வாழ்வு கடுகள வேனும் நன்மை
தேறிய தில்லை யின்று திருக்குறள் உரைகள் ஆய்ந்தே
பேறுயர் உண்மை வாழ்விற் பிறங்கிடப் பெற்றோம்
அம்மா!

### 77. நேரிசை வெண்பா

மாறிச் சுழன்றுவரு வையத்துப் போக்கினிலே
நூறுநூ றாயிரமா நூல்பலவும் - வீறழிந்து
சென்றொழியத் தெய்வத் திருக்குறளின் மாட்சியிது
நின்றுயர்ந்து வாழும் நிலைத்து.

### 78. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (காலம்)

வாழுமவர் வாழ்வியல்கள் வகுத்துணரும் காலம்
மயங்கியநங் கருத்திலொளி வயங்கிடுநற் காலம்
காழுலவு மனமென்பே கண்டுயரும் காலம்
காதலன்பி லறம்பொருள்கள் கவினிசையும் காலம்
ஏழிசைகள் தமிழன்னை இறைமைபெறுங் காலம்
எல்லாரு மோர்குலமென் றெண்ணமுறுங் காலம்
ஊழினுயர் திருக்குறணூல் உளந்தழைக்குங் காலம்
ஓங்குதிரு வள்ளுவர்சீர் பாங்குறுமிக் காலம்.

### 79. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கால மெல்லாம் வறிதாகக் கழிந்த தினியே கழிமூப்புச்
சால வொறுக்கும் துயர்பலவும் சாருந் திகைப்பு
மிடங்கொள்ளும்
மேலும் உறுதி யிலைநெஞ்சே! மேவித் துணையாய்த்
திருக்குறளை
ஞால மீந்தார் நல்லடிகள் நாம்பெற் றுய்வம் வாவினிதே

### 80. மேற்படி - வேறு

இனிதெ னப்படு மில்லற மிருப்பவும் இதன்வழி
பெறுவிட்டுக்
கனியி ருப்பவும் அதுபெற முயன்றிடார் திருக்குறள்
காணார்தம்
மனமொ றுத்துணும் உண்டியும் வெறுத்திடு மலிதவ
முயல்வெல்லாம்
தினையு நற்றுணை செய்திடா வென்பதைச் சிறிதுமங்
குணராரே!

### 81. நேரிசை வெண்பா

உணர்ந்தார்க் குணர்வரிதா மொண்குறளின் மாட்சி
அணைந்துயரும் வானத்திற் கப்பால் -
இணைந்தபொருள்
ஆழமேழ் பாதலத்தின் அப்பாலும் செல்லுமெனத்
தாழ்விலா தெண்ணும் சகம்!

### 82. எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

இல்லை யில்லையொரு கடவுள் யாவையும்
இயற்கை யேயெனு முலுத்தரும்
சொல்லு நின்னையுநின் குறளை யுந்தொழு
சொலற்க ருந்தகைமை நின்னருள்
கல்லை யுங்கனிய வைக்கு நுந்தமது
காம ருண்மைதெரி வித்தலால்
எல்லை சொல்லிடவு மாவதோ பெருமை
நாவ லோர்கள்தொழும் ஈசனே!

## 83. பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சொல்லற் கினிய பெரியாரைத்
தொலையாப் புகழுக் குரியாரைச்
சோர்வு போக்கும் துணையாரைத்
தூய ரல்லார்க் கணையாரைக்

கல்லுங் கனியச் சொல்வாரைக்
கசட்டு நெறிகள் வெல்வாரைக்
கற்றார் உள்ளத் திருப்பாரைக்
கன்னித் தமிழின் விருப்பாரைப்

புல்லர் அறியாப் பொருளாரைப்
பொதுவுற் றிடுநல் லருளாரைப்
பொங்கும் கருணைக் குரியாரைப்
பொய்யர் உளத்துக் கரியாரை

வெல்லு முப்பால் படைத்தாரை
விழைபே ரன்ப ரிடத்தாரை
விளங்கு முதற்பா வலனாரை
வேண்டில் வினைகள் இலவாமே.

## 84. கட்டளைக் கலித்துறை

முதலு முடிவு மறியப் படாத முழுமுதல்வன்
பதியி லருளுருப் பற்றியெம் போல்வார் பரிபவங்கள்
சிதையும் படிச்செய் திருக்குறள் ஓதும் திருவடைந்தேம்
அதுவெமக் கீந்திடும் ஆர்ந்துயர் மெய்ந்நல மாயிரமே!

## 85. நேரிசை வெண்பா

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
வாயுரைக்கச் சிந்தை வளநுகர - நேயமொடும்
சென்று பரப்புநர்தம் சிந்தையே வள்ளுவனார்
நன்றுறையும் செல்வ நகர்.

### 86. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (சம்பிரதம்)

நன்றிதுகேள் மாதவத்தார் நாய னார்தம்
நல்லகுறள் நூன்முழுதும் நயந்து கற்ற
துன்றுபெரு ஞானத்தேம் துலங்கு மாறு
சொல்லியுமெண் ணிலர்மயக்கம் துடைத்தேம்
வாதில்
வென்றிகொள ஒருவரிலை மேலைக் கீழை
வெளிநாட்டில் குறள்பரவ விளைத்தேம் அப்பா!
இன்றெமைப்போல் வள்ளுவனார் ஏற்றம் கண்டார்
இருநிலத்தில் இருப்பரெனில் இசைத்தி டாயே!

### 87. நேரிசை வெண்பா

இசையும் பொதுமறையாம் இன்பத் தருவின்
மிசையே குறட்கனிகள் வேண்டி - மிசைவார்தம்
வாழ்க்கையே வாழ்க்கை மறந்து புறஞ்செல்வார்
பாழ்ப்பிறவி யேதாகும் பார்!

### 88. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (தவம்)

பாராய் மனமே! பண்புடையாய்! பகரக் கேணீ
பாவமுளார்
ஓரா யிரவர் உன்னுறுதி ஊக்கம் கலைப்பார்
விழிப்புடனாத்
தீரா அன்பில் திருக்குறளைச் சேவித் துருகி
வள்ளுவனார்
சீரார் அடிக்கே அன்புறுக! செய்யும் இதுகாண்
செழுந்தவமே.

## 89. கட்டளைக் கலித்துறை

செய்யும் திருக்குறள் முப்பால் தமிழ்மறை
தெய்வநன்னூல்
உய்யும் பொதுமறை உத்தர வேதம்பொய்
யாமொழிச்சீர்
வையம் புகழ்திரு வள்ளுவர் வாயுறை
வாழ்த்தெனுஞ்சீர்த்
தெய்வப் பெருநிதி தந்தார் திருவடி சேர்குதுமே.

## 90. நேரிசை யாசிரியப்பா

சேருமப் பொதியத் திருமுனி யிருத்தலின்
சீருள தென்றிசை வடதிசை பொருவ
நேரதா யிற்றென நிகழ்த்திடும் அக்கதை
தேர்கிலம் அறிஞர் தேர்தொறும் தேர்தொறும்
புதுமை நயம்பல விதமுற வழங்கும்
திருக்குறட் செழுமறை விருப்புட னருளிய
திருவள் ளுவனார் தென்றமிழ் நிலமிதில்
வருவதன் பயனால் வடதிசை யொன்றோ
ஆர்கடல் வளைஇய பாருல கெனப்படு
மேற்றிசை நாடொடு கீழ்த்திசை நாடுகள்
அனைத்துமே திருக்குறள் மனத்துணை யாகெனத்
தம்மொழி யவற்றால் செம்மையி லாக்கி
ஆய்ந்து மகிழ்ந்துளம் தோய்ந்திடு மளவாப்
பெருமித மதனால் இருநில மனைத்தினும்
தமிழ்நில மொன்றே யிமயம் போன்றுயர்
மாட்சிமை மறுப்பா ருண்டோ!
காட்சி யளவையிற் கண்டன மகிழ்ந்தே;

### 91. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தேமலரு மறைமலையார் செந்தமிழ்தே ரடிகள்
திருமலரு மாணவராய்ச் செந்தமிழும் சிவமும்
தாமறியுந் தவஞானத் தனியழ கரடிகள்
ததியுயரு நீர்வயல்சேர் மதுராந்த கம்சார்
ஏமவரைப் பினிலொருசீர்க் குருகுலமென் றியம்பும்
இனியநிலை யதுநிறுவி யியம்புதிரு மடமாய்ச்
சேமமுறு திருக்குறளுக் கொருபீடம் நிலவச்
செய்தவெலாம் தேவர்நும தையமிலா அருளே!

### 92. கட்டளைக் கலித்துறை

அருளார்ந் தொழுகும் அருங்குறட் பீடமும் ஆய்ந்திடுசீர்ப்
பொருளார் கிளைகள் பொதுமறை நல்லிதழ் போற்றுசெயல்
தெருளேற எங்கும் செறிவது நந்திரு வள்ளுவனார்
தெரிமாண் திருவருட் செய்கையென் றேயெணித் தேனிப்பமே.

### 93. தலைவி பாணனொடு கூறல் (தாழிசை)

தேனு லாவுமிசை பாடி வீதிவரு
செங்கை யாழ்தடவு பாணகேள்
சீர்ம றந்தநின தன்பர் செப்புவன
செம்மை யென்றுகொள லாவதோ!
தீன மாவெனது நெஞ்சு தீயணுகு
பஞ்செ னக்கருகி வாடவே
சென்று மற்றவர்த மன்பி னுக்குருகு
சிந்தை யிங்குவர வெண்ணுமோ!

யானு நீயுமினி வள்ளு வம்புகலும்
இன்ப நன்னெறியில் வாழலாம்!
என்று சொல்லிமறை தொட்டு சூளுரை
யியம்பி னாரவர் திறம்பினார்

போன நாள்கள்தமை யெண்ணி யாவதிலை
பொதும றைப்பொருளை யுன்னியே
பொருந்தி யென்னொடு திருந்தி வாழ்வரெனில்
புதும லர்ச்சிகொளு நெஞ்சமே.

### 94. நேரிசை வெண்பா

நெஞ்சக் கிழியினிலே நேயமெனுந் தூரிகையால்
செஞ்சொற் குறளெழுதிச் செம்மாந்தேம்
- விஞ்சுபொருள்
அன்புக் குறள்நூல் அருநயந்தேர்ந் தின்புறலே
என்றுந் தவமாம் எமக்கு.

### 95. பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்
(தலைவன் கூற்று)

குவளையங் கண்ணி! சென்னையின் வனப்பைக்
கூட்டுமிவ் வள்ளுவர் கோட்டக்
கோலமு மதனுள் குடிகொளும் குறணூல்
குறித்திடு நிகழ்ச்சிகள் அவைபார்!

துவளுறா தென்பின் தொடருக நடைக்குத்
துணையென வள்ளுவர் குறளில்
சொற்சுவை யின்பப் பாலினில் யான்சொல்
துலங்குமெய்ந் நயங்களைக் கேட்டுத்

தவளவெண் முறுவல் தாங்கினை யன்பே!
சற்றுநாம் விரைந்திடின் ஏரித்
தண்மடை வயல்சேர் சாலிநீள் அழகுத்
தகைமது ராந்தகம் புகுவோம்
அவணிலா தருகே அருங்குறட் பீடம்
அடைந்தன மாயினங் குருவாம்
அரியமெய்க் குறணூல் அருளுமெம் பெருமான்
அவன்புகழ் அறிகுவ மன்றே!

### 96. எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அறியு மாறுநின் திருவு ளத்திறம்
அடுத்த டுத்துநூல் அறிவு றுத்தவும்
சிறிது மோர்கிலார் தெரிய வெண்ணிலார்
சிறுமை யூனொடு மதுவ ருந்துவார்
மறுவொ ழித்துநூல் வழியி லிங்கிவர்
வாழு மாறருள் வழங்கி யாள்வையோ!
மறையெ னுந்திருக் குறளி னாலெமை
மனித ராக்கிடும் புனித வள்ளலே!

### 97. பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்
### (பாகனொடு கூறல்)

வள்ளக் கமலம் வாய்கூம்ப
மாலைக் கார்வான் மழைசிதற
வளரு முல்லைச் சுரும்பிசைக்கு
மயில்க ளாட மான்துள்ள
தெள்ளத் தெளிக்கும் குறளின்பம்
தெரிக்கும் பரிமே லழகருரைத்
தேனா ரின்பம் போனெஞ்சம்
தெவிட்டா மடவாள் யாமுரைத்த

உள்ளற் கரிய பருவந்தா
னுற்ற தோர்வாள் நம்வருகை
ஓயா தெண்ணி வழிபார்த்தே
உணர்வும் தேம்பித் தளராமுன்
அள்ளும் சிறப்பிற் பரிநுட்பம்
அறிந்த வலவா! விரைந்தூர்க!
அன்பிற் கினியாள் துன்பகன்றே
அகமு முகமு மலர்ந்திடவே.

98. பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அலர்ந்தபே ரறிவின் ஆய்வுகா ணென்பார்
அணுவொடு வாயுநீர்க் குண்டால்
அகிலமே புகையத் தீக்கிரை யாக்கி
அழிவுசெய் விலங்குக ளானார்
நலந்தரும் பாங்கில் அறிவிய லாய்வு
நடப்பதோ எண்ணிடிற் சிறிதாம்
நாசவே லைகளால் நாட்டினைக் குழப்பும்
நாணிலார் அவர்களு மனிதக்
குலந்திகழ் நெறியிற் கொள்கைகள் சிறந்து
கூடியிங் கொற்றுமை யமைதி
குலவுமின் புயரப் பொருள்வழி யறமும்
குறுகிடாக் கோலமெய் யறிவும்
கலந்துயர் ஒழுக்கக் காவல ராகிக்
களித்திடத் திருக்குறள் கண்டீர்!
கடம்படக் கைம்மா றுடன்படா துலகம்
காத்தருள் கருணைமா முகிலே!

### 99. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

முகிலென நெஞ்ச வானில் முப்பகை யரவுமாழ்கத்
தகவினி லிடித்து மின்னித் தண்மழை முப்பால் வீழ்த்தி
அகமுற அன்புச் செய்யுள் அறம்பொரு ளின்பம் காணும்
தகைதிரு வள்ளு வப்பேர்ச் சதுரநும் அடிகள் போற்றி!

### 100. கலிநிலைத்துறை

போற்று வார்கள்பல் கோடியர் பொதுமறை யிதன்சீர்
சாற்றி மெய்யருள் சாருநல் லன்பர்பல் கோடி
ஏற்ற நல்லுரை யீதென எவர்களும் போற்றத்
தேற்று வார்பல கோடியாய்ச் சிறந்ததிவ் வுலகே.

### 101. வாழ்த்து. நேரிசை வெண்பா

வாழிதிரு வள்ளுவனார் வண்ண மலரடிகள்
வாழி பொதுமறைச்சீர் வாழியவே! - ஏழிசையால்
எந்தை திருவடிகள் ஏத்துங் கலம்பகப்பாச்
செந்தமிழும் வாழ்க சிறந்து!



## திருவள்ளுவமாலை

வள்ளுவன் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி.

- மதுரைப் பாலாசிரியனார்

செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

- இறையனார்

ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் - போய்ஒருத்தர்
வாய்கேட்க நூல்உளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க் கேட்க வீற்றிருக்க லாம்.

- நல்லூர் நத்தத்தனார்



# திருவள்ளுவர் கலம்பகம்

## அரும்பொருள் விளக்கம்

### பாயிரம்

1. கலம்பகப்பா என்னும் பயிர் செழித்து வளர்வதற்குப் பொழிந்து வளர்ச்சி பெற உதவும் மழையாக ஆதிபகவன் அருள் செய்து உதுவுவான். என்பது பாடலின் பொருள். பெய்ம்முகில் ஏகதேச உருவகம். ஆதிபகவன் ஆகிய முழு முதற் கடவுள் அடியார் விரும்பிய வடிவத்தில் வ ந் து அருள் செய்வான். திருக்குறள் கடவுள் வாழ்த்தில் முதற் பாடலில் 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று குறிப்பிட்டிருத்தல் காணலாம்.

௨. அவையடக்கம்: திருவள்ளுவர் பெருமையை உள்ள வாறு அறிந்து கூறும் ஆற்றல் இல்லாதிருப்பினும் ஆர்வமே துணையாக இந்நூலைப் படைக்கப் புகுந்தது, திருவானைக்காவில் சிவபெருமான் சந்நிதியில் அருவுருவ வடிவான இலிங்கத்துக்கு மேலாகத் தன் வாய் நூலால் பந்தர் அமைத்த ஒரு சிலந்தியின் செயலுக்கே ஒக்கு மென்பது கருத்து. தன் அறியாமையாற் சிலந்தி புரிந்த செயலுக்கும் பலன் கிட்டியது. அச் சிலந்தி மறு பிறப்பில் கோச்செங்கணான் என்னும் புகழ்பெற்ற சோழ வேந்த னாகப் பிறந்தானென்பது சான்றோர் கருத்தாகும்.

> *சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழல் பந்தர் செய்து*
> *உலந்தவண் இறந்த போதே கோச்செங்க ணானுமாகக்*
> *கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்*
> *குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே.*
>
> — தேவாரம் 4-ந் திருமுறை

3. கலம்பக நூலைப் படைக்க உள்ளத்தில் எழுந்த நல்லுணர்ச்சிக்குக் காரணம், முற்பிறவி நல்வினைப் பயனேயாகும். நல்லறிஞர்கள் இம்முயற்சியைப் பாராட்டு வதோடு படைப்பில் ஆசிரியர் தம்மையும் அறியாது தவறு செய்திருப்பினும் அதனை மன்னித்து, சிறந்த கருத்துக்களைப் பாராட்டி மகிழ்வர் என்பது கருத்து.

4. தம்முடன் பழகுவார்கள் மாணவர் ஆகியோரிடம் இன்சொல் வழங்கித் தம் அருட்பார்வையால் தம் அன்பைக் காட்டுவதும் இயல்பாகக் கொண்டவர் குருகுலம் திருக்குறட்பீட முதற் குரவரான சிவத்திரு. **அழகரடிகளார்** திருவடிக் கமலங்கட்கு இக்கலம்பக நூல் காணிக்கையாகப் படைக்கப் பெறுவதாகும்.

## நூல்

1. மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா - இது தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்ற உறுப்புக்களைப் பெற்று வருவது. அவற்றுள் **தரவு:** உலகுயிர் - உலகத்திற் காணப்பெறும் அனைத்து உயிர்கள். உலவாச்சீர் - முடிவில்லாமல் பெருகிவருகின்ற சிறப்பு (3-ம் வரி முற்றுமோனை அமைந்தது). நிலம் - தமிழ் நிலம். நிறைந்துயரும் - பெருகி வளர்கின்ற. திருக்குறள் தமிழ் நிலத்தில் தோன்றினாலும் உலகப் பொது மறையாக விளங்குவது என்பது தெரிந்ததொன்று. செவ்வி பெறும் - சிறந்த பெருமையடையும். தெய்வ நலம் - உலகத்தை ஆட்கொள்ளும் தெய்வப் பண்பு. இருக்கு - வடமொழி வேதங்கள் நான்கனுள் முதலாயது. ஏனையவை யசுர் சாமம் அதர்வணம் என்பனவாம். இணையின்று - ஒப்பில்லாதது. அறிஞர்----பாட - திருக்குறளைப் போற்றிய மதுரைக் கடைச்சங்கப் புலவர்களின் **திருவள்ளுவ மாலையே** அதற்குச் சான்று. வாழ்வாங்கு

வாழுநெறி - இல்லறத்தில் வாழவேண்டிய அறநெறி. அன்பு சுரந்தளித்த - உலகத்தை அரவணைக்கும் நல்லருள் மிகுந்து வழங்கிய. தூமுனிவ - மேன்மையுடைய முனிவர் பெருமானே. கேட்டி - கேட்டருள்வீர்.

**தாழிசை:** நலம் குலையும் - வாழும் நெறி கெட்டலையும். கலம் கரையும் - கடலில் ஓடும் மரக்கலங்களைத் திசை காட்டி அழைக்கும். மணிவிளக்கு - நல்லொளி விளக்கு. திருமொழி - மேன்மை வாய்ந்த அருள் மொழி. முப்பொருள் - அறம் பொருள் இன்பம் ஆகிய முத்திறப் பொருட்கள். வீடு - வீடு பேறு. நவின்றது - சொல்லியது. இல்வாழ்க்கை அன்பின் அடிப்படையில் தொடங்கி வளர்ந்தால்தான் அருள்நிலையை எட்டமுடியும். முறையாக வாழ்க்கையை இல்வாழ்க்கையிலிருந்து தொடர்பவரே அறிவிற் சிறந்தாராவர். ஊன் - சிற்றுயிர்களின் மாமிசம். வாழாதிர் - வாழ வேண்டாம். அருட்பான்மை - ஓரறிவுயிர்கட்கும் அன்புகாட்டும் இரக்கவுணர்வு. செம்மைநலம் - அருள்மாறாத பண்பு. துறக்கம் - சுவர்க்க பூமி. வகுப்பது - தெளிவாகக் காட்டுவது. ஒப்புரவு - பிறருக்கு உதவும் பண்பு. விளைவுகளால் - செயல்களின் பண்பாட்டால். திருந்திடும் - செம்மையுறும். தெரிப்பது - விளங்கக் கூறுவது.

**அராகம்:** பல்கலை - பலநூற்பொருள்கள். இறையென - கடவுள் என்று. அருளினை - அருட்பண்பினைப் பெற்றுள்ளாய். அருமையில் எளிய - ஆய்ந்தறிவதற்கு அருமையாக இருப்பினும் உண்மையன்புக்கு வசப்பட்டுச் சாமானியருக்கும் வாய்க்கக்கூடிய எளிய நிலை. ('அருமையில் எளிய அழகே போற்றி' திருவாசகம் போற்றித் திருவகவல் 126) மடமைகள் - அறியாமை காரணமான செயல்கள். ஒருவினை - நீக்கியருளினை. ஒரு முதல் - ஒப்பற்ற முழு

முதற்சிவம். அடியிணை பாத மலர்கள். அம்மையப்பர் திருவடிகள் போலத் திருக்குறட்பாக்கள் இரண்டு வரி களால் ஆனவை. விடிவு இல - முடிவே யில்லாதன. முடிவுகள் - வழிவகைகள். முதுமொழி-பழமைமிக்க அருள் மொழிகள். நிறுவினை - குறள் வாயிலாக நிலை பெறு விதம்.

**தாழிசை:** தோட்டத்துப் பச்சிலை - குடியிருப்புக்குப்பின் னுள்ள தோட்டங்களில் எளிதாகவே கிடைப்பினும் அரிய நோய்களைப் போக்க வல்ல மூலிகைகள். சுரந்து - பெருகி யெழும் தன்மையதாகி. வாட்டத்தை-வருத்தத்தை. வண் குறள் - பொருள் வளம் சிறந்த குறட்பா. ஒரு மொழியே - ஒரு சொல்லே. ஏ கா ர ம் - தேற்றப்பொருள். தடுமாறி - மயக்க வுணர்வால் பேதலித்து. தாழுங்கால் - தொடங்கும் போது. உற்று அதனை - இடையிட்டு அக்குற்றத்தை. பிறவி மாட்சி-மானிடப்பிறவியின் பெருமை. இசை- புகழ். ஒப்புநிலை - கேட்பவர் நெ ஞ் ச ம் ஏற்றுக் கொள்ளும் நிலையில். சென்னெறி-செல்லத்தக்க வழி. செல்லுகென- செல்வீர் என்று. மன்னுயிர் - உலகில் வாழும் மக்கள். வழிப்படுத்தும் - தக்க வழியில் நடக்கச் செய்யும். மாண் குறள் - மாட்சிமை மிக்க குறண் மொழி

**அம்போதரங்கம்:** உள் நெகிழ - ம ன ம் க சி ந் து ரு க. உளத்துவகை-மனத்துக்கண் மகிழ்ச்சி. பழியெனைத்தும்- எல்லாக்குற்றங்களையும் வழியொதுங்க - வழி விட்டு. விலகிச் செல்ல. வகுத்தனை - விளக்கிக் காட்டினை. கற்பனைகள் - இயற்கைக்கு மாறான கருத்துக்கள். தற் பரம் - தனக்கெவரும் எதிரில்லாத முழுமுதல். தண்ணு லகம் - கடல் சூழ்ந்த நிலவுலகம். உலகம் அளந்ததென் பது திருக்குறள் உலக மக்கள் உள்ளங்களைத் தன் வசப்படுத்தியது. தகை - மேம்பாடு. தவம் - மனதை ஒரு

வழிப்படுத்தும் தன்மை. தண்உள்ளம் - எவ்வுயிர்க்கும் இரங்கும் அருள்மயமான நெஞ்சம். அமிர்து-சாவா மருந்தான அமிழ்தம் போன்ற திருக்குறள். அருள்வலம் - அருள்வழியால் உலகத்தை யாளும் வெற்றிப்பண்பு.

**தனிச்சொல்:** எனவாங்கு - இவ்வாறெல்லாம் நின்பெருமையைச் சொல்லி.

**சுரிதகம்:** கடவுள் முனிவ - தெய்வத் தன்மை வாய்ந்த முனிவர் பெருமானே. கழலடி - அன்பர் உள்ள மயக்கம் போக்கும் வீரத் திருவருள் பொலியும் அடிகள். பரவுதும் - போற்றி செய்வோம். மடன் உடைப்பிறவி - அறியாமை நிறைந்த மனிதப் பிறவி. மயக்கினில் - காம வெகுளி மயக்கம் எனும் குற்றத்தில். சென்ற நாள்-கடந்த காலம் ஒன்றிடு சிந்தை-பக்குவ முற்ற மனம். எதிர்நாள் - வருங் காலம். புதுமகிழ் - புதிதாகத் தோன்றும் மகிழ்ச்சி. சிறப்ப-மேம்பட. திருமறை-திருக்குறள். மெய்வகை - வகுத்துணர்த்தும் மெய்ப்பொருள். வினை தடுமாறா-செயல்களில் தவறுகள் உண்டாகாமல். பொற்பினில்-சிறந்த வழியில். நாளும்-எந்த நாளினும். பொலியும் - சிறந்து நடக்கும். சொற்பெறு வாழ்வு-பலரும் போற்றும் நல்வாழ்க்கை. சுகம் பெறல்பொருட்டே-நலம் பெறும் பொருட்டாகவே. ஈற்று ஏகாரம் தேற்றப் பொருட்டு. இது நேரிசை ஆசிரியப்பாவான் அமைந்தது.

2 சொற்பெருக - சுவையான சொற்கள் பெருகுமாறு அமைத்து. மரபு-வழிகள். சிற்றுணர்வேன்-மிகத் தாழ்ந்த அறிவுடையேன். தேவரே-திருவள்ளுவப் பெருமானாகிய தாங்களே. (ஏகாரம் தேற்றம்) உற்று-எழுந்தருளியிருந்து. சொல்லும் அவையனைத்தும்-பாட்டில் யான் சொல்லும் எல்லாக் கருத்துக்களையும். தொல்லறிஞர் - முதிர்ந்த

ஞானம் சான்றவர்கள். உள்ளமதும்-சிறந்த நெஞ்சங்களையும். வெல்லும் பொருள் ஆக்குவீர்-தன்வயப்படுத்தும் சிறந்த பொருள் ஆகச் செய்தருள்வீர்.

3. பொருட்டாக என்னையும்-அறிவில் தாழ்ந்த என்னையும் ஒரு பொருளாகக் கருதி. பொய்த்தலில்-பொய் வழியில் செலுத்தாத. முப்பால்-அறம் பொருள் இன்பமான மூன்று பகுதிகள். தெருட்டா-தெளிவுறுத்தி. நலங்கொளச் செய்து -நன்மை பெறும் வழிகளைக் காட்டி. அளித்தான்-அருள் கூர்ந்தான். செலும் மேய்புலத்து-மேய்ந்திடச் செல்லும் நிலத்தில். குருட்டாவும்.....கொள்கையென-பார்வையற்ற பசுவும் ஏனைய பசுக்களோடும் ஊர் வந்து சேரக் கோவலர்கள் கையாளும் தன்மையைப் போல. அருட்பால்-அருள்புரியும் தன்மையிலே. அந்தணன் ஆண்டகையே-அழகிய தட்பம் சான்ற உள்ளங்கொண்ட வள்ளுவப் பெருமானார். ஆண்டகை செய்தளித்தான் என முடிக்க.

4. ஆண்டகை - ஆண்மக்களிற் சிறந்தவன். அரும் பொருள்-அரிய கருத்துக்களையுடைய. அமைந்துறும்-பொருந்தியுள்ள. அணுவெனும் பயனிலாது-மிகச்சிறிதான அணு அளவுகூடப் பயன் இல்லாமல். ஐம்புலனும்-சுவை ஒளி ஓசை ஊறு நாற்றம் எனும் ஐந்தறிவுகளும். காண்டல் -காட்சி அளவையால் உண்மை உணரும் சிறப்பினைக் கருதி முதலாக வைக்கப்பட்டது. களிமகன்-கட்குடியன். பிறழா - மாறுபட்டு. கண்டதே காட்சி கொண்டதே கோலம்-மனம்போன போக்கு. இத்தொடர் உலக வழக்கில் கையாளப்படுவது. கருத்தினில் ஒழிந்தன - எண்ணும்படி வாழ்க்கையில் செயல்கள் நடந்தன. விரிதரு புலன்கள் - இடையீடின்றிச் செயல்களில் ஈடுபடும் ஐம்புலன்கள். மேவிட-அடையும் வண்ணம். 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக்கெடும் நோய்'. திருக். 360. மாசிலாமணி-குற்றமற்ற மாணிக்க மணி.

5. மாண்தரு-மாட்சிமை மிகுந்த. மும்மைத்தமிழ்-இயல் இசை நாடகம் எனும் மூவகைத்தமிழ். முடிமணி-தலைமையான சிறந்த பொருள். தேசு-புகழ். கதிர்முன் மின்மினி-சூரியன் ஒளிக்குமுன் மின்மினிப்பூச்சி. தெரிதரு-தெளியப்படுகின்ற. ஞாலநூல்-உலகில் வழங்கும் நூல்கள். ஆசு-குற்றம். குரு-வழிகாட்டும் நல்லாசிரியன். கருணைப் பெய்தவமுகில் - அருள்மழை பொழிகின்ற தவமுகில் போன்றவன். எம்இறையே-எமக்குக் கடவுளாக விளங்கும் பெருமானே.

6. இறுவதின்றி-முடிவே இல்லாமல். முக்குணச்செல்லல்-காம வெகுளி மயக்கம் எனும் மூன்றாலும் உண்டாகும் துன்பம். களைந்திடு-நீக்கியருளும். வள்ளலே-வரையாது வழங்கும் பெருமானே.

7. ஞாலமெல்லாம்-உலகம் அனைத்தும். வாழுமா-வாழ்ந்திடும் வகையில். மறைநூல் - பொதுமறை நூலினை. தெள்ளுசீர்-தெளிந்த புகழையுடைய. தேசிக-ஆசிரியப் பெருமானே. தெரிகிலோமை-அறியாத எமக்கு. 'ஐ' நான்கன் கருத்தில் வந்த இரண்டனுருபு. வேற்றுமை மயக்கம். கொள்வன-வாழ்க்கையில் ஏற்கத் தக்கவை. தவிர்வன-நீக்குதற் குரியவை. கொளுத்திய-அறிவுறுத்திய. சுடரே ஞான ஒளியே. (இருள் மனையில் இருட்டு நீங்க ஏற்றிய தீபம் போன்றவர் திருவள்ளுவர்) பெருந்தகாய்-அனைத்துப் புகழுக்கும் தகுதியானவரே. மறக்கிலோம்-மறந்திட மாட்டோம். ஏகாரம் அசை நிலை.

8 மேதக்கோனை - மேன்மைக்கெல்லாம் தகுந்தவனை. மெய்த்தமிழில்....விரித்தானை-மெய்யான நல்ல தமிழிலே திருமறைப் பொருள்களை விரிவாகச் சொல்லிய பெருமானை. தீதறுக்கவரின் - தீய செயல்களை ஒழித்தவர்களுடைய.

தெளிஞானச்சிந்தை-தெளிந்த அறிவுக்கிடமான மனம். உலவா-நீங்காத. செழுந்தேனை-சிறந்த தேன் போன்ற இனிய பண்புள்ளவனை. தேனைச் சுவைத்தவர்க்கு ஏனைய உணவுப் பொருள்களில் விருப்பம் எழாதது போலக் குறள் நூலைச் சுவைத்து அறிந்தார்க்குப் பிற நூல்களைக் கற்க ஆசையெழாது. ஏதப்படுமா - குற்றம் பொருந்தும் நிலையில். அறியா இறையோன்-அறிய முடியாத தெய்வம் போன்றவன். போதப்பொருள்-ஞானச்செல்வம். ஞாலம் திகழ்வார்-உலகத்தில் சிறந்து வாழ்வார்கள்.

9. வாரி - கடல். இனம் - மக்களின் இனப் பாகுபாடு. ஓர்கிலார்-அறிய மாட்டாதவர். தெரித்திடின்-விளக்குதற்கு முயன்றிடின். தீரமாறுபாடானவை-மக்களிடையே மாறுபாட்டுக் கருத்துக்கள் ஒழிந்திட. கூரும்ஓகை-மிக்க மகிழ்ச்சியோடு. குறள்நூலே. ஏகாரம் தேற்றப்பொருட்டு.

10 அன்றொரு கால் - பண்டைய காலத்தே. திருநெடுமால்...என்ன - திருமகள் கேள்வனாகிய மாயவன் வாமனன் ஆகி வந்து மாவலியிடத்தே மூவடி மண் வேண்டி யாசித்துப்பின் திரிவிக்ரமன் என்னும் பேருருவெடுத்து மூவுலகத்தையும் இரண்டு அடியாக அளந்தான் என்று சொல்வதை 'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பாவகை முடியத் தாவிய சேவடி' என்பது சிலம்புவரிகள். இக்கதையை நூல்கள் உரைப்பது மட்டும் அறிவோம். பார்த்ததில்லை. ஆனால் இரண்டடிகளால் ஆன திருக்குறள் உலகம் அனைத்தையும் தன்வசப் படுத்துவதைக் காட்சியளவையால் இன்று காண்கிறோம். இக்கருத்தினைத் திருவள்ளுவ மாலையிலும் காணலாம்.

11. வீர மறக் கொடியை - வீர மறவர் குலத்திற்பிறந்த பூங்கொடி போன்ற எங்கள் மகளை. நாடி - விரும்பி மணம்பேச. திருமுகம்- அஞ்சல்-ஓலை. தூதா-ஓலையைக்

கொணர்ந்த தூ த னே. நயப்புடனே - விருப்பத்தோடு. குறள்.... எளிதோ - திருக்குறள் நூல் முற்றும் கற்றுத் தெளிந்த எங்கள் குடியில் பெண் கொள்ளல் அவ்வளவு எளிய செயல் என்று நினைத்தாயா!. நங்கை - மங்கைப் பருவத்தினள் ஆகிய. கயற்கண் - கயல்மீனைப் போலக் கண்ணழகு படைத்த. தோள்வேட்டார்-தோளைத்தழுவி மணக்க விரும்பியவர். கானத்....பார்-எம்மோடு போரிட்டு இறந்து காட்டின் புறத்தே நடுகல்லாக ஆனதைப் போய்ப்பார். படைச் செருக்கில் - படையின் பலத்தால் எம்மோடு மோதி மாண்டுபோவது தான் ஆகுமே தவிர எம் குடியில் பெண் கொள்ளல் அரிதாகும் என்பதைப் போய்ச் சொல்லுவாயாக. (மறம் என்பது மறக் குடியில் பிறந்த பெண்ணை மணக்க விரும்பித் தூது விடுதலும் அதற்குப் பெண்ணுக் குடையோர் மறுத்துரைப்பதுமான ஒரு துறை)

12. வாயால் சுவைத்துண்ணத் தகுந்த தேன் போன்று கற்போர்க்கு இனிமைதரும் திருக்குறளைப் பயின்று இன்புற மாட்டாதார் பிற நூல்களைப் பயிலுதல் பக்குவ மாகக் கனிந்துள்ள கனியை விட்டுக் காயைக் கறித்து வருந்துவாரை ஒப்பர். 'இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' -திருக். 100.

13. இருமையும் - இம்மையில் புகழும் மறுமையில் வீட்டின்பமும். கையில் நெல்லியங்கனி - கையில் கண்ணுக்கு நன்கு புலனாக இருக்கும் நெல்லியின் அழகிய கனி.(கரதலாமலகம்.கரதல-ஆமலகம்). இல்லறத் தில் நெறிதவறாது நின்றார்க்கு இருமையும் சிறக்குமென் பது திருக்குறள் கருத்து.

14. காணும்-நூற்பொருளை ஆழ்ந்து காணும். வேணப் பொழுதும்-அளவில்லாத நாட்களும். விரைந்தோடின-

வேகமாகக் கழிந்தன. மேவும் - பொருந்தும். சேணும் திகழும்-வானம் எட்டும் புகழில் விளங்கும். மாணும்-மாட்சிமைமிக்க. நெஞ்சே! பயனில்லாத நூல்களைக் கற்று நாட்கள் வீணாயின. திருக்குறளில் ஒரு சொல்லையாயினும் நன்கு கற்று மகிழ்ச்சியோடு வாழ்வாயாக. திருக்குறளைப் பயின்றிட்டுப் பயனடைய வற்புறுத்துவது இது.

15. மானுடத்தை-மனிதப்பிறவியில் பிறந்துள்ள நிலைமையை. தகைமாண்-தகுதியில் மேம்பட்ட. சார்வாய் -பொருந்துவாயாக. விளங்கும் குறளை நன்கறிந்து நயங்களை நுகர்ந்தால் நம்மை இகழ்வாரை வென்று அவர்களை ஓடச் செயக்கூடும்.

16. உண்மையை ஆய்ந்தறியும் அறிவுக்கு இனிமை செய்பவரை; உண்மையை ஆய்ந்தறிய மாட்டாதவர்க்கு இனிமை தராதவரை; உள்ளத்துக்கு உவப்பூட்டும் தமிழ் மொழிக்கு உரிமை படைத்தவரை;அகந்தைமிக்க உள்ளத்தின்கண் கலவாதவரை; உலகத்தவர் போற்றும் தன்மை படைத்தவரை; பாவிகள் கூட்டத்தில் ஒட்டாதவரை; சொல்லப்படும் அன்பு மயமானவரை; பழுத்த தமிழால் அறியப்படும் அறம் பொருள் இன்பமாகிய மூன்று பொருட்சிறப்பை விரித்தவரை; சிறப்புமிக்க குறள்நூலை அருளிச் செய்தவரை; அன்பர்தம் சிந்தையில் வருத்தத்தை ஒழித்தவரை; தாமே முழுமுதற் சிவமாக இருப்பவரை; அன்பர்களைக் கீழான பிறவித்துன்பத்தில் நுழையாமல் காப்பவரை; குணம் நிறைந்த செந்நாப் போதார் என நாமம் பெற்றாரை; கீழ்மக்கள் உள்ளத்திற் புகுதாதவரை; அடைக்கலமாகி உண்மையறிவு பெறாதவர்கள்; அடையும் தீமை யாரால் அறிய முடியும்.

17. அறிவாலயம்-ஞானப் பெருங்கோயில். மனமொழி மெய்-கரணங்கள் மூன்றும். தெய்வய நிலைறிந்து-திருக்

குறளின் தெய்வத் தன்மை அறிந்து. செறியும் உண்மை அறிவின்பம்-நிறைந்த சச்சிதாநந்த வடிவமான. தெய்வம் அதனை-தெய்வமாகிய திருவள்ளுவரை. இறையும் தாழாது-சற்றும் தாமதியாது. இறைஞ்சிடுவார்-போற்றி செய்பவர். இருமைப் பயனுக்குரியார் - இம்மைப் புகழ் மறுமை வீட்டின்பத்துக்கு உரியராவார். ஏகாரம் ஈற்றசை

18. உலகில் இவர் தக்கவர் இவர் தகாதவர் என்பதெல் லாம் இல்லை. தாங்க முடியாத நீர் வேட்கை யுற்றவர் பாகுபாடு ஏதுமின்றி எல்லாரும் தெளிநீர் ஓடையில் நீரை அள்ளிப் பருகித் தாகவிடாய் தீர்வது போல திருவள்ளுவ ரின் திருக்குறளை உலக மாந்தர் அனைவரும் பெற்று இன்புறற்குரியர்.

19. திருவுறும்-செல்வம் வந்தடையும். கல்வி ஞானம்-கல்வியறிவு. புவியில் - இப்பூமியில். வாழ்வு.... தேசும்-வாழ்க்கையில் நல்ல புகழும் அதனால் பலர் பாராட்டும் பெருமையும் பெருகுவதாகும். வள்ளுவக் கடவுள் - திரு வள்ளுவராகிய தெய்வம். ஒண் தவத் திருவினர் - சிறந்த தவமாகிய செல்வம் பெற்றவர்கள்.

20. கடலோ இடைவிடாமல் ஒலிக்கிறது. அகன்ற வானத்தில் விளங்கும் கொடிய வெண்ணிலவு நெருப் பைப் பொழிகிறது. இளந் தென்றல் காற்று உடலை அறுக்கும் கொடிய வாளாக மாறிவிட்டதோ! ஒளிமிக்க அணிகள் அணிந்த என் தோழிகளே! நான் படும் வேத னையை அறிந்தீரில்லை. உலகவர்க்கு அளவில்லாத பயன் தருகின்ற முப்பாலாகிய குறளிலிருந்து ஒரு சொல் லையாவது எடுத்தோதி என் வருத்தத்தைப் போக்கு வீராக.! அருளை மறந்த தலைவர் என்னிடம் வந்து சேராத வரையில் யான் படும் துயரத்தை அறிவீராக!

21. செல்லல்-துயரம். செல்வ ராக்கினர்-செல்வமிக்கவ ராக்கினர். தேவர்-திருவள்ளுவர். அம்மா-வியப்பிடைச் சொல். நல்ல யாவும் - நல்ல செயல்கள் அனைத்தும். வாழ்வில் நணுகிடும்-வாழ்வினில் வந்து சேரும். நாலெ னும் பொருள்-அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு பொருள்கள். சீலமோடு-சிறப்போடு. ஈனமுறும் பகை-சிறுமை தரும் பகைவர்கள். யாரும் நம் உறவாயினர்-எல் லாருமே நம் சுற்றமாக அமைந்துவிட்டனர். அன்பி னால்.....நலத்திலே - அனைவரையும் அன்பினால் வெல் லும் நல்வழி வாய்த்துச் சிறக்கப் பெற்றோம். ஆன்ம நெறி ஒழுக்கமும் மேன்மையுற வாய்த்திட்டேம்.

22. அடிகேள் - பூசிக்கத்தக்க குருவே. மலயா நிலத் தின் அனல் - பொதியத்திலிருந்து வீசும் தென்றலாகிய நெருப்பு. கலவா-அதனோடு கலந்து. மதிப்பின் எறிதீ-நிலவு அதனை ஒட்டி எறியும் அனற் கதிர்கள். வெதுப்ப-சுட்டெரிக்க. கடல் ஒலிப்ப - கடல் அலைகள் ஓசையெ ழுப்ப மதனார்-மன்மதன். அலகால் - மலரம்புகளால். ஒறுக்கு முனம்-என் உயிரை அழிப்பதன் முன்பாக. திருக் குறளிலே பழுத்த அறிவால் - திருக்குறள் நூலைத் தாங் கள் கற்றறிந்த அறிவைக்கொண்டு. விலகா அருட்கண்-நீங்காமல் அருளைப் பொழியும் பார்வையோடு. மிகும் ஆதரத்தில்-மிகவும் ஆதரவு தரும் வண்ணம். இவட்கண் இனி விரைவீர் - எம் தலைவியிடம் விரைந்து வருவீராக. (இது தலைவன்பால் தோழி தலைவி நிலைமை கூறி யழைப்பதாக அமைந்த பாடல்)

23. என்னைத் தொடர்ந்து துன்புறுத்தும் தீவினையே! இனி உனக்கு இங்கு எந்த வேலையும் இல்லை! எம்மு டைய முனிவராகிய திருவள்ளுவர் திருவடிகளைச் சூடிச் சிறந்த நலங்கள் கைவரப் பெற்றோம். இனி நீ எம்மை விட்டுச் செல்வதே உனக்கு நல்வழியாகும். எ-று

24. நிலையில்லாத பொருட் செல்வமே சிறந்ததென்று கருதித் தாழ்ந்த செயல்களில் ஈடுபடும் சிறுமைகளைப் போக்கி மகிழ்ச்சி யடையலாம். மதுரைக் கடைச் சங்கப் புலவர்கள் ஞானம் நிறைந்து உண்மை நிலையை மனதிற் சேர்த்திடுமாறு புகழ்ந்து பாடிய திருவள்ளுவ மாலை போற்றிய திருவள்ளுவப் பெருமானுடைய புகழை ஓதுங்கள். ஒரு நூல்-நான்முகனார் முரண் தொடை.

25. ஓது குறள் - உலகம் புகழ்ந்தேத்தும் குறள் நூல். அறியான்-கட்குடியன் ஒருவன். குழறிடுவான்-போதையால் சொற்கள் தடுமாறிக் குழறுபவன். உணர்வு இல் விலங்கு-அறிவில்லாத விலங்கு. இகழ்ந்தெள்ளி-இகழ்ச்சியாக நகைத்துரைத்து. கண்டான்-அக்காட்சியை ஒரு களிமகன் கண்டான். தீதினிலே-இத் தீய ஒழுக்கத்தில். செருக்கி-மயக்கமுற்று. பாதகக்கள் - இழிந்த தீமையை விளைக்கும் கள். பாரறிய-அண்டையிலுள்ள பலபேரும் அறிய. பகர்ந்திட்டான்-உறுதியாகச் சூள் உரைத்தான்.

> 'கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
> உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.' — திருக். 930

26. பார் ஒடுங்கி உருகிட-உலகம் வெப்பத்தால் சுருங்கி உருகும்படி. பல்கதிர் - ஆயிரம் கிரணங்களையுடைய. பகலவன்-கதிரவன். பாலை-நீரும் நிழலுமற்ற பாலை நிலத்தின் வழியில். யாரொடும் கிளவாது - உறவினர் யாரோடும் சொல்லாமல். என் பின் வரும் அன்னமே - என் பிறகாகத் தொடர்து வரும் அன்னம் போன்ற என் காதலியே. ஈரமென்குறள்-உள்ளத்தில் இனிமை ஊட்டுகின்ற குறட் கருத்துகளின். நன்னயம் - நல்ல சுவைப் பொருள்கள். இளந்தளிர் உன்முகம்-மெல்லிய பூந்தளிர் போன்ற உன்னுடைய திருமுகம். மகிழ்ச்சி தெரித்தலால் - மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதால். சிந்தை

நோயும் - என்னுடைய சிந்தையில் உன் பொருட்டாகிய வருத்தமும். திசைப்புறம்போயது - திசைக்கப்பால் ஓடியது. ஏ. ஈற்றசை.

27. தேருமாறு - உண்மை அறியும்படி. செய்யுளூற்ற ஒண்பொருள் - திருக்குறட் செய்யுளிலே பொருந்தும் உயர்ந்த கருத்து. செப்பும் உண்மை - தெரிவிக்கும் உண்மைப் பொருள். இன்னதென்று - இத்தகைய தென்று. தெரிகிலார்-அறிய மாட்டாதவர். ஆர ஓர்ந்துளார்களாக-மிகவும் கற்றறிந்தவர்கள் போல. மேடை ஏறி - சொற்பொழிவுக்கான மேடைகளில் ஏறி. ஆர்த்தபின்-பெருங்குரலெடுத்துப் பேசிய பிறகு. ஆரவாரம் - பகட்டு ஆடம்பரம். அருவருக்கும் நிலையில்-மிகவும் இகழக்கூடிய நிலைமையில். அன்பில்-திகழுமாறு-உண்மை உயிரிரக்க நிலைமையில் பொருந்தி வாழும்படி. புரிதியோ-அருள்செய்ய மாட்டீரா! பொருவிலாத-ஒப்புவமையில்லாத. தெய்வமே-திருவள்ளுவத் தெய்வமே.

28. என்னுடைய மழலை மொழி போல்வதான சொற்களைப் பேசும் குயிற் பேடை ஒத்த மகள் திருக்குறள் முப்பால் சுவையை அறியாதவர் மனம்போலச் சிவந்த கதிரவன் நீங்காமல் எப்போதும் ஆட்சி புரியும் கொடிய பாலையில் அன்னியனான ஓர் ஆடவன் பின் என் நெஞ்சம் புண்ணுறச் செல்வதாகிய இச்செயல் என் தீவினையல்லவோ!

29. எண்மிகு மதம் - மிகப் பலவாகிய மதங்கள். விளக்கிடும் பொருளால்-போதிக்கின்ற கருத்துக்களால். மாறுபாடுறு சழக்குகள் - ஒன்றுக்கொன்று மாறுபடுவதால் உண்டாகும் குழப்பங்கள். நிதம் காண்பார் - தினமும் காண்பவர் இம்மக்கள். ஈறில் ஆதியம் பகவன் - ஆதியந்தம் இல்லாத முழுமுதற் கடவுள். இயலறம்.....திருக்

குறள் - இயல்பாக வாழ்வு அறமுதலாகத் தொடங்கிப் பொருள் சிறந்திடும் என்னும் திருக்குறள்.

30. இருக்கு முதலான வேதங்கள் மனுதர்ம சாத்திரம் இவற்றின் அடிப்படையில் நும் கருத்தைப் பரப்பச் சென்று வாதமிடும் புலவர்களே! நீங்கள் சொல்லும் வேதம் முதலானவை உலக மக்கள் யாவரும் நல்ல வகையில் அறிந்து தம் உள்ளம் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளக் கூடிய வையா? உலகில் காணப்படும் கோடிக்கணக்கான சாதி மக்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளக் கூடிய அளவில் உள் ளனவா? அவை குறிப்பிட்ட சில சாதியார்களின் பெரு மைகளைக் குறிப்பிட்டுப் பேசுவதை மறுக்க இயலுமா? முடியாதென்பதே தேற்றம். நீவிர் திருவள்ளுவர் செய் தருளிய திருக்குறளின் மாட்சிமைகளை அறிய வில்லை. உலக மக்கள் யாவரும் இந்நூல் எமக்கு உரியது எம்மு டைய செல்வம் என்று அதனைப் போற்றுவதை அறிந் தீரில்லை. உங்களுடைய குற்றமுள்ள நூற்பொருளைக் கேட்க விரும்பேம். விரைவில் இங்கிருந்து விலகிச் செல் வீராக.

> 'வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி'
>
> — மனோன்மணீயம்

31. ஆற்றல்-வல்லமை. மெலிவுறல்-தோற்றுப் போதல். அஞ்சியே-அந்த அச்சத்தினால். ஏட்டில் எழுதிலர்-ஏடு களில் எழுதி வைக்கவில்லை (வேதங்கள் எழுதாக் கிளவி என்பர்). நம்குறள்-நமது செல்வமான திருக்குறள். ஏட் டில் செழித்த பின் - ஏட்டில் எழுதப்பட்டதைக் கண்ட பின்னர். ஓதும் ஞாலத்து-சொல்லப்பட்ட இவ்வுலகத்தில், உயர்ந்திடும் ஆற்றல்-ஆற்றல் உயர்வதாயிற்று. ஆற்றல்-அறிவுச் செல்வம்.

32. படைப்பினில் - இயற்றும் நூல்களில். மெய்க் குரவர் - உண்மைப் பொருளான குரு. செய்யுள் செழுங் கருத்தொடு முழு வடிவும் - செழுமையான கருத்தைப் புகுத்துவதேயன்றிக் குறளின் முழு வடிவத்தையே. தோற் றிடல் - தோன்றுமாறு செய்யும் இச்செயல். அணி.... முறைமை-பொன்னால் நகை செய்பவர் அந் நகைகளுக்கு இடையில் ஒளிவீசும் இரத்தினங்களை இட்டு இழைத்துச் செய்யும் வழக்கம். தெரிப்பதாகும் - விளக்குவதாகும். மூவா-சிறப்புக் குறையாத. பண்டை இலக்கியங்களில் திருக்குறட் கருத்துக்கள் குறளின் முழு வடிவங்கள் அமைந்திருப்பதைக் காணலாம். கம்பர், சிவப்பிரகாசர், வள்ளலார் பாடல்களில் இவ்வழக்கம் மிகுதியாக இருத்தல் அறிக. 'முன்னோர் மொழி பொருளேயன்றி அவர்மொழி யும் பொன்னே போல் போற்றுவம்' -நன்னூல்.

33. இடைச்சியார் - இது கலம்பக உறுப்புக்களுள் ஒன்று. மதங்கியார், பிச்சியார், கொற்றியார் போன்றது. மூவினம்-பசு, எருமை, ஆடு. மறுகிடையே-தெருவழியே. காவியங்கண் - நீலோற்பலம் போன்ற கண்ணழகால். கட்டவிழ்க்கும்-நிலை குலையச் செய்யும். சிற்றிடைச்சி- சிறிய இடையினையுடையவள், இளைய ஆய்க்குல மகள். சிலேடை. முப்பால் - அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பகுதிகள். ஏனையிரண்டும் - உடலும் ஆவியும். உடல் பொருள் ஆவி என்பன முப்பொருள்கள்.

34. ஒன்றி-பொருந்தி. கரிப்பாய் - இனிமையின்றிச் சுவை மாறுபட்டு. துன்றும்-காணப்படும். இன்பம் கழியா- இனிமை குறையாத. கரும்பு அடியிற் சுவை தந்து மேலே போகப்போகச் சுவை குறையும். திருக்குறட்பாக்கள் முற்றுமே சுவை தரத்தக்கது.

35. காணார் பாந்தர் கண்கள் இருந்தும்-மனிதரிற்சிலர் கண்டறியத்தக்க கண்கள் பெற்றிருந்தும் உண்மையைக் கண்டறியமாட்டார். கலை-அறிவுப்பொருளான.முப்பால்-திருக்குறள். பேணார்-விரும்பிக் கடைப்பிடியார். பிழை ஏறி-தவறுகள் மிகுந்து. சேணார்-உயரம் மிகுந்த. கொம்பர்-மரக்கிளை. ஊக்கி-ஏற முனைந்து. சிதைவார்போல்-கீழ்வீழ்ந்து அழிபவரைப்போல. நாணாளும்-தினந்தோறும். நன்றல-நன்மையல்லாதவற்றை. 'நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின் உயிர்க்கிறுதி யாகிவிடும்.
- திருக். 476.

36. ஏறுமறைப்பொருளாளர்-உயர்ந்த திருக்குறளாகிய வேதத்தின் பொருளாக விளங்கினார். எண்ணுமவர்க்கு-உள்ளத்தால் நினைந்து போற்றும் அடியார்களுக்கு. அருளாளர் - அருள் புரியும் பெருமையுடையார். மாறுமவர்க்கு-ஒழுக்க நெறியில் மாறுபவர்க்கு. அரிதானார் - எட்ட முடியாதவர். மாறிலவர்க்கு-அன்பு மாறாதவர்க்கு. இனிதானார் - உள்ளத்துக்கு இனியவரானார். கொள்கை தரும் - வாழும் நெறிமுறை அருள்கின்ற. தேறும் நமக்கு - அவர் பெருமை யறிந்த நமக்கு. தேவரென-தேவர் என்று சொல்லும்படி. திரிவோம் - மகிழ்ந்து உலவுவோம். ஏ. ஈற்றசை.

37. தேர்ந்திட்டேம்-ஆய்ந்து அறிந்தோம். என்பார்-என்று பெருமைப்படும் தலைவர். இன்பக் கருங்குயிலே-மகிழ்ச்சி யூட்டும் கரிய குயிலே. நீ விரைக-நீ வேகமாய்ச் சென்று காண்பாயாக. சாரமாய் - விவரமாக. பிரிவு இதன் கண் - அவர் பிரிந்து சென்றிருக்கும் இந்த வேளையில். மாரவேள் - மன்மதன். தந்த மயல் - மலரம்புகள் தொடுத்து எனக்குத் தரும் துயரத்தை. இது குயில் விடு தூது.

38. புயலே அனையாய் - கைம்மாறு கருதாத மழை மேகம் போன்றவரே. புனத்தவர் பொற்கொடி - குறிஞ்சி

நிலத்தவரின் பொற்கொடி போன்ற மகள். செயலேறும்- அறச் செயல்கள் மேம்பட்ட. உயல் ஏறு-வாழ்வில் சிறப்பதற்கு ஏதுவாகிய. உரைக்குறள் - கருத்து நிறைந்த திருக்குறள். ஒண்மொழிச் செம்மை - அறிவின் ஒளி நிறைந்த மொழியின் சிறப்பு.

39. வேறா - அறிவு பிறிதாக. நாளும் - தினமும். ஒறுத்து-துன்பம் தந்து. வினை விளைவித்திடும்-துன்பம் உண்டாகச் செய்யும். ஐம்புலன்-சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய தன்மாத்திரைப் பகுதி. நீறா எனை ஆக்கு முன் - என்னை வதைத்துப் பொடியாக்குவதற்கு முன்பு. அடிகேள் - சுவாமிகளே. நிலை கொண்டிட-நிலையாக வாழ்வதற்குரிய. ஓர்வழி - ஒப்பற்ற மார்க்கம். நேடி- ஆய்ந்து. பேறா எணி - பெறுதற்குரிய செல்வமாக நினைத்து. நும் அடிகள்-தங்கள் திருவடிகளை. பெறுமாறு-அடையும் வகையில். எமை-அடியார்களாகிய எங்களை (எனை என்னாது எமை யென்றது தன் நிலையில் உள்ள பிறரையும் உளப்படுத்திச் சொன்னது) தேறார்கள் - தேர்ந்து உண்மை காணமாட்டாதவர்கள். மனம் திருவாக்கும் - மனத்தைச் சிறப்படையச் செய்தருளும். தகையே - சிறந்த மேலோனே.

40. உளத்தில்-சிறந்த மனத்தில். பா வந்து ஒதுங்கும்- பாடல்கள் வந்து வாழும். கற்பகமும் - (உம்மை சிறப்பு) எண்ணியதை அளிக்கும் கற்பக விருட்சமும். வழங்கிடுமோ - வழங்க வல்லதோ. 'ஓ' எதிர்மறைப் பொருள். முப்பொழுதும் - காலை பகல் மாலை ஆகிய மூன்று காலமும். நவில்வோம் - பாடி மகிழ்வோம். முப்பால் - திருக்குறளின் மூன்று பகுதிகள். பால் என்பதற்கேற்ப (அயில்வோம்) உண்டு மகிழ்வோம் என வந்தது.

*41.* அயில் எடுத்திடும் வேற்படையைக் கையில் ஏந்திய. காளை-இளம் பருவத்தினன் ஆன தலைவன். அருந்தமிழ்க் குலப்பாவை - அரிய தமிழ் மறவர் குடியிற் பிறந்த பதுமை போன்ற என் செல்வி. செயல் அடுத்த சீர் - செய்கை நிறைந்த சிறந்த தன்மையில். முதுக் குறைவு உற்றனள்-பேரறிவு வாய்ந்தனள். திரும்பினள் துணையோடும் - தன் துணைவனான தலைவனோடும். நம் இல்லம் நோக்கி வந்து சேர்ந்தனள். பெருநாவலர்-திருவள்ளுவர். பயின்றுளார்-கற்றுத் தேர்ந்தவர். மகிழ்வு எல்லாம்-அடையும் மகிழ்ச்சி அத்தனையும். இயலும்-பொருந்துகின்ற. நெஞ்சினேன் - நெஞ்சம் உடையவளாகி மகிழ்ந்தேன். இடர் இலை - துயரம் ஏதும் இல்லை. இவர் வாழ்வு - இவ்விருவர் வாழ்க்கையும். இன்புறும்-இன்ப மயமாகும். (இல்லத்திலிருந்து காதலன் பின் சென்ற தலைவி தலைவனுடன் திரும்பியதால் செவிலி தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்தினாள்)

*42.* வேள்வியால்-யாகம் செய்வதற்குரிய இலக்கணத்தால். விதித்த தென்ன - பொருந்துவ தென்று சொல்லிய படி. விழுக்கினை உண்குவார்-மாமிசங்களை உண்பார்கள். பாதகச் சமயங்களில் பட்டிலேம் - தீமை மிகுந்த சமய நெறிகளில் தொடர்பு கொண்டிலம். பாருளார்...ஓம்பிட - இம்மண்ணிற் பிறந்த அனைவரும் உள்ளன்போடு ஒருவரோ டொருவர் மனங்கலந்து சிற்றுயிர்களைப் பாது காத்தும் வாழ. காட்டும்-வழிகளை உணர்த்தும். கான் மலர் ஓதுவார் செலும் ஒண்நெறி-திருவடிகளைப் போற்றி வாழ்பவர் செல்லும் சிறந்த வழியில். உய்ந்தனம் - தவறான வழியிலிருந்து தப்பினோம். உயர்ந்தோம் - உயர்ந்தவர் என்னும் நிலையை அடைந்தோம்.

*43.* உலகுடன் - உலகப் பகுதி அனைத்திலும். புகழ் பெறும் - புகழ் அடைந்து உயர்ந்த. மலிந்து ஏத்துமின் -

மிகுதியாகப் போற்றுவீராக. இலகு....ஆர்க்கவே - விளங்கும் உண்மை ஞானப் பொருள் அறிந்து சிறக்கும் நிலைமையை அடைந்து மகிழ்ச்சியில் உள்ளம் திளைக்கும்படி.

44. ஆர்க்கும் - ஆரவாரிக்கும். முப்பகை - காம வெகுளி மயக்கமாகிய மூன்று உயிர்ப்பகைகள். கெடும் இடம் - அழியும் அந்த இடமே. அணியதாம் - நெருங்கி வருவது. வீடு என்று - மோட்ச இன்பம் என்று (ஏ.தேற்றம்). தீர்க்கமாக - உறுதியாக (ஏ.தேற்றம்). அடிகள் நீர் - நல்லாசிரியர் ஆகிய தாங்கள். கண்டேம்-கற்றறிந்தோம். ஈர்க்கும் - பற்றித் தம்பால் நம்மை இழுக்கின்ற. கொடியவே-தீமை மிக்கனவே (ஏ.தேற்றம்). அவை போக்கும்-அம் முப்பகையை ஒழிக்கும். மார்க்கம் ஒன்றையும் - தக்கதொரு வழியையும். வாழ்ந்திடப் புரிவீர் - வாழ்ந்திடுமாறு அருள் புரிந்தருள்வீராக.

45. என் நெஞ்சமே! நீ விரும்புவதோ திருவள்ளுவரின் மேன்மைமிக்க திருவடி மலர்கள். அறிந்து மகிழ்வதும் திருக்குறள் மறையின் செம்மையான கருத்துக்கள். உன்னை விட்டு விலகி ஓடப் போவதோ துயரம் மிகுந்த தீய வினை. அங்ஙன மிருப்பவும் நீ அஞ்சுவதற்கு யாதுளது! நின் அச்சம் வியப்பினைத் தருவதாகும்.

46. எங்கள் உள்ளமே ஊசற்குரிய பலகையாகவும் உயர்ந்த தன்மையுடைய அன்பின் நிறைவு, நல்லறிவு, தக்கவற்றை ஆய்ந்து ஏற்கும் பண்பு, ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தல் ஆகிய நான்குமே ஊசலுக்குரிய கயிறுகளாக, நல்லவற்றை உடைமையாகக் கொள்ளும் கொள்கை என்னும் விட்டத்தில் கட்டித் தொங்கவிட்ட விளங்கும் இரத்தினங்கள் இழைத்த ஊசலிலே அமர்ந்து, ஒளிவீசும் குண்டலங்கள் அசைந்தாடவும் ஞானிகள் வாழ்த்தும் வாழ்த்தொலிகள் வானம் சென்று பரவவும். அழகுமிக்

தும் சுவைக் கருத்துக்கள் உடையதுமான திருக்குறளைத் தந்த பெருமானே! ஊசல் ஆடுவீராக அன்புமிக்க செந் நாப்போதார் என்னும் பெருமானே! ஊசல் ஆடுவீராக!

47. ஊசல் எனும்படி-மேலும் கீழுமாகச் சென்றுவரும் ஊசலின் தன்மை போல. ஓது - சொல்லப்படும். பவம் பல-பல பிறவிகள். ஊறு விளைத்ததும் - இதுவரை துன் பம் விளைத்த செயல்கள். ஓயாதோ - நின்றிடாவோ. ஆசை அதன்வழி-ஆசையின் காரணமாக. ஆகு கொடுந் துயர் - நேரும் கொடிய துயர்கள். ஆயிரம் ஆயிரம் - பல ஆயிரக் கணக்கானவை. மாயாவோ - ஒழிந்திடாவோ. நிலைத்திடு-உறுதியான. நேர்வழி - நேர்மையான வழி. செலல்-செல்லும் நடைமுறையை. காணாயோ - காண மாட்டாயா. மாசுறு நெஞ்சு - குற்றமுள்ள நெஞ்சே (அண்மை விளி). உனை மாண வழுத்துவன்-உன்னை மிகவும் வேண்டுவேன். நேசமுடன் குறள் ஓதி - அன்பு டன் திருக்குறளை ஓதி. நிலைத்திடு நேர்வழியே செலல் காணாயோ - நிலையானதும் நேர்மையுள்ளதுமான நல் வழியே செல்வதைச் செயலிற் காண மாட்டாயா. மாநிதி கண்டிது வாழ்வாயே - சிறந்த செல்வம் போன்ற இவ்வழி யுணர்ந்து வாழ்வாயாக.

48. நித்தர் - என்றுமுள்ள கடவுள் ஒப்பவர். நின்ற ஊர் - இருந்திடும் ஊர். சிலர் மதுரை என்பர். சிலர் அதனை மறுத்து மயிலை என்பார்கள். வீடுபேறு தரும் கயிலாயம், திருமால் வாழும் பாற்கடல், பிரமனுடைய சத்தியலோகம், இந்திரன் வாழும் அமராவதி ஆகிய பதி களில் வாழ்ந்தாரென்று அவரவர் விருப்பம் போலச் சொன் னாலும் எதுவும் பொருந்தாது. திருவள்ளுவர் விருப்புத் தோடு வாழும் இடம் அவரைப் பத்தியோடு பரவித் துதிக் கும் அடியவருடைய இதயங்களே ஆகும்.

49. தோழி கூறுவது. 'மன்னவரே! பிரிந்து செல்வது ஒரு மேன்மையான செயலாக நினைந்துள்ளீர். இது மேன்மையான செயல் ஆகாது. முன் நாளிலே இளமைப் பருவத்தினள் ஆன எங்கள் தலைவியின் உள்ளத்தில் புகுந்து மகிழ்ச்சி தந்த தாங்கள் இன்று துன்பத்தையே தருவது பொருத்த மாகுமா! காதலின் உண்மைப் பொரு ளை நீர் அறிய வேண்டிய காலம் இதுவாகும் அறிவீராக! நம்முடைய குறள்நூல் ஓதுகின்ற இன்ப நெறியின் சிறப் பினை இப்படிப்பட்டதென்று அதனை ஓதி யுணர்வீராக!

50. தேவர்களே போற்றி ஏத்துகின்ற தெய்வப் புலவ ரான திருவள்ளுவப் பெருமான் அருளிய திருக்குறளின் பொருட்சுவையை ஆய்ந்தறிந்தோம். இவ்விடத்தே இனி யாம் ஐந்தருக்கள் நிறைந்த தேவருலகம் சென்று வாழ வழிகாட்டும் கற்பனை நிறைந்த எந்த நூலையும் விரும்ப மாட்டோம். அப்பெருமான் அறிவுறுத்திய நல் வழியில் விருப்பத்தோடு இல்லறக் கடமையை ஆற்றி அதன் பயனாக உயர்ந்த வீடு பேற்றையும் பெறுவோம். உண்மையாகவே இந்த வெற்றி வாய்ப்பினைப் பெற்று விட்டோம். ஏகாரம் தேற்றம்.

51. தங்கள் நல்லுரையே உண்மைப் பொருளான தமிழ்மறையாகும். நும் சிறந்த திருவடிகள் மண்ணில் படுமாயின் அந்த மண் எம் பிறவியைப் போக்கும் நல்ல மருந்தாகும். தங்கள் கண்களிலிருந்து வெளிப்படும் பார்வை, யமனை வெல்லும் கவசமாகும். பண்ணிசை - பண் இனிமை வாய்ந்த. முப்பால்...பாவலரே-திருக்குறள் படைத்து எம்மை ஆட்கொள்ளும் பாவலராகிய பெருமானே.

52. பொதுமறை தந்த தேவே - திருக்குறளைத் தந்த தெய்வம் போன்றவரே. இல்லறத்தினார்க்கே - இல்லறம் மேற்கொண்டவர்க்கே. பயின்றிடும் இருமை-இம்மையில்

புகழும் மறுமையில் துறக்க இன்பமும் பொருந்தும். வீடும் திண்ணம் - துறக்க இன்பத்துக்கு மேலாகிய வீடுபேறும் உறுதியாகக் கிடைத்திடும். என்று அறிவித்தற்கே-என்று உலக மாந்தர்க்குத் தெரிவிக்கும் பொருட்டே. புவியில் வாழ்க்கை நண்ணினீர் - மண்ணுலகத்தில் இல்லற வாழ்க்கையிற் பொருந்தினீர். வாசுகிப்பேர்-வாசுகி என்னும் திருநாமம் படைத்த. நம்குலதெய்வத்தோடும்-எம் குலதெய்வம் போன்ற பெருமாட்டி யோடும். புண்ணியர் போற்ற வாழ்ந்தீர்-புண்ணியமிக்க மேலோர் போற்றும்படி வாழ்ந்தீர். (எ-று)

53. பாவில் பகர்ந்துவரு-பாட்டாகப் பாடி வருகின்ற. பாண கேள்-பாணனே யான் செல்வதைக் கேட்பாயாக. காவில் போய் - அவர் தங்கியுள்ள பூங்காவுக்குச் சென்று. அன்பர்....இன்று-உண்மை யன்புடையவ ரென்று சொல்லிக் கொண்டு மாறாக நடப்பவரிடம் சென்று பொதுமறையில் கூறும் உண்மை அன்புநெறி இத்தகையதென்று இன்று நீ கூறுவாயாக.

54. இன்னகைச்சிறு மான்பிணை-இனிய நகை முகத்தையுடைய சிறிய பெண் மானை ஒத்த எம் தலைவி. நீ தரும்-நீ கொணர்ந்து தந்த. இளந்தளிர் - பசுந்தழை. மோந்து-நாசியால் மணத்தை நுகர்ந்து. மன்னு...மலர்ச்சி-சிறந்த தன் மார்பினும் முகத்தினும் கண்ணினும் தழுவியணைத்திடு மகிழ்ச்சிப் பெருக்கு. மெய்க்குறள்....போன்றதாம் - உண்மைப் பெருநூலான திருக்குறளை முன் அளித்தருளிய திருவள்ளுவர்தம் செம்மை வாய்ந்த திருவடிக்கண் சேவித்து வீழ்ந்து தம்மையே மறந்திடும் நெஞ்சம் படைத்த அடியாருடைய உருக்கமான செயலையே ஒத்ததாகும். சாற்றிடின் வேறுண்டோ-விவரிக்க வேறு என்ன உள்ளது.

55 அம்மானை - மூன்று பெண்கள் ஒரு பொருளைக் குறித்துத் தம் கருத்தைப் பாடி மகிழ்வதாகும். முதலாமவள் ஒரு சிறந்த கருத்தினைச் சொல்வாள். இரண்டாமவள் அதில் ஓர் ஐயத்தை எழுப்புவள். மூன்றாமவள் அவ் வையத்தைப் போக்குவள். **முதலாமவள்:** சொல்லப் படும் கடைச் சங்கப் புலவர்கள் அனைவரும் சிறப்பினில் தாழ்ந்து ஒதுங்க சங்கப் பலகை மெய்ப் பொருளான திருக் குறளைத் தன்பால் ஏற்றது என்றாள். **இரண்டாமவள்:** சங்கப் பலகை அங்ஙனம் ஏற்றதாயின் அப்புலவர்கள் உள்ளத்தில் மாறுபட்டு எழுந்த சினத்தால் திருவள்ளு வரை ஏதாவது வசைமொழி கூறி வெறுத்தார்களா? என் றாள். **மூன்றாமவள்:** திருவள்ளுவர்க்கு அவர்கள் மாலை சூட்டிப் போற்றி வாழ்த்தினர் என்றாள். மாலை என்பது பூமாலையையும், அவர்கள் வாழ்த்து நிறைந்த **திருவள் ளுவ மாலையையும்** சுட்டுவதாகும். இவ்வரி சிலேடை யால் அமைந்தது.

56. வகுத்த தெல்லாம் - சொல்லியிருப்ப தெல்லாம். தெள்ளுமொரு குடிமகற்கும் - தெளிவாக இல்லறவாசி யான ஒரு தனி மனிதனுக்கும். சிறந்தமையும்-சிறப்பாகப் பொருந்துவதாம். திறத்தாலே-இவ்வகையினால். திருந்து வாழ்வில்-திருத்தமான இல்லற வாழ்விலே. எள்ளல் இலாது-இகழ்ந்தொதுக்கும் இடம் இன்றி. எத்திறத்தும்-எந்த வகையிலும். இசையும் - பொருந்துவதான. இந் நூல்-இத் திருக்குறள் நூல். விள்ளும்-உணர்த்தும். உரை நயங்களில்-உரையின் சுவைப் பொருள்களில். வியன் உல கர் - பரந்து விரிந்த உலக மாந்தர். படிந்திட - ஆழ்ந்து நுகர்ந்திட (ஏ.அசை). விரைதல் காணீர் - முந்துதல் காண்பீராக.

57. வீழ்ந்தான்-மறைந்தான். படிந்தறியார்-ஆழ்ந்து கருத்துக்களைத் தேராதவர்கள். கரிந்த - சுவையற்றுத்

திரிந்த. கடுகிற்று-விரைந்து பரவிற்று.எழுந்த முழுமதியும்-தோன்றிய முழுநிலவும். திருந்து முப்பால் - திருத்தமான திருக்குறளின். வழிச்செல்லார் - வழியில் வாழாதவர். செய்கை எனவே தீச்சொரியும்-செயலே போல நெருப்பை வீசா நிற்கும். என் நோய்க்கு மருந்து காணேன்-என் விரகநோய்க்குத் தக்க மருந்தைக் காணேன். மறந்தார் அவரும் துறந்தார்-தலைவரும் என்னை மறந்து விட்டே கினார். ஏ. அசை.

58. தாரகை-விண்மீன். கூடல் இழைத்து - மணலில் சுழித்து எழுதிப்பார்க்கும் ஒரு நிலை. (கண்ணைமூடியபடி வளைவாகச் சுழித்து சுழியின் கடைசி முதலோடு ஒட்டு மாயின் நலம். இல்லையெனில் தீது எனப்பார்ப்பது.) அன்னை-அன்னை போலும் தலைவியே(அண்மைவிளி) தேருநர் - ஆய்ந்தறிபவர். சேயிழையே நமர் வந்தனர்-செம்மையான அணிகள் அணிந்த தலைவியே நம்பெருமான் வந்து விட்டார். கவலற்க.

59. குறம்-கலம்பக உறுப்பு. குறத்தி குறி சொல்லுதல். மலையருவிகள் பெருகி வழியும் செந்தமிழ் பிறந்த பொதிய மலையில் வாழ்ந்திடும், குறத்தியாகிய என் மொழிகள் எப்போதும் பொய்த்ததில்லை. யான் உடுக்கப் பழைய சேலையொன்று தருக! உணவளித்து என் பசியையும் தணித்திடுக! பைங்கிளியை ஒத்த உன் உள்ளங்கையில் உள்ள நேர்மை தவறாத ரேகைகள் செந்தமிழருடைய செல்வம் போன்ற திருக்குறளைத் தேர்ந்தறிந்த ஆடவன் ஒருவன் உன்னை மணந்து உன் தோளை அணைவான் என்ற மெய்யான கருத்தைத் தெரிவிக்கின்றன. என்னுடைய இந்த மொழி தப்புவதாயின் இனி நான் எவ்விடத்தும் குறி சொல்வதில்லை. இச் சத்திய வார்த்தையை நீ அறிவாயாக. (இஃது பாட்டின் பொழிப்பு)

60. புயவகுப்பு. பாட்டுடைத் தலைவன் புயங்களின் பெருமை பேசுதல்.

(பொழிப்பு)சிறந்த திருவள்ளுவப் பெருமான்றன் பெருமை மிக்க தோள்கள், தவச்செல்வம் வாய்ந்த ஞானியர்களு டைய சிந்தைக்கு உவப்பு ஊட்டுவனவாகும். சிந்தனை யில் நேர்மைமிக்கவருடைய அன்பினுக்கு மகிழ்ந்தன. பெரிய நிலவுலகம் குற்றம் நீங்கிச் சிறந்திட முழுவதும் காத்தளித்தன. உண்மையை அறியமாட்டாத தாழ்ந்த வர்களின் உள்ளத்துக்கு எட்டாமல் நீங்கின. வஞ்சகர் செயல்களை அறிந்து அவற்றைக் கடிந்து ஒழித்தன. கல்வியில் சிறந்திடாத என்னுடைய கவிகளையும் காத்த ளிக்க விரும்பின. தெய்வமணம் பொருந்திய திருநீற்றோடு சந்தனமும் பூசி மகிழ்ந்தன. (எ-று)

61. வள்ளுவனார் உள்ளமறிந்து குறளுக்கு உரை பகர்ந்த பதின்மர் அவராவார்: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, பரிமேலழகர், மல்லர், கவிப் பெருமாள், காலிங்கர், திருமலையார் என்றவராவார். இவ ருள், மணக்குடவர், பரிதி, பரிப்பெருமாள் காலிங்கர், பரி மேலழகர் இவர்கள் உரையே அதிக அளவில் பயிலப் படுவன. மற்றவர் உரை அருகியே காணப்படுவன.

62. மலியும் பிறவி-மிகப் பெருகும் பிறவிகளின். மருந்-தாகும்-அவற்றை ஒழிக்கும் மருந்தாகும். வாழ்க்கை நெறிக்கு-வையத்துள் வாழ்வாங்கு வாழும் முறைக்கு. கலி-துன்பம் தரும். முப்பகை - காம வெகுளி மயக்கமா கிய மூன்று பகைகள். இருமை நலம் - இம்மையிற் புகழ் மறுமையில் வீடு ஆகிய நலம். தலைமை கொள்ள-மொழி யறிவில் முதன்மை பெற. உலகனைத்தும்-எல்லா உலக மக்களும். சாற்றும் பெருமை-புகழும் மாட்சிமை. மலைவு போக்கும்-நெஞ்சின் தடுமாற்றத்தை நீக்கும். வள்ளுவர்

வாய் மலர்ந்த தெய்வத் திருமறையே - வள்ளுவப் பெரு மான் திருவாய் மலர்ந்த தெய்வத் திருமறை எனப்படும் திருக்குறளே. ஏகாரம். மற்ற எதற்கும் இல்லாத பெருமை எனப் பிரிநிலையும் தேற்றமாகிய இரண்டும் தருவதாகும்.

63. பிறர்தமக்குப் பேசலுண்டோ - பிறருக்கு உள்ள தாகப் பேச இடமுண்டோ. அரிதரிது மானிடராய்ப் பிறத் தல் என்பது அவ்வைப் பிராட்டி வாக்கு. மானிடப் பிறவி வாய்ந்தவர் மட்டுமே தெய்வத் திருக்குறளை உணர்ந்து இன்புறக்கூடும் என்பதால் பிராட்டி இவ்வாறு சொல்லியி ருக்கக் கூடும் என்பது கருத்து.

64. ஆய்ந்தறியும் மாட்சிமை இல்லாத சிலர் 2000 ஆண்டுகளுக்கு மிகவும் முற்பட்டதும் முனைவன் கண்ட முதல்நூல் எனப் பெருமை பெற்றதுமாகிய திருக்குறள் வடவர் நூல்களைப் (அர்த்த சாத்திரம் போன்றவை) பின் பற்றி எழுந்தது என்று கூறியதும் உண்டு. இது அறிவும் அனுபவமும் முதிர்ந்த பாட்டனார் தம் பேரனிடம் மொழி யறிவு பெற வந்தான் என்பதையே ஒக்குமன்றோ என்க.

65. புயல்நேர் - வரையாது வழங்கும் மேகத்துக்கு ஒப் பான. வந்தியா-வழிபாடு செய்து. வணங்கி - நிலத்திற் படிந்து வணங்கி. பிறதேவர்-ஏனைய கடவுளார் வழியில். மானுடர்-மனிதப்பிறவி வாய்த்தவர். இருந்துயர் - பெரு கிய துயரம். உழப்பது-துன்புறுவது. இயல்போ-பொருந் துவதாகுமா! ஆகாது என்பது கருத்து.

66. செய்த சில புண்ணியங்களால் சில காலம் சுவர்க் கத்தில் தங்கிச் சுகித்து அந்தப் புண்ணியம் செலவான பின்னர் மண்ணுலகில் வந்து பிறந்து வாடும் இமையவர் வாழும் வாழ்வும் சிறப்பென்று சொல்ல முடியுமா! உலகில் பிறந்து அறம் பொருள் இன்ப நெறிகளில் முறையே

வாழச் செய்து பிறகு நிரந்தரமான வீட்டின்பமும் தரும் திருக்குறள் நூல் நமக்குத் தரும் மண்ணுலக வாழ்வே போற்றுதற்குரிய நல்வாழ்வு என்று கொள்ளத் தகும்.

67. படைப்புக்குரிய பிரமன் அல்லன். விளங்கும் துழாய் மாலை சூடிய காத்தற் றொழிலுக்குரிய திருமால் அல்லன். அழித்தற் கடவுள் எனப்படும் வெள்ளிய இடபம் ஊர்கின்ற உருத்திரனும் அல்லன். சொல்லப்பட்ட சிறப்பினையுடைய இம் மூவருக்கும் திருவருள் புரிந்து உலகத்தில் முத்தொழில் எப்பொழுதும் சிறப்பாக நடைபெறும் வண்ணம் காத்தளிக்கும் ஒப்பற்ற **முழுமுதற் சிவமே திருவள்ளுவர்** எனப்படும் பெரியோன் ஆகி அருட் கடலாக இருப்பதை, நன்றறியும் ஞானப் பெருமக்கள் ஆய்ந்துணர வல்லார்க்குச் சொல்லியருளியதுண்டு.

68. அழகு சிறந்த தாமரை நம் கண்களுக்கு அழகைக் கூட்டுவதாகும். வெள்ளிய முழு நிலவு விண்ணுக்கு அழகூட்டுவதாகும். நெற்பயிர் அசைந்தாடும் அகன்ற மருத நில வயல்கள் மண்ணுக்கு அழகு தருவதாகும். இவை போல மாந்தர் பகுத்துணர்வுக்கு அழகு தருவது திருக்குறள் என்று அறிஞர் கூறுவர். ஏ. ஈற்றசை

69. என்பவம்-என் பிறவிகள். பார்க்கில்-கணக்கிட்டு ஒப்பிட்டுப் பார்த்தால் ஏழு கடல்களும் சிறிதாகத் தோற்று விடும். இந்தப் பிறவியில் ஏதோ முன்பிறவியில் யான் செய்த புண்ணியம் உதவியதால் தலைவராகிய பெருமானே உன் பெருமையை விரும்பினேன். அன்பின் பெருமை இத்தகைத் தென்று அளந்துரைத்த பெரியோனே நீ அதனை அறிவாய். இக் காரணத்தால், திருக்குறள் அருளிய பெருமானே! எனக்கு நல்லதான செம்பொருளை அருள்வீராக.

70. கடல் போன்று விரிந்து பரந்த நின் பெருமை யனைத்தையும் மேலு மேலும் எண்ணி முகந்தெடுத்து, அறியாமை மிக்க அடியேன் என்றன் மிகச் சிறிய உள்ளத்தில் வைத்தற் கறியாமல் திகைக்கின்றேன். அதனால் தெய்வப் புலவரே! திருக்குறளை மக்கள் நலம் கருதி யளித்த பெருமானே! ஒருசேர நும் அளவிட முடியாத புகழ் அனைத்தையும் ஒருங்கு வைத்தற்குரிய அளவான் அகன்றதொரு பேருள்ளத்தை எனக்கு அருள்புரிவீராக. கண்டாய்-முன்னிலை அசைச் சொல்.

71. பெருநாவலர் - திருவள்ளுவர். பீடு இசைந்தார்-பெருமை யடைந்தவர்கள். தருமாண் நலத்தொடு-வரையாது வழங்கும் கற்பகம் போன்ற உபகாரம் செய்யும் உள்ளத்தோடு. அருகாது செயலில் குன்றாது. உள் உருகா-உள்ளம் என்றும் உருக்கத்தில் சிறந்து. ஒப்புமை-உவமையாகச் சொல்லத் தக்கது.

72. ஓதும்-உலகத்தவரால் பெருமையாகப் பேசப்படும். ஒன்றேனும் - ஒரு செய்யுளாகிலும். ஓதார் - சொல்லாதவர். தீதுற்று-தீமை மிகுந்து. மேகம் - மழை மேகமே. அண்மைவிளி. செவிக் கொள்வையோ-பொறுமையாகக் கேட்க வல்லாயோ. குயிற்பேடை - குயிற் பேடையை ஒத்த தலைவி. காணப் பொறாள்-கண்டு மனம் பொறுக்க மாட்டாள். முன்-அவளுக்கு முன்பாக. கனைத்து ஏறி-இடியோசை காட்டிப் படர்ந்து சென்று. ஏதம் கொள-அவள் துன்பம் அடையும்படி. சேறல்-செல்லுதல். செல் + தல். முதல் எழுத்து நீண்டு புணர்ந்தது. இடம் சூழ இன்னாமை யன்றோ-அந்த இடத்தில் துன்பம் விளையுமன்றோ. ஏ. அசை.

73. கொள்ளப் படுவன - இல்லற வாழ்வுக்குப் பொருந்துமென்று ஏற்றுக் கொள்ளப்படும் செயல்கள். தள்ளப்

படுவன - ஏற்காதென்று ஒதுக்கும் செயல்கள். குறுகா தொழிவன-வாழ்வில் நெருங்காது ஒதுங்குவன. இசையா என்று - பொருத்தமற்றவை என்று. எள்ளப்படுவன- இகழ்ந்து நீக்குதற் குரியன. இவைகாண்-இவைகளாகும். இதனை அறிக. என்றிடு-என்று வகுத்துக் கூறும். பொது மாமறை - அனைவர்க்கும் பொதுவான சிறந்த வேதம் ஆகிய திருக்குறள் நூல். இது பயிலாதார் - இதனைக் கற்றறியாதவர். உள்ளத்.....எய்தார் - தம் நெஞ்சினில் எள்ளளவு அமைதிகூட அடையமாட்டார். கள்ள ....உலைவார் - வஞ்சகச் செயலையுடைய சிறிய நரிக் கூட்டத்துக்கே ஒப்பான அவர்கள் கவலையில் உலகத்தில் எந்நாளும் அலைந்து திரிவார்கள். ஏ. அசை.

74. அலகு இலாப் பொருள் - அளவு காண முடியாத பொருள் சிறப்பு. ஆரணம் ஆகுமே-வேத நூற்பொருளே ஆகும். ஏ. தேற்றம்.

75. மேலை நாள்-பண்டைய நாளில். பெருநாவலர்- திருவள்ளுவர். வேண்டி-தாமாகவே விருப்புற்று. நற்காலம் ஈந்த - நம்முடைய நல்ல காலத்தின் பயனாகப் படைத்தளித்த. திருக்குறள் கண்டபின் - திருக்குறளை ஓதி உணர்ந்த பின்னர். ஞாலமீது-இவ்வுலகத்தில். நாம் .....ஆன - நாம் இதுகாறும் கற்ற நூல்கள் அனைத்தும் மிகக் குறைந்த பெருமையுடைய ஆயின. ஏ. ஈற்றசை.

76. வேறுபல் வழியில் - ஒன்றுக்கொன்று முரணான பல நெறிகளில். மெய்வழி - உண்மை நெறி. இந்நாள் காறும்-இந்த நாள் வரையிலும். கடுகு அளவேனும்-சிறிதாகிய கடுகு அளவுக்குக் கூட. நன்மை தேறியதில்லை- நலம் வாய்ந்ததில்லை. உரைகள்-உரைக் கருத்துக்கள். ஆய்ந்து-ஆராய்ந்தமையால். பேறு...பெற்றோம்-செல்

வமாக உயர்ந்திடும் பெரிய உண்மைப் பொருள்களை இந்த வாழ்வில் விளக்கமாக அடைந்தோம். ஏ. அசை. அம்மா-வியப்பிடைச் சொல்.

77. செயலுக்குச் செயல் மாறுபட்டு வருகின்ற இந்த உலக வாழ்க்கை நெறியில் நூற்றுக்கணக்கான அவ்வளவு நூல்களும் தம் பெருமையிற் குறைந்து சென்று மறைந் திடவும், இத் திருக்குறள் நூல் பெருமையானது நிலை யாகச் சிறப்பினைப் பேசும்படி வாழா நிற்கும்.

78. காலம்-இது கலம்பக உறுப்புக்களுள் ஒன்றாகும். வாழ்வியல்கள் - வாழ்க்கைக்கான நெறிமுறைகள். வகுத் துணரும்-பொருந்துவதைப் பகுத்து அறிந்து பின்பற்றும். காலம் - காலமாகும். மயங்கிய.....காலம் - இது சரியா அது சரியா என்று தெரியாமல் மயங்கிய மயக்கத்தைப் போக்கி நம் உள்ளத்தில் வாழ்க்கை நெறியாகிய ஒளி தழைத்திட்ட காலம். காழ்....காலம்-அன்பின்றி இறுகிப் போன மனத்தில் அன்பு மட்டுமே கண்டு சிறந்த காலம். காதல்....காலம் - ஆண் பெண் இருவர் மனத்தி லெழும் அன்புக் காதலின் அடிப்படையில் அறச் செயல் களும் பொருட் பெருக்கமும் சிறந்து அமையும் காலம். ஏழிசை கூர்....காலம் - ஏழிசை பொருந்திய தமிழ் மொழி யாகிய தமிழன்னையின் சிறப்பு முதன்மையுறும் காலம். எல்லாரும்....காலம்-உலக மாந்தர் ஒரே குலத்தவர் என்ற எண்ணம் சிறந்திட்ட காலம். ஊழின்....காலம் - முறை யாகச் சிறந்தோங்கும் திருக்குறள் மக்களின் உள்ளங் களில் பெருகி வளரும் காலம். ஓங்கு....காலம்-அருளால் உயர்ந்த திருவள்ளுவரின் புகழ் சிறப்படையும் தன்மை யாகியது இக்காலம். (திருவள்ளுவர் மாட்சிமையே அனைத்துப் பெருமைக்கும் காரணம் என்பது கருத்து)

79. வறிதாக - வீண் என்று சொல்லும்படி. இனியே- எதிர்காலத்திலோ. கழிமூப்பு - முதிர்ந்த மூப்புத் தன்மை.

சால ஒறுக்கும் மிகவும் துன்புறுத்தும். துயர் பலவும் சாரும் - பலவான துன்பங்களும் வாழ்வில் வந்தடையும். திகைப்பும் இடம் கொள்ளும் - இவையல்லாமல் மனத் தடுமாற்றமும் வாழ்வில் இடம் பெறும். மேலும் உறுதி யிலை - அன்றியும் நல்ல நிலைமைக்கு ஓர் உறுதியும் இல்லை. நெஞ்சே-நெஞ்சமே. மேவி - விரும்பி. துணை யாய் - மக்கள் வாழ்வுக்குத் துணையாகும்படி. திருக் குறளை ஞால மீந்தார் - பொதுமறை நூலை மக்களுக்கு அருளியவர் ஆகிய திருவள்ளுவனார். நல்லடிகள்..... இனிதே - நல்ல சேவடிகளை நாம்துணையாகப் பெற்று உய்ந்திடலாம் இனிதே வருவாயாக.

80. இருப்பவும் - இருந்திடவும். இதன்வழி - இதன் வழியாக. வீட்டுக் கனி - வீடு பேறாகிய சுவைத்தற்குரிய கனி. முயன்றிடார் - முயன்று அதன்வழி ஒழுகாதவர். திருக்குறள் காணார் - இல்லறமே சிறந்ததென்று வற் புறுத்தும் திருக்குறளின் உயர்ந்த கருத்தை உணராதவர். தம் மனம் ஒறுத்து - தம்மனத்தைத் துன்புறுத்தி. உணும் உண்டியும் வெறுத்திடும் - உண்ணும் உணவையும் நீத்து ஒழிக்கும். மலிதவம் - மிக்க தவ நிலைகளை. முயல்வு எல்லாம் - முயன்றிடும் எல்லாச் செயலும். தினையும்... உணராரே - தினையளவும் நல்ல துணையாகப் பொருந் திடாது என்பதைச் சிறிதாயினும் உணராதவரேயாவர். வீட்டுக் கனி - எளிதாகக் கிடைத்திடும் பொருள் எனும் கருத்து. இது ஒரு நயமாகும்.

81. நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்க்கும் ஆழ்ந்த நுண்ணிய கருத்துக்களை அறிவதற்கரிய சிறந்த குறள் நூலின் பெருமை வான மண்டலங்களுக்கு அப்பாலும் செல்லத் தக்கதாகும். அதில் பொருந்திய கருத்துக்களின் ஆழமோ பாதலம் ஏழுக்கும் கீழாகச் செல்லத் தக்கதென் பதை இந்த உலகம் குறைவிலாது எண்ணும் (எ-று).

திருக்குறளின் பொருள்கள் 'ஆயும் தொறும் தொறும் இன்பம் தரும் கல்வி' என்பதைப்போல் அறிஞர் பலருக்கும் பல வகையில் புதுமைகளும் ஆய்வுகளும் தந்து வருவது கண் கூடு.

82. கடவுள் என்று எதுவும் இல்லை எல்லாம் இயற்கையே என்பவர் உலோகாயதம் பேசும் நாத்திகர். அத்தகையவரும் திருவள்ளுவரையும் அவருடைய திருக்குறளையும் போற்றத் தவறவில்லை. காமர் உண்மை-விருப்பந்தரும் உண்மை நிலை. நாவலோர்கள் - கலை நலம் சிறந்த நல்லறிஞர். (சொல்லப்படும் அந்நாத்திகரும் தம்மை அறியாமலேயே ஆத்திகரானது திருவள்ளுவரின் அருளாகும்)

83. குறித்துப் பேசப் பேச உள்ளத்துக்கு இனிமை தரும் பெருமையரான திருவள்ளுவரை; அழிந்திடாது நிலைத்த புகழுக்குத் தகுதியானவரை; நம் உள்ளத்தின் சோர்வினைப் போக்கித் துணையாக இருப்பவரை; கீழ்மையான போக்குகளைப் போக்கி வெற்றி கொள்பவரை; கற்றறிந்த நல்லவர் உள்ளத்தில் வீற்றிருப்பவரை; என்றும் இளமை வாய்ந்த தமிழில் நீங்காப் பேரன்புடையவரை; கீழ்மக்கள் அறியாத சிறந்த பொருளாக இருப்பவரை; எல்லா மாந்தர்க்கும் தாம் பொது என்றிருக்கும் அருட் கடல் ஆனவரை; மேலு மேலும் பெருகும் கருணைக்கு உரியவரை; பொய்கலவாத நல்லுள்ளங்களின் அரிய பொருளாக இருப்பவரை; உலகத்தைத் தன் வசமாக்கும் முப்பால் எனப்படும் திருக்குறளைப் படைத்தவரை; நேசிக்கும் அன்பர் இடம் விட்டு நீங்காதவரை; விளக்கமாகத் திகழும் முதற்பாவலர் எனப்பெயர் படைத்தவரை வேண்டித் தொழுவார்க்குத் தீவினைகள் இலவாகிப் போம்.

84. முதலுமுடிவு மறியப்படாத முழுமுதல்வன் - ஆதியும் அந்தமும் இல்லா அருட் பெருஞ்சோதியாகிய ஆண்டவர். பதியில்-இந்த நிலத்தின்கண்ணே. அருள் உருப் பற்றி-அருள்வடிவம் தாங்கி. எம்போல்வார்-எம்மை ஒத்த அறிவிற் குறைந்த மக்கட்கும். பரிபவங்கள்-மனத் துன்பங்கள். சிதையும் படிச்செய்-அழியும் வண்ணம் அருளும். திருக்குறள் ஓதும் திருவடைந்தேம் - திருக்குறளை ஓதி நலங்காணும் செல்வம்கைவரப் பெற்றுள்ளேம். அது-அந்தச் செயல். எமக்கு-எம்மவர்க்கு. ஆர்ந்துயர் மெய்ந்நலம் ஆயிரம் மெய்ந்நலம் ஈந்திடும் - நிறைந்து உயர்வதான ஆயிரக்கணக்கான உண்மைச்செல்வம் அவ்வளவும் தந்தருளும். ஏ. ஈற்றசை

85. திருக்குறட்பாக்கள் ஆயிரத்து முந்நூற்று முப்பதாகும். வாய் உரைக்கச் சிந்தை வளம் நுகர - வாயால் பாடல்கள் ஓதும் போதே அதன் பொருள் மாட்சிமைகளை நெஞ்சம் சுவைத்தறிய. நேயமொடும்-அன்போடும். சென்று பரப்புநர் நற்சிந்தையே - சென்று குறட்கருத்துக்களை மக்களிடையில் பரப்புவார்களுடைய நல்லமனமே. வள்ளுவனார் நன்றுறையும் செல்வநகர் - திருவள்ளுவர் நன்றாக வாழும் செல்வமிக்க நகரமாகும். சிந்தையே - ஏகாரம் தேற்றம்.

86. சம்பிரதம் - கலம்பக உறுப்பு. தம் பெருமையை எடுத்து மொழிதல்
மாதவத்தார் - சிறந்த தவச்செல்வராகிய. நாயனார்-திருவள்ளுவர். நயந்து - விரும்பி. துன்று பெருஞானத்தேம்- மிகவும் பெருகிய ஞானம் உடையேம். துலங்குமாறு - நன்றாய் விளங்கும்படி. சொல்லியும்-அறிவிற்பொருந்த ஓதியும். எண்ணிலர் மயக்கம்-எண்ணற்றவர்களுடைய மனக்குழப்பத்தை. துடைத்தேம்-போகுமாறு செய்தனம்.

வாதில் - சொற்போர் செய்து. வென்றிகொள - என்னைத் தோற்கடித்து வெற்றி கொள்ள வல்லவர்கள். ஒருவரிலை -எவரும் இல்லை. மேலைக் கீழை வெளிநாட்டில் - மேல் நாடு, கீழ்நாடு, பிற வெளிநாடுகள் இவற்றில். குறள் பரவ விளைத்தேம்-குறள் பரவும்படியான செயலைப் புரிந்தேம் அப்பா-அப்பா என்பது எதிரில் கேட்பவரைச் சுட்டியது. இன்று.....,இசைத்திடாய் - இந்நாளில் எம்மைப்போலத் திருவள்ளுவர் மாட்சிமை தெரிந்த சான்றோர் இப்பெரிய நிலத்தில் இருப்பாரெனில் சொல்லு பார்ப்போம். ஏ.அசை

87. இன்பத்தரு - இனிய மரத்தில். குறட்கனிகள். திருக்குறட் பாக்களாகிய பழங்கள். வேண்டி - விரும்பி எடுத்து. மிசைவார் - சுவைத்துண்பவர். வாழ்க்கையே வாழ்க்கை - வாழ்வே நல்லதொரு வாழ்வாகும். மறந்து புறஞ் செல்வார் - அதனை மறந்து வெளியில் வேறு நூல் கருதிச் செல்பவர். பாழ்ப்பிறவி-கேடுற்ற பிறவி வாழ்க்கை. ஏதாகும்பார்-எத்தகைய கேடடையும் என்பதை ஆய்ந்து காண்பாயாக. ஏ. தேற்றம்

88. மனமே-என் மனமே! பாராய்-நான் சொல்வதைக் கவனி. பண்பு உடையாய் - நல்லவை அறியும் பாங்கு உடையாய். பகரக் கேள் நீ - நீ நான் சொல்வதைக் கேள். பாவம் உளார்-பாவச் செயல்களில் வாழும் தன்மை உடையவர்கள். ஓராயிரவர் - ஆயிரக்கணக்கானவர்கள். உன் உறுதி ஊக்கம் கலைப்பார் - உன் நோக்கம் ஊக்கம் இவற்றைக் கலைக்க முயல்வார்கள். விழிப்புடனா-சாக்கிரதையாக. தீரா அன்பில்-முடிவில்லாத ஈடுபாட்டோடு. திருக்குறளைச் சேவித்து உருகி - திருக்குறளை ஓதி உள்ளம் உருக்கம் நிறைந்து. வள்ளுவனார் சீரார் அடிக்கே அன்புறுக - திருவள்ளுவர் திருவடியில் மட்டுமே அன்புறுவாயாக. செய்யும் செழுந்தவமே இதுகாண் - செய்வதற்குரிய சிறந்த தவமே இதுவாகும். ஏகாரம். தேற்றம்

89. திருக்குறள், முப்பால், தமிழ்மறை, தெய்வநூல், பொதுமறை, உத்தரவேதம், பொய்யாமொழி, திருவள்ளுவர், வாயுறை வாழ்த்து என்பன திருக்குறளுக்குத் தொல்லறிஞர் இட்டு வழங்கிய திருநாமங்கள் ஆகும்.

90. பொதியத் திருமுனி - அகத்தியனார். பொருவ- சமானமாக. நேரதாயிற்று - உயர்வு தாழ்வின்றிச்சமமாக அமைந்தது. அக்கதை - அந்தப் பழைய வரலாறு. 'அ' பண்டறி சுட்டு. தேர்கிலம் - உண்மையை அறிந்தோமில்லை. தேர்தொறும் தேர்தொறும்- அடுத்தடுத்து ஆயுந்தோறும். புதுமை நயம்பல-புதிய கருத்துக்களும் பொருட்சிறப்புக்களும். விதமுற-பலவிதத்தும். வழங்கும் - தருகின்ற. திருக்குறட் செழுமறை-திருக்குறளாகிய செழித்த வேதநூல். விருப்பொடும்-மக்கள் வாழவேண்டும் என்னும் அருளோடு. வருவதன் பயனாய்-தோன்றி அருளியதின் காரணத்தால். வடதிசை ஒன்றோ - வடதிசை மாத்திரமா. ஆர்கடல் வளைஇய - ஒலிக்கின்ற கடல்களால் சூழப் பெற்ற. பாருலகு எனப்படும்-நிலவுலகங்கள் ஆகிய. மேற்றிசை நாடொடு கீழ்த்திசை நாடுகள்-மேற்றிசை நாடுகள் எனப்படும் ஐரோப்பா, உருசியா, ஆப்பிரிக்கா, இங்கிலாந்து, அமெரிக்கா என்பவற்றோடு கீழ்த்திசை நாடுகளான பர்மா, இந்தோனேசியா, ஜப்பான் சீனா ஆகிய நாடுகளில் உள்ளாரும். திருக்குறள் மனத்துணை ஆக என - திருக்குறள் தம் மனத்துக்குத் துணை செய்யும் நூலென்று கருதி. தம் மொழியவற்றால் - தத்தம் மொழிகளால். செம்மையில் ஆக்கி - மொழியாக்கத்தால் தம் மொழியில் பெயர்த்தமைத்து. ஆய்ந்து - நூலை ஆராய்ந்து. மகிழ்ந்துளம் தோய்ந்திடும் அளவாப் பெருமிதம்-மகிழ்ச்சியுற்று உள்ளத்தால் அன்புடன் நுகர்ந்திடும் அளவுகாணமுடியாத மாட்சிமை. அதனால்-காரணமாக.

இருநிலம் அனைத்தினும் - பெரிய நிலவுலகம் எல்லாவற்றினும். தமிழ்நிலம் ஒன்றே - தமிழகம் மட்டுமே. இமயம் போன்றுயர் - இமயமலை போல உயர்ந்து காணப்படும். மாட்சிமை மறுப்பாருண்டோ - சிறப்பினை மறுத்துரைப்பாருண்டோ. இல்லை என்றபடி. காட்சியளவையில் மகிழ்ந்து கண்டனம் - இந்தப் பெருமையைக் காட்சியளவையாலே மகிழ்ச்சியொடும் பார்த்தோம். அகத்தியன் வரலாறு உரையளவையாற் கண்டது. திருக்குறளால் தமிழகம் உயர்ந்தமை காட்சியளவையாற் கண்டதென்க.

91. பெருமையிற் சிறந்த செந்தமிழை ஆய்ந்துணர்த்தும் அறிவுக்கடலாக விளங்கிய மறைமலையடிகளாரின் சிறப்பு மிகுந்த முதன் மாணவராகிச் செவ்விய தமிழ்மொழியையும் முழுமுதற் சிவத்தின் பெருமையையும் தம் உள்ளத்தில் உணர்ந்துயர்ந்த தவஞானச் செல்வராக விளங்கிய ஒப்பற்ற சிவத்திரு அழகரடிகளார் தன்மையில் மேம்பட்ட நீர்வயல்களாற் சிறந்த மதுராந்தகத்தை அடுத்துத் தென்பாற் சிறந்த இனிய முல்லை நிலப்பரப்பில் ஒரு சிறந்த குருகுலம் எனப்படும் சிறந்த நிறுவனத்தை உருவாக்கி நல்லவர் புகழும் திருக்குறள் மடமாக்கி அதன்கண் திருக்குறள் பீடம் என்பதனைத் தோற்றுவித்து அதன் முதற் பீடாதிபதியாகச் சிறந்ததெல்லாம் திருவள்ளுவப் பெருமானே! தங்களின் ஐயத்திற்கிடமில்லாத திருவருளே ஆகும். ஏகாரம் தேற்றம்.

92. கிளைகள்-மடத்தின் கிளை நிறுவனங்கள். பொதுமறை நல்லிதழ்-திருக்குறட் பொருளை உலகுக்குப் பரப்புவதற்காகவே அடிகளாரால் தொடங்கி இயங்கி வரும் பொதுமறை என்னும் திங்களிதழ். தெருள் ஏற - அறிவின் தெளிவு எங்கும் பரவிட. எங்கும் செறிவது-எவ்விடத்தும் அமைந்து போற்றப்படுவது ஆகிய இவ்வனைத்தும். நம்

திரு....தேனிப்பம்-நம் திருவள்ளுவப்பிரானுடைய விளங்கிய மாட்சிமைப்பட்ட திருவருட் செய்கையாகும் என்றெண்ணித் தியானம் செய்வோமாக. ஏ. அசை.

93. பொழிப்பு: தேன்போன்று சுவை நிறைந்த இசைப்பாடல் பாடி வீதியில் வருகின்றவனும் செம்மையான கைகளால் யாழினை மீட்டி வருபவனுமான பாணனே! யான் இவண் கூறுவதைக் கேட்பாயாக! இல்லறப் பெருமையை மறந்த உன் அன்பர் உன்பால் சொல்லியவைகளைத் தவறில்லாதவை என்று ஏற்றுக் கொள்ள இயலுமோ! இயலாதுகாண். துணையற்று மெலியும் என் நெஞ்சம் தீயின் வெப்பம் நெருங்கிய பஞ்சினைப் போலச் சுருங்கி மெலிய என்னைப் பிரிந்து சென்று அயல் மகளிருடைய அன்பினுக்காக ஏங்கிமெலியும் அவருடைய நெஞ்சம் என்னை நாடி வர நினைக்குமோ! "யானும் நீயும் இனித் திருக்குறள் சொல்லுகின்ற இன்பத்துறை நல்ல வழிகளைப் பின் பற்றி வாழ்வோம்" என்று சொல்லி அதனை வலியுறுத்துவார் போல பொதுமறையைத் தொட்டுச் சூளுரைத்தவர் பின்னர் மனம் மாறுபட்டுச் சென்றார். இனிக் கடந்த நாள் நிகழ்ச்சிகளை எண்ணி ஆகப்போவது ஆவதொன்றுமில்லை. பொதுமறை அறநெறிக் கருத்துக்களைத் தம் நெஞ்சினில் நன்கு சிந்தித்து என்னோடு திருந்திய வழியில் வாழ்வாராயின் என் மனம் புதிதான மகிழ்ச்சியால் மலர்ச்சி கொள்ளும் என்று எண்ணுவேன்.

94. நெஞ்சமாகிய திரைச் சீலையில் நேசம் எனப்படும் எழுதுகோல் கொண்டு செஞ்சொற்களால் ஆன திருக்குறளை எழுதி மகிழ்ச்சியில் விம்முதமுற்றேம். அரிய பொருட்கள் நிறைந்த அன்பு மயமான திருக்குறள் நூலின் அருட்சுவைகளை ஆய்ந்துணர்ந்து இன்புறுவதே எமக்கு என்றைக்கும் தவம் ஆகும்.

95 (தலைவன் கூற்று) குவளை மலரையொத்த அழகிய கண்களையுடைய என் அன்புக் குரியாய்! சென்னை நகரத்தின் அழகினை மேலும் பெருகக் காட்டும் இந்த வள்ளுவர் கோட்டத்தின் சிறந்த அழகையும் அதனுள் பொருந்தி நிகழும் திருக்குறள் தொடர்பான நிகழ்ச்சிகள் அனைத்தையும் கண்டு மகிழ்வாயாக! நடையினால் உள்ளம் மெலியாமல் என் பிறகாகத் தொடர்ந்து வருவாயாக! நடைக்குத் துணை செய்து ஊக்கிட வள்ளுவர் குறளின் சொற்சுவைகளையும் இன்பத்துப்பாலில் யான் விரித்துக் கூறும் விளக்கமான சிறந்த நயங்களையும் கேட்டதால் உன் மகிழ்ச்சியை வெள்ளிய முறுவலின் வழியில் வெளிப்படுத்தினாய். அன்புக்குரியவளே! நாம் சற்று விரைந்து நடந்தோமானால் பெருத்த ஏரியின் வனப்பும் தண்ணிய நீர் மடைகள் வாய்ந்த நெல் வயல்கள் நிறைந்த மருதவளம் நிறைந்த மதுராந்தகம் போய்ச் சேர்வோம். அங்கு நாம் தாமதியாமல் அதற்கு அருகே உள்ள குருகுலத்தின் அரிய திருக்குறட்பீடத்தை அடைந்தனம் ஆயின் நம் ஞான குருவாகிய அரும் பொருள் நிறைந்த திருக்குறட் செல்வத்தை நமக்கு வழங்கிய திருவள்ளுவப் பெருமான் புகழை நாம் அங்கே அறிந்து இன்புறலாம் அன்று, ஏ. அசை நிலைகள்.

96. திருக்குறள் வேதத்தால் எம்மை மனிதராக்கி அருளும் தூய்மை நிறைந்த வள்ளலே! நன்றாக உள்ளம் அறியும் வண்ணம் நின் திருவுள்ளத்தின் உயிர்நாடியான கருத்தினைத் திருக்குறள் அடுத்தடுத்து நன்கு அறிவுறுத்துவது தெரிந்தும், சிலர் அவற்றைச் சிறிதும் அறியாதவராகி சிந்தித்துத் தெளியவும் மாட்டாராகி இழிவினைத் தரும் ஊனொடு மதுவையும் அருந்துவாராகி உள்ளனர். இவர்களுடைய குற்றத்தைக் களைந்து நீக்கி நும் அருள் நூலின் வழியே இவர்கள் வாழும் வண்ணம் அருள் வழங்கி ஆட்கொள்ள மாட்டாயா! (எ-று)

97. பொற்கிண்ணம் போன்ற தாமரைகள் இதழ்கள் குவியவும் மாலையில் கார் வானம் மழைத் துளிகளைச் சிதறவும் வளர்ந்து படர்ந்துள்ள முல்லைக் கொடியில் பூத்த மலர்களில் தேனுண்டு கிடக்கும் வண்டுகளின் குரல் ஒலிக்கு ஏற்றபடி மயில்கள் தோகை விரித்தாடவும் மான்கள் துள்ளித்துள்ளி ஓடவும் ஆகிய இந் நிலையில், தெளிவாக இன்பம் தரும் குறளின் நயங்களைப் புலப் படுத்தும் பரிமேலழகர் உரையின் தேன் சுவையாகத் திக ழும் நயம் போன்று உள்ளம் இனித்திடச் செய்யும் என் காதற்செல்வி; யாம் குறித்துச் சென்ற நினைத்தற் கரிதா கிய கார்ப்பருவம் உற்றத்தை அறிந்தாளாகி நம் வரவினை எண்ணி வழிபார்த்து தன் நல்லுணர்வு மயங்கித் தளர் வதற்கு முன்பாகப் பாராட்டும் சிறப்பினால் பரிகளின் கதி நுட்பங்களை அறிந்த என் தேர்ப்பாகனே! அன்பிற்குரிய தலைவி துன்பம் நீங்கி உள்ளமும் முகமும் மலரும்படி தேரை விரைந்து செலுத்துவாயாக.

98. இது விரிந்து பரந்த அறிவின் ஆய்வு என்று சொல் பவர் (தம் ஆய்வாற் கண்ட) அணு, வாயுநீர் இவற்றால் உருவாகும் குண்டுகளால் உலகமே புகைந்தொழியும்படி அனைத்தையும் தீயினுக்கு இரையாகுமாறு அழித்து அழி வினைச் செய்யும் விலங்குகளே ஆயினர். அறிவியல் ஆய்வுகள் மக்களினத்துக்கு நலம் பெருகும் வகையில் நடப்பதென்பது எண்ணுங்கால் சிறிதாகவே உள்ளது. அழிவுக்குக் காரணமான ஆய்வுச் செயல்களால் நாட் டைக் குலைக்கின்ற நாணமற்றவராகிய அவர்களும் மனி தப் பிறப்பிற்கான நெறிகளில் தம் கோட்பாடுகள் சிறப் புற்றுக் கூடிப் பூமியில் ஒற்றுமையும் அமைதியும் அமைந்த இன்பம் பொருந்திடவும் பொருளின் வழியில் நல்லறங்களும் குறைவில்லாத சிறந்த நல்லறிவும் பொருந்தி நாட்டின் ஒழுக்கத்தைக் காத்திடும் காவலராகி

மகிழும் வண்ணம் திருக்குறளைப் படைத்துத் தந்து அருளினீர். கடமையிற் சிறந்து கைம்மாறு வேண்டாது உலகத்தைப் புரந்திடும் கருணைமிக்க மேகம் போன்ற பெருமானே (இதனை முதலிற் கூறிப் பொருள் விரிக்கலாம்).

99. மழை மேகம் போல அன்பர்களுடைய நெஞ்சமாகிய வானத்தில், காமம் வெகுளி மயக்கமாகிய மூவகையான பகையரவுகள் அழிந்துபடும்படி இடியோசை காட்டியும் மின்னியும் குளிர்ந்த மழையாகிய முப்பாலைச் (திருக்குறளை) சொரிந்து உள்ளம் பொருந்த அன்பு வயல்களில் அறம் பொருள் இன்பமாகிய மூவகைப் பயிரும் செழித்து வளரக் காணும் தகைசிறந்த திருவள்ளுவராம் பெயர் தரித்த ஞானச் செல்வரே நும் திருவடிகளைப் போற்றி செய்யா நின்றோம். இப்பாடல் முற்றும் உருவக அணி.

100. பல்கோடியர் - பலகோடி மாந்தர். திருக்குறளை ஓதி மகிழ்பவரும், இதன் மாட்சிமையை உலகுக்கு விரிவுரை போன்றவற்றால் விரித்தோதி மகிழ்பவரும் இதன் உண்மைப் பொருளை எல்லாரும் அறியக் கூறி விளக்குவார்கள் பலகோடி மக்கள் ஆவர்.

101. வண்ண மலரடிகள் - சிறந்த செந்தாமரை போன்ற திருவடிகள். பொதுமறைச்சீர் - திருக்குறள் நூலின் சிறப்பியல்புகள். ஏழிசையால் - ஏழிசை இன்பம் போல. செந்தமிழும் - செந்தமிழ் நூலும் வாழ்க சிறந்து- சிறந்து வாழ்வதாக.

(திருவள்ளுவர் கலம்பகம் முற்றும்.)

# உள்ளுதற்கினிய திருவள்ளுவம்

*******

காப்பு

வெண்பா

ஆதி பகவன் அறவாழி யந்தணனொண்
போத வடிவாய்ப் பொலிந்திட்டான் - பாதமலர்
உண்ணின் றெழூஉம் உவகையினாற் பாடுகம்யாம்
திண்ணமிவண் வள்ளுவத்தின் சீர்.

## நூல்

கட்டளைக் கலித்துறை

1. சங்கப் புலவர் பெருமக்கள் காப்பியச் சான்றவர்கள்
துங்கத் திருக்குறட் சொற்பொருள் தெய்வத்
தொடர்களைத்தம்
பொங்கும் படைப்பிற் புகுத்தி உயர்ந்திட்ட
பொற்பனைத்தும்
புங்கவர் வள்ளுவர் பொய்த்தலில் மாட்சி
புகலுமன்றே.

2. கம்பரைப் போற்சுவை எட்டுங் கனிந்திடு
காப்பியந்தான்
இம்பரில் யார்படைத் தாரதில் எங்கணும்
இன்குறளின்
செம்பொருள் காண்டும் சிவஞான மாமுனி
செய்யதமிழ்
நம்பியும் வில்லியும் நற்குறள் சொற்பொருள்
நாடினரே.

3. கவிஞர்க் கரசாய்த் தணிகையில் வாழ்ந்திட்ட
கச்சியப்பர்
புவிமெச்சத் தந்த புராணத்திற் சொன்ன
பொருள்சிறப்பத்
தவமுற்றுந் தண்குறள் நூற்சுவை தாமெடுத்
தாண்டவிதம்
நவமிக்க வள்ளுவர் மாட்சிகள் உள்ளத்தில்
நாட்டுவதே.

4. பல்லா டரவப் பணியணி யும்பரன் பைந்தமிழின்
சொல்லார் சுவைக்கு முடிதுளக் கும்படிச்
சொல்லிய அக்
கல்லாடர் நூலில் கருத்தமிழ் தான கவின்குறளை
நல்லார் வியந்திடச் சொல்லால் நயந்தமை
நாட்டுதுமே.

5. தெய்வத் திருக்குறள் செம்பொருள் மாட்சி
திருமுறைகள்
சைவசித் தாந்தத் தமிழினும் சாற்றுதல்
தாமறிவோம்
உய்வைத் தரும்குறள் ஓதுவம் வம்மின்கள்
ஒண்கனிதான்
கைவந் திருந்திடக் காய்க்கென நாளைக்
கழிப்பதென்னே!

6. சிவனருள் பெற்ற சிவப்பிர காசர் திருக்குறளின்
சுவையினைக் கற்பனை தோன்றிடத் தம்நூல்
துலக்குவித்தார்
புவிமகிழ் மற்றைப் புலவரில் யார்தாம்
பொதுமறையின்
சுவைமறந் தார்அவை சொற்றிட நாட்கள்
தொடருமன்றே.

7. தெள்ளுந் தமிழினில் தெய்வத் திருவருட் பாங்குரைத்த
வள்ளற் பெருமான் மறுவில் திருக்குறள்
வாய்மொழிகள்
விள்ளும் விருப்பில் மிகவெடுத் தாண்டிடும்
மேன்மையினை
உள்ளத் துவகையில் உற்றறிந் தார்உணர்
வேரிங்குவரே.

8. வடிவம் சிறிதா யிருப்பினும் வள்ளுவர்
வான்குறள் தான்
முடிசேர் இமயத்தின் மும்மடங்காம் பொருள்
முற்றிடுதல்
ஓடிவில் புகழ்கொளும் ஔவையும் ஓங்கிடைக்
காடருந்தாம்
கடுகை யணுவினைக் காட்டுக ளாக்கொண்டு
காட்டினரே.

9. பற்றும் கருத்தினைப் பத்துத் தரம்சொல்லிப்
பாலகர்க்குக்
கற்பித் தருள்குரு காட்சியைப் போலதி
காரமொன்றில்
பத்துக் குறளினைப் பற்றுடன் வைத்திட்ட பாவலர்சீர்
இற்றென நன்னெறி சொற்றிட் டவர்தாம்
இயம்பினரே.

10. வள்ளுவன் றன்னை உலகிற்குத் தந்திட்ட
வான்புகழ்நம்
தெள்ளிசைச் செந்தமிழ் நாடிது பெற்றிட்ட
சீர்த்தியினை
வள்ளலெம் பாரதி வாய்மலர்ந் தாரந்த
வாய்மையினைத்
தெள்ளு மொழிபெயர்ப் பாயிரம் இங்குத்
தெரிவிக்குமே.

11. திருவள் ளுவருளம் ஈதெனச் செவ்வி
பெறமொழிந்த
திரு.வி.க. செந்தமிழ்த் தென்றல் திருக்குறட்
செம்மறையால்
பரிவுடன் காதல் புரிந்திட்ட பொற்பினைப்
பொன்னெழுத்தால்
தெரிவுறக் காட்டிய செய்தியிஞ் ஞாலம்
திகழ்கின்றதே.

12. வாக்கின் பெருகிடு ஞானமும் வைகிய யாக்கைவழித்
தேக்கும் பெருந்திறற் செல்வமும் சிந்தை
திகழ்ந்துயரும்
ஊக்கமிம் மூன்றும் திருக்குறள் முப்பால்
உயர்த்துமெனும்
ஆக்கம தாய்ந்தே அழக ரடிகள் அருளினரே.

13. தெய்விகக் காந்தியச் சேவையிஞ் ஞானச்
செழும்பணியால்
எய்தும் பொதுவுடை மையிவ் விரண்டினும்
வள்ளுவர்தம்
செய்யும் கருத்துச் செறிந்துள திந்நிலை
சீர்பெறலால்
உய்யும் உலகென மு.வ. உணர்ந்து மொழிந்தனரே.

14. பூந்தமிழ் மாணவன் என்றே தமைச்சொலும்
போப்பறிஞர்
தீந்தமிழ்த் தெய்வத் திருக்குறள் முற்று
மொழிபெயர்த்து
மாந்த ருளத்தினில் வாழ்கிறார் இன்றைக்கும்
மாண்குறள்நூல்
ஆய்ந்தறி வார்தமக் கென்றும் அழிவில்லை
அஃதுண்மையே.

15. தண்ணந் தமிழ்மொழிச் சாதனை யீதே
தகைமலியும்
உண்மை ஒளிமிகும் உள்ளத் துணர்ச்சியின்
ஓங்குருவாய்
நுண்மை பொலியுநன் னூலென ஒண்குறள்
நோன்மையினை
எண்ணிஎம் ஆரியெல் என்னும் அறிஞர்
இயம்பினரே.

16. பண்ணார் மொழிக்குறட் பாடல்ஒவ் வொன்றும்
பரிந்துணரில்
தண்ணார் மணிச்சுரங் கம்மெனச் சாற்றிடல்
சால்புடைத்தாம்
எண்ணோ டதன்கண் இறங்குநர் எம்மருங்
கும்இமைக்கும்
கண்ணருங் காமர் மணிபல காண்பருள் காதலித்தே.

17. வின்சென்ட் சுமித்தெனும் மேனாட் டறிஞர்
பிரான்விரும்பித்
தன்னிகர் மெய்க்குறள் நூலினைச் சால்புடன்
ஆய்ந்ததன்சீர்
மன்னும் சிறப்பினை ஒவ்வா வடவர்தம் நூல்களென
உன்னி யெழுதினர் என்றால் இதன்சீர்
உரைப்பரிதே.

18. தேம்பா வணியாஞ் செழுந்தமிழ் தந்தவர்
சீர்க்குறணூல்
கூம்பா நெறியில் அறம்பொருட் கூற்றினைக்
கொள்கையினால்
ஓம்பிடு 'லத்தீன்' மொழியில் உலகுக் குதவினமை
ஆம்பரி சில்மொழி யாக்கம் பிறர்செய வாற்றியதே.

19. மூன்று திருக்குறட் செய்யுளின் நல்லிசை
முன்னிறுத்திச்
சான்றோர் உடைத்திந்தத் தொண்டை நன்
னாடெனும் சால்பினைத்தாம்
ஊன்றும் அருண்மொழி யார்அந பாயன்றன்
ஒள்ளமைச்சாம்

வான்றவழ் மாட்சிமை சொல்லியிஞ் ஞால
மகிழ்கின்றதே.

20. ஒழுக்க முடையவர்க் கொல்லா வெனக்குறள்
ஓதியசீர்
இழுக்குடைத் தீயசொல் எங்கணுங் காணா
வியல்பினிலே
செழித்திடும் தொண்டர் புராணம் இருந்திடும்
சீரனைத்தும்
விழுத்துணை மெய்ப்புல வோர்கள்எந் நாளும்
விளம்புவரே.

21. இல்லை தவறவர்க் காயினும் என்றிடும்
இன்குறளால்
சொல்லும் தலைமகன் தூய்மையைக் கண்டனம்
சொற்றிடுநூல்
பல்வகைக் கோவைகள் காட்டும் பரத்தையர்
பாடனைத்தும்
இல்லை குறள்சொலும் இன்பத்துப் பாலினில்
என்பர்களே.

22. முன்னைப் பொருளுக்கு முன்னைப் பொருளென்ன
மூண்டுவரும்
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் புதுமை
பிறக்கிடும்சீர்
பன்னும் திருக்குறள் பாடிய தெய்விகப் பாவலர்தாள்
உன்னும் கருத்தினர் தாமின் றுலகில் உயர்ந்தவரே.

23. எண்ணவும் சொல்லவும் எண்ணிய வாழ்வில்
இயற்றுதற்கும்
கண்ணியம் காத்துயர் கண்ணோட்டத் தன்பிசை
காலமெல்லாம்
புண்ணியர் என்றுல கோர்நுமைப் போற்றவும்
பூணுதிரேல்
அண்ணலெம் வள்ளுவர் அன்புமுப் பாற்கடல்
ஆடுமினே.

24. செல்வமும் வாழ்வும் திடுமென மாய்ந்திடும் தீநரகும்
ஒல்லை விழுங்கிடும் ஓர்ந்தவர் உய்கென ஓதிடுநூல்
இல்லை; இனிதமர் இல்லற வாழ்வில்
இணை நலங்கள்
புல்லுமென் றன்பிற் பொதுமறை என்றும்
புகன்றிடுமே.

25. இன்பம் பொருள்அறன் என்றிவை மூன்றும்
இணையிருவர்
அன்பின் தொடங்கிடும் இல்லறம் ஆக்கிடும்
அம்மைநலம்
துன்னுமவ் வீடெனல் துய்த்திடும் வாழ்வின்
துலக்கமென்றே
இன்றும் குறள்சொலும் இன்புரை யாவர்க்கும்
ஏற்பதுவே.

26. விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணியின்
சொல்விளைய
ஒருங்குநல் ஒப்புர வாற்றியொண் சுற்றமும்
ஓம்பியுளந்
திருந்திடும் அன்பு செழித்தருள் ஆர்ந்திடச்
செய்திடலாம்
பொருந்திடும் இல்லறம் போற்றுக என்னும்
பொதுமறையே.

27. பெண்ணினந் தன்னைப் பிழைபடத் தூற்றிடும்
பேதையர்நூல்
எண்ணி மயங்கிடும் ஏழைமைப் பண்பின்
இழிவுகற்றி
கண்ணென வாய்ந்திட்ட காரிகை நற்றுணைக்
காரணத்தால்
நண்ணும் இருமை நலங்களென் றேகுறள்
நாட்டிடுமே.

28. புகழ்புரிந் தில்லறப் பொற்பினைக் காத்திடும்
பூங்கொடி தன்
அகமுடை யான்றனக் காக்கமும் ஊக்கமும்
ஆதலொன்றே
தகவுடைத் தாகும் தவிர்ந்திடின் இல்லத்
தரங்குறைந்து
நகையுடைத் தாமென நாட்டுந் திருக்குறள்
நன்குணர்ந்தே.

29. இடுக்கண் வருங்கால் நகுகவென் றேயுளத்
தின்னலினைத்
துடைத்திடச் செய்யும் துணையென வாழ்வில்
தொடர்ந்துசெயல்
இடத்துப் பிழைப்பின் இடித்துரை செய்திடும்
இப்பிறப்பில்
அடுக்கும் குறளென ஆவதுண் டோசொல்
அவனியிலே.

30. பரிமே லழகர் முதலா அறிஞர்கள் பற்பலரும்
உரைவிரித் தார்குறள் ஒண்மையை ஞாலம்
உணரவைத்தார்
தெரிபொருள் ஆய்வினில் தேடிடத் தேடிடச்
சேர்நயங்கள்
விரிவினில் நாளும் புதுமை விளைத்திடும்
மெய்ம்மையிதே.

31. ஆயிரம் காப்பியம் ஆய்ந்தனம் என்பார்
அவரினும்சொற்
பாயிரத் தோடு பொதுமறை நூலைப் பயின்றவர்தாம்
சேயுயர்ந் தாரெனச் செப்புதல் கேட்டனம்
சீர்த்திமிகத்
தாயினும் நல்ல தமிழ்மறைச் சால்புகள் சாற்றுதுமே.

32. சமயங்கள் சாத்திர கோடிகள் மக்கள்
தவிப்பினைத்தம்
அமையும் அறிவுரை யாற்றி யகற்றிய
தில்லையில்லை
நமையின்று காக்கும் சமயமும் சாத்திர
நற்றுணையும்
சிமையப் புகழ்கொள் திருக்குறள் தானெனச்
செப்புவமே.

33. ஆயிரம் கூடிய முந்நூற்று முப்ப தருங்குறளும்
ஆயு மகிழ்வில் அறிந்துளம் தேர்ந்துபின்
அன்பிசைந்து
வாயுங் குறளே வழிகாட்டும் வான்பொருளாக்
கருதித்
தோயுநல் வாழ்வில் தொடர்வார் பெருமை
சொலற்கரிதே.

34. நற்றிரு வள்ளுவ மாலையின் மாட்சி
நனியுணர்ந்தால்
மற்றவெந் நூற்கண் மனஞ்செல்லு மாந்தர்தம்
நெஞ்சமெலாம்
உற்ற திருக்குறள் ஒன்றே உணர்ச்சிப்
பிழம்பதுவாய்ச்
சுற்றமு நற்றுணை யும்மெண் வென்றுந்
தொடர்ந்திடுமே.

35. விலக்குவ என்றும் விலக்கி விதித்தன மேதகவே
நிலைத்திடப் பின்பற்று நேயமிலார் குறள்
நெஞ்சுருகக்
கலைத்திற மேடையிற் கட்டுரைப் பார்களிக்
கள்ளொடுமூன்
புலைப்பொருள் காதலிப் பார்புன்மை எங்ஙன்
புகலுவதே.

36. கற்றதன் நல்வழி நிற்கக் கருதாக் கசடர்கள்தாம்
கற்பது பட்டம் பதவிக் கெனவே கதைத்திடுவார்
கற்க அதன்வழி நிற்கவென் றேகுறள் காட்டிடுநல்
கற்புயர் மாட்சிமை காணவு மாட்டாக் கயமையிலே.

37. சாணக் கியர்தம் அருத்தமும் கண்ணன் சமரிடையே
ஆணைத் திறத்தில் அறிவித்த கீதையும் ஆயுமிடம்
பூணும் சிறப்புக் குறணூற் பொருளிற் புலப்படுதல்
மாண அறிந்துரைத் தார்மதி சான்றிடு மாதவரே.

38. செம்பிற் களிம்பெனச் சேரு மலவிருட் செய்தியினால்
இம்பர்ப் பிணைத்திடும் ஊழின் இறுக்கமும்
எள்ளியிவண்
நம்பிடும் ஆள்வினை யாலதை வென்றிடும்
நல்வழியும்
உம்பரும் போற்ற உணர்த்தும் குறளிதற்
கொப்புளதே.

39. மோட்டிம யம்முதல் மோதும்குமரி முனையளவும்
பாட்டுமுப் பாலைப் பயிலுநர் வாழ்விற்குப்
பைந்துணையா
நாட்டி மகிழுநர் கண்டுமெம் பாரத
நாட்டிலின்னும்
நாட்டின் இலக்கியம் நற்குறள் தானென
நாட்டிலரே.

40. முடியாட்சிக் கென்றே மொழிந்தன போன்ற மூன்றிலுமே
குடிவாழும் இல்லறத் தானுக்கும் ஏற்றிடும் கொள்கைகண்டும்
நடுவாக நந்தெய்வம் வள்ளுவர் தந்த நறுந்தமிழ்நூல்
படியாத வர்க்குப் படிமீது வந்த பயனில்லையே.

41. விதியொன் றுசெய்திடல் வேண்டுவ தாமிந்த மேதினியில்
மதியொன்றும் ஆட்சிகள் தேர்தல் வழியினிற் பற்றிடுவர்
கதியொன்று நங்குறள் காட்டும் பொருளினைக் கற்றதன் பின்
மதியொன் றிடுதம் முயற்சி மனங்கொளல் மாட்சியென்றே.

42 ஒன்றே குலமாம் ஒருவனே தேவனிவ் வுண்மையினை
அன்றே திருக்குறள் ஆய்ந்துரை செய்த தறிந்திருப்பின்
ஒன்றாச் சமயங்கள் சாதிகள் ஓராயிரங் கொழுத்து
நின்றே உலகை நலிவிக்கும் இந்நிலை நீங்குமன்றே.

43. எங்கணும் போர்க்குரல் எங்கும் அணுவின் இடிமுழக்கம்
பொங்குங் குருதிப் புனல்விளை யாட்டிந்தப் புன்மையெலாம்
இங்கிருந் தோட்டிட எண்ணுதி ரேல்நம் இருங்குறளின்
துங்க அருளே துலக்குக ஞாலம் துயர்கெடவே

44. காலை நடுப்பகல் காரிருண் மாலையும்
கண்வளரும்
சில இரவும் திருக்குறட் சிந்தனை சேர்ந்துவிடின்
வேலை யெனுந்துயர் வெள்கிப் புறஞ்செலும்
மெய்யறிவுச்
சாலை நெடுவழி யேநடை போட்டிடும் தண்மனமே.

45. பிறிது மொழிதல் உவமை உருவகம் பேசிடும்சீர்
நெறிமுறைக் காட்டுகள் நித்தமும் மாந்தர்
நினைவுடனே
அறியும் அனுபவச் செய்திகள் தம்மால் அறியவைத்த
இறைமலி வள்ளுவர் இன்பத் திருக்குறள்
எண்ணுவமே.

46. திறனறி வாளர் சிலர்சிலர் தத்தம் திகைப்பறிவால்
குறளினில் குற்றமும் கூறத் துணிவர்
குறட்கருத்தைப்
பிறிதோ ரிடத்துக் குறளே மறுத்தலும் பேசிடுவார்
செறிவகை ஆய்ந்திடின் தத்தம் சிறுமை
தெரிந்திடுமே.

47. வாழ்க்கைத் துணைநல மாட்சிமை சாற்றிய
வள்ளுவனார்
வீழ்ச்சியப் 'பெண்வழிச் சேறல்' விளம்பிய
தெற்றுக்கெனில்
தாழ்ச்சியில் தன்வழிச் சார்ந்தொழு கத்தகும்
தன்மனையாள்
சூழ்ச்சியில் ஆண்படல் துன்பம் தருமெனச்
சொல்லுதற்கே.

48. முகநக நட்பது நட்பன் றெனமுன் மொழிகுறனுல்
முகநட் டகநட்(பு) ஒருஉக என்றல் முறைபிறழ்ந்த
தகவில் பகைவர்கள் தாஞ்செயு நாடகம் தாமறிவார்
நகைமுகத் தாலவர் வஞ்சகம் வெல்கென
நாட்டுதற்கே.

49. களவொடு கற்பினில் காத லிருவர் கலந்திணையும்
அளவினில் ஊடலும் கூடலும் ஆர்ந்திடும்
அன்பிதுவே
தெளியுமவ் வீட்டிற்குச் செல்வழி யாம்எனச்
சிந்தைநலம்
ஒளிபெறக் காட்டிய வள்ளுவர் ஒண்புகழ்
ஓங்குவதே.

50. எள்ளு நிலையினில் ஏதொன்றும் எண்ணா
தியற்றலின்றி
உள்ளம் உயர்த்துக உள்ளத்துக் கண்ணியத்
தாலுலகம்
பள்ளம் இழிபுனல் போல்நும் வழிப்படும்
பார்மினெனத்
தெள்ளு மறிவுரை வள்ளுவம் அன்பில்
தெரித்திடுமே.

51. வள்ளலார் காந்திய டிகள்தம் வாழ்வினில்
வள்ளுவனார்
தெள்ளும் அறிவுரை சிந்தையில் தேக்கினர்
சிற்றுயிர்க்கும்
உள்ளம் வருந்திட ஊனம் இழைப்பதும்
ஊன்மிசைவும்
எள்ளி விலக்குக என்றே உலகில் இயம்பினரே.

52. உள்ளம் அறிந்திடப் பொய்யா தொழுகின்
உலகவர்தம்
உள்ளம் இடம்பெற் றுயர்ந்திட லாமென ஓதுகுறள்
வள்ளலெம் காந்தி வரலாற்றின் மாட்சிமை
யாம்நினைக்க
விள்ளும் பெருமை விளைத்திட் டதன்றோ
விளம்பிடினே.

53. அன்பே சிவமென் றறிவித் திடும்நெறி அல்லதிவண்
ஒன்றும் குறள்நெறிக் கொப்புமை இல்லை
உயிர்க்கொலைதான்
நன்றென்று பேசும் மனுவாதி நூல்கள் வழிநடக்கும்
குன்றும் பிறமதம் கொள்வதுண் டோவிக்
குவலயத்தே.

54. உள்ளு தொறுஞ்சுவை உள்ளங் கனிந்திடும்
ஒண்மழலைப்
பிள்ளைமை கொஞ்சிடும் பிஞ்சுப் பருவத்தில்
பெற்றவர்தம்
கிள்ளைச் செழுமக்கள் கேட்டுப் பயின்றிடக்
கேண்மையுடன்
அள்ளும் சுவைக்குறள் ஆரமு தூட்டும்
அருஞ்செயலே.

55. குன்றா மரபிற் கொழுமுனை ஏர்வளம் கொள்கைபெற
அன்றே விரித்திட்ட ஐயனவ் வள்ளுவன்
ஆய்வதுவே
இன்றைப் பசுமைப் புரட்சிக்கு வித்தா வியன்றதென
நன்றா வியம்பினர் நல்லார் முனைவர் நடராசரே.

56. எண்ணும் அறம்பொருள் இன்பங்கள் யாவையும்
ஏர்முனையின்
தண்ணலத் தாலே தழைக்குமென் றேகுறள்
சாற்றுவதன்
உண்மை யறிவார் உயர்வார் உழவினில் ஊக்கமிலார்
கண்ணீருந் துங்குரு டேயென ஞாலம் கருதிடுமே.

57. தலையை மழிப்பார் சிலர் சிலர் தாடி சடைமுடிகள்
மலைவுறக் காவி மடிவெண் பொடியக்க
மாலைகள்தாம்
நிலைபெறு வேடத்தர் நெஞ்சில் துறவார்
நிலையறிந்து
விலகுவிர் என்றே விதிக்கும் குறள்நூல் விருப்பினிலே.

58. என்றும் செயல்கள் இயற்றத் தொடங்குமுன்
இச்செயல்தான்
நன்றாம் குறள்வழி நண்ணுவதோ அன்றி
மாறுவதோ
என்றே ஒருமுறை எண்ணி இயற்றுக இப்புவியில்
குன்றாக் குறள்வழி நின்றால் எவர்க்கும்
குறையில்லையே.

59. மதிவைத்த செஞ்சடை வானவன் மாமகள்
மல்குதென்றற்
பொதியத் தவமுனி போற்றி வளர்த்திட்ட
பூந்தமிழ்இப்
பதிமுற்றும் தெய்விகப் பாவலர் முப்பாற் பயனுறலால்
துதிபெற்ற உண்மையைத் தொன்னூல்கள் என்றும்
துணிந்திடுமே.

60. போரேது நாட்டிற் புரட்சிக ளேது பொதுவறத்தின்
சீரே தவிரத் திறம்புத லேது திகைத்த லெனும்
பேரேது சிந்தையிற் பேசுமுப் பாற்குறள் பெற்றியிந்தப்
பாரேறி மாந்தர்தம் உள்ளப் பழனம் பணைத்திடினே.

61. நாடுசெல் வேகத்தில் நல்லுணர் வென்பதும்
நாணமுற்றே
ஓடிப் புறஞ்செல ஒல்லையில் மாந்தர் உழன்றுதிரி
ஆடுகள் மாடுகள் ஆவதன் முன்னர் அருங்குறள்நூல்
நாடிப் பிழைத்திடு வோம்வரு வீரிவண் நம்மவரே.

62. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
பிறங்கிடுசீர்
தணிவில் தகைமதிச் சான்றோரும் சார்ந்துயர்
சால்பணைத்தும்
நணுகுமொண் நாட்டினை அன்றே படைத்திட்ட
நங்குறளின்
அணிமொழி ஆய்ந்துநம் அன்னைத் திருநா
டலர்த்துவமே.

63. ஊருணி உள்ளூர்ப் பயன்மரம் உற்ற உடற்பிணிகள்
தீரு மருந்துச் செழுமரம் மூன்றையும்
தேர்ந்தெடுத்துக்
காரென ஒப்புர வாற்றுதற் கேகுறள் காட்டிடினும்
சேரும் வரிசையிற் செப்பிய தொண்பொருள்
தேர்வதற்கே.

64. பாரில் உயர்ந்தது பாரத நாடிந்தப் பாரதத்தும்
சீரிற் சிறந்தது செந்தமிழ் நாடந்தச் செந்தமிழும்
வேரிற் பழுத்த பலவின் விளங்கிடு மெய்க்குறளால்
சேரும் தவம்பெற லாலுல கெங்கும் திகழ்கின்றதே.

65. மழலைப் பருவத்து மாறாச் செவிலி மழவிடையின்
அழகவிர் வாலிபத்(து) அன்புடை நட்பமர்
இல்லறத்தின்
வழிநடைக் குற்ற மகிழ்துணை வந்திடு மூப்பினிலே
பழிதவிர் நற்றுணை யாகும் திருக்குறள் பற்றுதுமே.

66. இலக்கியச் சோலையில் எத்துணை எத்துணை
இன்மலர்கள்
நலத்தகு நன்மணம் நல்கினும் அன்னவை
நாடில்இவண்
உலப்பில ஊழிகள் ஊற்றெழுந் தோங்கிடும்
ஒண்சுவைத்தேன்
புலப்பட இன்பம் புகட்டும் குறண்மலர்
போன்றிலையே.

67. இலக்கியங் கட்கோர் இமயப் பெருமலை யாகியுளப்
புலத்தகை யாளர் புகலிட மாய்ப்பொருட்
பூஞ்சுவைசேர்
நலத்தகை மூலிகை நாளுங் கொழித்திடு நல்லருவிக்
குலத்தொடும் இந்தக் குவலயம் ஓம்பும்
குறண்மறையே.

68. மாம்பழத் தின்சுவை மன்னும் அறத்திறன்
வேர்பழுத்த
தீம்பல வின்சுவை செய்யும் பொருட்டுறை
தேன்மருட்டும்
மேம்படு வாழைக் கனிச்சுவை இன்பத்துறை
விளக்கும்
ஆம்பரி சிங்ஙன முப்பால் தருஞ்சுவை
ஆய்ந்தவர்க்கே.

69. நெறியிது காணென நேர்வழி காட்டி நிலவுகுறள்
இறுதியில் ஒண்சுவை இன்பத்துப் பாலின்
இனிதமைந்த
உறுபொருட் பூங்குறள் ஒவ்வொன்றும் சிந்திப்பின்
உற்றமையும்
சிறுகதைக் குக்கரு வாயிடும் அன்றோ
தெரிந்திடினே.

70. பொன்னுக்குப் பாடிய தில்லை புகழ்க்குப்
புகன்றதில்லை
மன்னவ ராணை மறுப்பதற் கஞ்சி வகுத்ததில்லை
மன்னுயிர் வாழ்கென வள்ளுவர் நெஞ்சின்
வழிப்பிறந்த
தன்னிகர் நல்லருள் ஒன்றே குறளாய்த்
தழைத்திட்டதே.

71. வாண்முனை காட்டியும் வாழ்வினில் வாய்க்கும்
வளமுரைத்தும்
மாண்வினை யார்தத்தங் கொள்கை வளர்த்தனர்
ஞாலமெல்லாம்
ஏண்முறை அன்பினில் யாவரும் தாமுவந்
தேற்றொருமை
காண்செழுங் கொள்கையைக் காட்டுவ தாம்நங்
கவின்குறளே.

72. சென்றிட்ட நாளைத் திரும்பப் பெறாஉம் திறமறியோம்
என்றிந்த வாழ்வுக் கிறுதி வருமெனும் எண்ணமிலோம்
நின்றிட்ட நாட்களி லாயினு நேர்ந்து நிறைமதியில்
ஒன்றிட்ட நங்குறள் ஓதித் தெளிந்திட் டுயர்குவமே.

73. உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ள லென்னும் உணர்வுடையார்
அள்ளும் பெருமை அழக ரடிகளார் அன்பிசையக்
கொள்ளும் சிறப்புக் குறட்பீட மொன்றிக் குவலயத்தில்
தெள்ளும் விருப்பில் திருக்குறள் மாட்சி திகழ்விப்பதே.

74. வைகறை யாமம் துயிலெழுங் காலையில் வள்ளுவனார்
தெய்வத் திருவடி சிந்தித்துப் போற்றித் திருக்குறளின்
செய்யுட் கலைப்பொருட் செவ்வி கொளச்செப்பும் சீருடையார்
வையத்து வாழ்வாங்கு வாழுந் திறனறி வாய்ப்பினரே.

75. ஆயுந் தொறும்கல்வி யின்பம் தருமென ஆய்ந்துசுவை
தோயுந் தணிகைப் புராணத்தில் சொற்றனர் கச்சியப்பர்
ஏயுந் தரத்தினில் பன்முறை யின்குறள் ஏற்றமெலாம்
பாயும் விருப்பிற் பயின்றுளம் தேர்ந்திட்ட பான்மையினே.

76 வாழ்வாங்கு வையத்து வாழும் நெறிபடைக்
கும்படைத்துத்
தாழாமல் மாந்தர் தகைமையைக் காத்திடும்
தண்ணருளால்
கீழா யினதுன்பங் கேடுறப் போக்கிநற்
கேண்மைதரும்
ஊழால் உஞற்றிடும் வள்ளுவம் முத்தொழில்
ஊங்கினிதே.

77. ஒருமர முத்திறச் சாகைகள் தோற்றிநல் ஒண்கனிகள்
திருமலி யாயிர முந்நூற்று முப்ப துடன்திகழ்ந்து
இருமையு நல்கு மிருஞ்சுவை யீந்தங் கெவர்தமக்கும்
உரிமையில் ஞாலத்துள் ஓங்கிய தொக்குமிவ்
வொண்குறளே.

78. விருந்திடு வான்புலம் வித்தின்றி யேவிளை
வெய்துமெனும்
பரிந்துரை செய்யுமுப் பாற்கருத் தாய்ந்திடின்
பைந்தமிழர்
திருந்திடும் இல்லற வாழ்வில் உயிரெனத்
தேர்ந்ததுதான்
விருந்திடல் என்றிடு மேதக்க உண்மை
விளக்கிடுமே.

79. கற்றனைத் தூறும் அறிவென வள்ளுவம்
கட்டுரைத்த
பொற்புடைச் சொல்லின் பொருளறிந் தேம்புகழ்
சேரமிழ்தச்
சொற்குறள் ஒண்பொருள் சொல்லுந்
தொறுந்தொலை யாநலங்கள்
கற்பனை வெள்ளம் கரைகடந் தேசெலும்
காட்சியினே.

80. செல்வத்தி னற்பயன் ஈதலென் றேயுளம்
சிந்தைசெயாப்
புல்லியர் செல்வம் புதைத்தொழி வார்குறள்
பொன்மொழியால்
ஒல்லையில் மாணாப் பிறப்புறும் என்றெடுத்
தோதுவதும்
செல்லுவ தில்லை சிறுமதி யாளர்தம் சிந்தையிலே.

81. தெண்ணீ ரடுங்கஞ்சி யாயினும் தீதிலை
செய்ம்முயற்சி
உண்ணே ருழைப்பினில் உண்ணுத லேயுயர்
வென்றுகுறள்
மண்ணே ருழைப்பதன் மாட்சிமை போற்றிநல்
மன்பதைக்குக்
கண்ணா விளங்கிக் கருத்துற நல்வழி காட்டிடுமே.

82. இளிவரின் வாழாத மானத்த ராகுவிர் என்றுகுறள்
அளிவந் துரைக்கும் அதுதெளி யார்பொருள்
ஆக்குதற்காத்
துளியேனு மானத்தைச் சூழ்கில ராகிச் சுழன்றுமனந்
தெளியாது பாவஞ் செழிப்பவர் தம்மையென்
செப்புவதே.

83. சிந்தைக் கினியன செந்தமிழ் நூற்பொருட்
செம்மையினை
முந்த விளக்குவ முத்தமிழ் மேடையில்
மொய்ம்புகொளத்
தந்தம் திறமைக்கும் சார்துணை யாவன
சாற்றுமொழிச்
சந்தம் பெருக்குவ தண்குறட் பாக்களின் சால்புகளே

84. நத்தமும் கேடும் உளதாம்சாக் காடெனு நற்குறளின்
நற்பொருள் ஈதென நாட்டுவதா மிந்த நாட்டினிலே
வற்றாக் கொடைப்புகழ் வள்ளல ராயெம் மனந்தமதாப்
பற்றிடும் பாரிமுத லோர்தம் வாழ்க்கையின் பான்மைகளே.

85. பொய்யா விளக்கே விளக்கெனச் சாற்றும் பொதுமறைநூல்
செய்யா தொழிக கொலையது பொய்ம்மையின் தீங்குடைத்தாம்
மெய்யாகு நோன்பெனல் கொல்லாமை யென்றே விளம்பிடுதல்
எய்யாமை யாற்சிலர் செய்யா தனசெய் திடறுவரே.

86. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுற வென்னுமிவை
தீரா இடும்பை தருமெனுந் தீங்குறட் செய்தியினைச்
சீராருங் காப்பியச் சிந்தா மணியினும் பாரதத்தும்
பேரா நிகழ்ச்சிகள் பேசிடும் நெஞ்சுறும் பெற்றியினே.

87. அற்றார் அழிபசி தீர்த்தல்அஃ தொன்றே அருநிதியம்
பெற்றார் தமக்குப்பின் னாள்பெறும் பெற்றியிற் பேணிவைத்த
பொற்பாகு நல்லற மென்றே பொதுமறை போற்றுவதைக்
கற்றார் எளியார் கடும்பசி போக்கிடுங் காதலரே.

88. எண்ணில வாயிர ஆண்டுகண் முன்னர் இருந்தமிழர்
நுண்பொருள் சித்த மருத்துவம் தேர்ந்திட்ட நேர்மையினை
மண்ணினில் நூலோர் வளிமுதல் எண்ணிய மூன்றெனவே
எண்ணி யியம்பும் குறண்மொழி ஏற்றத்தை எண்ணுதுமே.

89. இறையுயிர் கட்டெனு மூன்றின் இயல்பினை எண்ணுநலம்
நிறையுயர் சைவத்தின் நிீணெறி அங்கண் நிறைந்திடலால்
மறையெனு நந்தம் திருக்குறள் சைவத்தின் மாட்சிமைகள்
முறையுறப் பண்டே மொழிந்திட்ட தாகு முரணொழித்தே.

90. வெய்யன வாயினும் வேம்புங் கடுவும் விரைந்துடலம்
நையும் பிணிதெறும் தீர்மையில் மெய்ப்பொருள் நேர்வகுக்கும்
பொய்யில் புலவன் பொருளுரை சிற்சில பொங்குசினம்
செய்வது போன்றுநஞ் சிந்தையிற் புன்மைகள் தீர்த்திடுமே.

91. சொல்லுங் கரும்பின் சுவைதான் அடியில் தொடங்கிநுனி
எல்லையும் ஒத்திடல் இன்றிக் கணுக்கள் இடைவிரவும்
வெல்லுங் குறளின் விரும்புஞ் சுவையோ மிளிருமெங்கும்
இல்லை அதனிடை ஏற்றத்தாழ் வென்பன எங்கணுமே.

92. நன்னூல் நுனித்தறி நாவல ராயினு நங்குறளாம்
இந்நூலின் காலமிஃ தாமென எண்ணி
இசைத்தவர்தாம்
இந்நாள் வரையினும் இல்லை யியம்பிடு வார்பலரும்
முன்னாகப் பின்னா முரணுற்ற தோடு
முடிந்திட்டதே.

93. கற்பனை காலம் கடந்த கடவுளின் காட்சியென
நிற்கும் பொதுமறை நீர்மையெண் ணார்அதற்
கிங்குநிதம்
முற்படப் பிற்படக் காலங் கணித்து முரணுகின்றார்
நெற்குற்ற லின்றி உமிக்குற்றி நொந்திடும்
நீர்மையரே.

94. முப்பால் இலக்கியம் முற்றவும் கற்றவ தானித்திடும்
அப்பா வலருக் கருநிதி ஆண்டுதோ றும்அளித்தல்
செப்பார் குறளிதைத் தேசிய நூலெனச் செய்திடுதல்
இப்பார் அளித்திடும் ஆட்சியர்க் கின்றுள
இன்கடனே.

95. இனிவரும் பாடதிட் டங்களில் இன்குறள்
நூற்கெனவே
தனியிடம் தேர்வு தனிமதிப்(பு) எண்ணெனத்
தானமைத்தால்
கனிமொழிப் பாலர் கருத்தில் மகிழ்வுடன் கற்றிடுவார்
மனமுறு மாட்சியி னால்எதிர் கால மலர்விப்பரே.

96. நன்றி மறப்பது நன்றன் றெனவும் நயந்தவர்செய்ந்
நன்றி மறந்தவர்க் குய்வில்லை என்றும்
நவின்றகுறள்
இன்று மறப்பதுண் டோகுறள் தந்தார்
எழின்மலர்த்தாள்
என்றும் மனமொழி மெய்யிவை யேற்புற வேத்துவமே.

97. யார்படைத் தாரினி யார்பெறு வாரினை யாதுமிலாச்
சீர்மிகும் இன்புத் திருக்குறள் யாம்பெற்ற சீர்த்திகண்டு
பார்முழு தும்நமைப் பாராட் டிசைக்கும் பருமகிழ்வால்
மார்புயர்ந் தோங்கிடத் தோள்கொட் டிடுநந்தம் மாட்சிமையே.

98. காற்றுள்ள போதே கடுகிநெல் தூற்றும் கணக்கறிந்தும்
நேற்று வரைக்கும் நினைவின்றிச் சோம்பி நிலையழிந்த
வேற்றுமைக் குற்றம் விலகிப் புறஞ்செல மெய்க்குறளால்
தேற்றம் உணர்ந்து தெளிவோம் இனியோர் திகைப்பில்லையே.

99. கருத்தரங் கங்களுங் காணற் கினிய கலையரங்கும்
பருத்த வொலிகொளும் பட்டிமன் றங்களும் பண்டிதர்தாம்
வருத்தமொன் றின்றி வழக்காடு மன்றமு நாடெங்கணும்
விருப்பில் குறள்நெறி மெய்ம்மைகள் வென்றிட மேவுகவே.

100. முற்றவும் ஓதினம் முப்பாற் சுவையினை மொண்டருந்திக்
கற்றனம் என்று கருதற்க நெஞ்சே கலைநிறைந்த
நற்றவர் ஆய்ந்திட நாளும் புதுமை நனிவிளங்கும்
சொற்பொருள் ஆழங்கள் துய்த்திடத் துய்த்திடத் தோன்றிடுமே.

101. முற்றா மழலைப் பருவத் திருந்தே முதியதமிழ்
நற்றாய் அவள்தன் நறுங்காப் பினில்யான்
நனிவளர்ந்தேன்
பற்றோடும் அன்னாள் பணித்த படிகுறட்
பாவனைத்தும்
கற்றே தெளிவடைந் தேன்இனி யான்செல்
கதியதுவே.

102 ஊழி பலகண் டுயரும் குறண்மறை
ஒண்மைகளில்
ஏழிசை யின்பக் கருத்துச் சிலவற்றை
யின்றெடுத்துக்
காழில் விருப்பொடும் கட்டுரைத் தேனிக்
கனித்தமிழ்நூல்
சூழும் கலைஞர்க்கு நல்விருந் தாகித்
தொடர்ந்திடுமே.



# உள்ளுதற்கினிய திருவள்ளுவம்

## குறிப்புரை

### காப்பு

ஐந்தொழிலும் ஆற்றும் முழுமுதலைப் போற்றியது இக்காப்புச் செய்யுள். உள்நின்று - நெஞ்சினுள் நிற்ப. வான்நின்று என்பதற்குப் பரிமேலழகர் மழை இடையறாது நிற்ப எனப் பொருள் கூறினார். வள்ளுவத்தின்சீர் - திருவள்ளுவர் அருளிய திருக்குறளின் மாட்சிமை.

### நூல்

1. சங்கப் புலவர் செய்த நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினென் கீழ்க்கணக்கு என்பன. காப்பியங்கள்: ஐம்பெருங்காப்பியம் ஐஞ்சிறுகாப்பியம் என்பனவாம்.

சங்க இலக்கியங்களில் திருக்குறள் கையாளப்பட்ட இடங்களிற் சில,

பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே - புறம் 35

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். - குறள் 1034

அறநெறி முதற்றே அரசின் கொற்றம் - புறம் 55

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. - குறள் 384

.............................................................

நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே - புறம் 188

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். - குறள் 64

ஆன்முலை யறுத்த அறன் இல்லோர்க்கும்
......வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்றார்க்கு உய்தி இல்லென
அறம்பா டின்றே ஆயிழை கணவ!........ - புறம் 34

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. - குறள் 110

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயு மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே. - புறம் 183

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். - குறள் 395

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு. - குறள் 408

தம்மில் தமதுண் டன்ன சினைதொறும்
தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடன் - குறுந் 83

தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. - குறள் 1087

முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர் - நற்றி. 355

பெயக் கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். - குறள் 580

(மேலும் குறிப்புகள் திரு. க.த. திருநாவுக்கரசு, எம்.ஏ., எம். லிட். அவர்களின் 'சங்க இலக்கியங்களில் திருக்குறள்' என்னும் தி. தெ. இ. சை. சி. கழகப் பொன்விழா மலர்க் கட்டுரையிற் பரக்கக் காண்க).

தொழுததங் கையினுள்ளும் துறுமுடியகத்தும் சோர
அழுதகண் ணீரினுள்ளும் அணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுடன் ஒடுங்கும் பற்றா(து)
ஒழிகயார் கண்ணும் தேற்றம் தெளிகுற்றார் விளிகுற்றாரே
- சிந்தா 1891

தொழுத கையுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. - குறள் 828

செய்கபொருள் யாரும் செறுவாரைச் செறுகிற்கும்
எஃகுபிறி தில்லை யிருந்தே யுயிரு முண்ணும்
ஐயமிலை இன்பம் அறமோடவையு மாக்கும்
பொய்யில் பொருளே பொருள் மற்றல்ல பிற பொருளே.
- சிந்தா. 497

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில் - குறள் 759

அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். - குறள் 754

அறவியங் கிழவோன் அடியிணை யாகிய
பிறவி யென்றும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய் ஆங்குள தாதலின் - மணி.11-28-5

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார். - குறள் 10

பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
- மணி. 16-86-7

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. - குறள் 339

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வம் தொழுந் தகைமை திண்ணிதால் - தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து - சிலம்பு. கட்டுரை

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை - குறள் 55

முட்டுகாள் நச்சு மரம் முளையாகவே
ஒட்டக் நீக்கின் உகிரினு நீக்கலாம்
கட்கொடார் மன்ன யார்களை கிற்பவே - சூளாமணி

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து. - குறள் 879

ஒருவன திரண்டு யாக்கைஊன் பெய்து நரம்பு போர்த்த
உருவமும் புகழுமென்றாங்(கு) அவற்றினான்ஊழின் வந்து
மருவிய யாக்கை யிங்கே மாய்ந்திறும் மற்ற யாக்கை
திருவமர்ந் துலகமேத்தச் சிறந்துபின் நிற்குமன்றே
- சூளாமணி

நத்தம் போற்கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது. - குறள் 235

ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில். - குறள் 233

ஆகவெனின் ஆகஇவர் அழியவெனின் அழிக
மேகமிவண் வருகவெனின் வருமதுவும் விதியின்
ஏகமன ராமுனிவர் பெருமையிது வாகு
மாகமழை வண்கைமத யானைமணி முடிபோய்
- யசோதர 5 (8)

வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும். - குறள் 265

கருமம் அறுத்த கைதூ வமையத்து -பெருங்;
உஞ்சை 36:42

கருமம் செய வொருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில் - குறள் 1021

இகழ்ச்சியின் விட்ட இறைவன் போல
மகிழ்ச்சியெய்தி - பெருங். உஞ்சை 44,45-6

இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. - குறள் 539

ஒற்று மாக்களை ஒற்றரின் ஆயா
முற்றனக் குரைத்த மூவர் வாயவுள்
ஒத்தது நோக்கி மெய்த்தகத் தேறி
- பெருங். மகத 25,48-50

ஒற்றொற் றுணரா மை யாள்க உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும். - குறள் 589

நவில் தொறும் இனிய ஞானம் போலப்
பயில் தொறும் இனிய நின்பண் புடைக்கிழமை
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள மின்புற
- பெருங். நரவா. 3,148-50

நவில்தொறும் நூனயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. - குறள் 783

2. குறிப்புரை: சிவஞான மாமுனியாகிய நம்பி. நம்பி-ஆண்களிற் சிறந்தவன். வில்லி-வில்லிபுத்தூரார். காண்டும்-காண்கிறோம். நாடினர்-தேடிக் கொண்டார்.

கம்பர் திருக்குறளைத் தம் காப்பியத்தில் ஐந்நூறுக்கு மேற்பட்ட இடங்களில் எடுத்தாண்டன ரென்ப. அவற்றில் ஒருசில மட்டும் இங்குக் குறிப்பிடலாம்.

தங்கள் நாயகரின் தெய்வம் தான்பிறி திலையென்
றெண்ணும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது - பால. வேள்வி 6

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. - குறள் 55

எள்ளுவ என்சில இன்உயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால் [பால.வேள்வி 16
நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. - குறள் 222

எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்று
உண்ணவும் நிலைபெறா துணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்.
- பால. மிதிலை 33

கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின்
என்ன பயனு மில. [வாய்ச்சொற்கள்
குறள் 1110

போர்என்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள்
திண்டோள்
மாரன் அனையான் மலர்கொய் திருந்தானை வந்தோர்
காரன்ன கூந்தல் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆர்என்ன லோடும் அனலென்ன அயிர்த்து யிர்த்தாள்
- பால. பூக்கொய் 18

யாரினுங் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று. - குறள் 1314

அறைபறை யனைய நீரார் அருமறைக் காவரோதாம்
- பால உண்டாட்டு 56

அறைபறை யன்னர் கயவர் தாங்கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைத் தலரின்.

ஊருணி நிறையவும் உதவும் மாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்
கார்மழை பொழியவும் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின் றார்கள்யார்
- அயோத்தி, மந்திர 81

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. - குறள் 215

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின். - குறள் 216

வேண்டின வேண்டினர்க்கு அளிக்கு மெய்த்தவம்
பூண்டுளர் ஆயினும் - ஆரண்ய. அகத்தி 8

வேண்டிய வேண்டியாங் கெய்தலான் செய்தவம்
ஈண்டு முயலப் படும். - குறள் 265

மூதெரி வளர்க்கிலெம் முறையில் நீங்கினேம்
ஆதலின் அந்தணரேயும் ஆகிலேம்
- ஆரண்ய. அகத்தி 14

பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். - குறள் 134
- விரிவஞ்சி இத்துடன் நிறுத்தினம்.

சிவஞான முனிவர்:

உருதிட்பம் உறாக்காலை தலைநிறீஇ உற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
பெருக்கத்து வேண்டுமால் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டும்உயர் வெனுமொழியின்
சுவைதேற்றும்
காஞ்சி. திருநாட்டு 97

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. - குறள் 963

ஏதிலர் பொருளும் தம்மபோல் பேணி வாணிபம் ஈட்டுநர்
காஞ்சி திருநகர் 105

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின். - குறள் 120

வண்டிமிர் கூந்தல் இமயவல்லி வன்முலைதாக்க
மகிழ்ந்துபுல்லிக்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றுப் பன்னாட் கலவிப்
பெருநலம்
- துய்க்குங்காலை காஞ்சி சுரக. 27

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. - குறள் 1101

வில்லிபுத்தூரர்:

கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லால் உருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வின் இனிமை யென்னாம்
பாரத. சம்ப. 58

மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. - குறள் 65

தொழுத கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்
பாரத். வாரண 118

தொழுத கையுள்ளும் படையொடுங்கும் ஒன்னர்
அழுதகண் ணீரும் அனைத்து. - குறள் 828

கண்ணுக்குப் புனை மணிப்பூண் கண்ணோட்டம்
என்பது
எல்லாம் கருணை யன்றோ. -அருச்சுனன் 42

கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென் றுணரப் படும். - குறள் 575

முனைவரு கூர்முள்வேலை முளையிலே களையின்
அல்லால்
நனிவர வயிர்த்தபோது நவியமும் மடியும் அன்றே.
சூதுபோர் 10

இளைதாக முண்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து. - குறள் 879

யாது ஒரு கருமமேனும் எண்ணியே துணிக என்றும்
காதலின் துணிந்து செய்தால் எண்ணுதல் கடன் அன்று
ஓதுநூல் புலவர் சொன்னார். [என்றும்
- சூதுபோர். 265

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு. - குறள் 467

தீயினால் சுட்ட செம்புண் ஆறும் அத்தீயின் தீய
வாயினால் சுட்ட மாற்றம் மாறுமோ வடுவே யன்றோ
சூதுபோர். 269

தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. - குறள் 126

பெண்மொழி கேளார் என்றும் பெரியவர் எனக்
மண்மொழி வார்த்தை பொய்யோ [கொண்டிந்த
- பழம்பொருந்து. 12

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதமை யில். - குறள் 910

3. குறிப்புரை: கச்சியப்ப முனிவர் பாடியதாக இங்குக் குறிப்பிட்டது விநாயக புராணம். இப்புராணத்தில் அரசியற் கைப்படலத்தில் சோமகாந்தன் என்னும் வேந்தன் தன் மைந்தன் ஏமகண்டனுக்கு அறிவுறுத்தும் வகையில், திருக்குறளின் அறம் பொருள் இரண்டு பால்களின் கருத்துக்களை முழுவதும் எடுத்து விளக்கியிருக்கிறார். எடுத்துக்காட்டாக ஓரிரண்டு இடங்களை மட்டும் ஈண்டுக் குறிப்பிடலாம்.

அன்புறும் அறத்தினால் அடுக்கும் இன்பமே
இன்பெனத் தக்கதா லேனை யின்பெலாம்
துன்பமும் பழியையும் தோற்று மாதலால்
வன்புறும் அறத்தினை மறபிற் கேடுறும். விநா. அரசி 18

அறத்தான் வருவதே யின்ப மற்றெல்லாம்
புறத்த புகழு மில. - குறள் 39

வருவாய்க் கியைய வாழ்தலுறு மறுவில் கற்பின்
மனையாள்போற்
பொருள்யா வுளவா மதுவன்றிப் புகழும் பயனு
மிகவுண்டாங்
கருதா ரெதிரே யிமிலேற்றுக் காமர் நடையு முறுமதனால்
ஒருவா தவளோ டுவப்புறவே யுற்று வாழ்தல் அறனாகும்.
- அரசியல் 19

மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. - குறள் 51

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். - குறள் 53

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை - குறள் 56

4. குறிப்புரை: திருக்கோவையாரில் நூறு செய்யுட் களைத் தேர்ந்தெடுத்துக் கல்லாடர் செய்த நூறு பாக் களை மதுரைச் சொக்கநாதர் சந்நிதியில் அரங்கேற்றிய போது அப்பெருமான் ஒவ்வொரு பாட்டுக்கும் தலையசைத்து மகிழ்ச்சி புலப்படுத்தியதாகக் கூறுவர். கல்லாடர் தம் நூலில்,

சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்.

என்று இறைவன் திருக்குறளைப் பாராட்டியதாக வள் ளுவ மாலையின் முதற்கண் வரும் செய்யுளை நினைவு கூர்ந்தனர்.

5. குறிப்புரை: 'தலையே நீ வணங்காய்.......தேடிக் கண்டு கொண்டேன்' எனும் அப்பரடிகளார் திருவங்க மாலை,

கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. - குறள் 9

என்பதன் விளக்கமாகும்.

.......ஆரூரரைக்
கையினாற் றொழா தொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வனேனே. - 4ந் திருமுறை

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. - குறள் 100

உற்றலால் கயவர் தேறார் என்னும்கட் டுரையோ
டொத்தேன்
- 4ந் திருமுறை

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ் - குறள் 1078

கேளு மின்இளமைய்யது கேடுவந்து
ஈளை யோடிரு மல்லது எய்தல்முன்
கோள ரவணி கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமின் நன்காகுமே.
- திருக்குறுந்தொகை

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். - குறள் 335

. ...தொடர்வறுப்பான் தொல் புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்கா ணம்மானாய்
- திருவாச. திருவம்மானை 20

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. - குறள் 350

கோலத் தனிக்கொம்பர் உம்பர்புக் கஃதே குறைப்பவர்தம்
சீலத்தன கொங்கை தேற்றகிலேம் சிவன்
தில்லையன்னான்
நூலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாதுநுண்
தேன்நசையால்
சாலத் தகாதுகண் டீர்வண்டு காள்கொண் டை
சார்வதுவே.
- திருக்கோவை 45

நுனிக்கொம்ப ரேறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும் - குறள் 476

அணியும் என்ஆவியும் ஆயவன் தில்லைச் சிந்தா
மணியும்ப ரார்அறியா மறையோ னடிவாழ்த்தலரில்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும்
பணியும் புரைமருங் குல்பெருந் தோளி படைக்கண்களே
- திருக்கோவை 5

இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கு ஒன்றந்நோய் மருந்து. - குறள் 1091

சூத நெருங்கு குலைத் தெங்கு பலவு பூகஞ்
சூழ்வுடைத்தாய்
வீதிதோறு நீற்றி னொளி விரிய மேவி விளங்குபதி
நீதிவழுவா நெறியினராய் நிலவுங் குடியால் நெடுநிலத்து
மீதுவிளங்குந் தொன்மையது மிழலைநாட்டுப்
பெருமிழலை
- பெரியபுராணம், பெருமிழலை 1

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. - குறள் 731

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உளவென்னும் - பண்டையோர்
கட்டுரையை மேம்படுத்தாள்

........................................ ........................................

இல்லாரை யெல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பென்னும் - சொல்லாலே

........................................ ........................................

*திருக்கைலாய ஞானவுலாவில் 1101, 751வது திருக்குறள்கள் முழுவதும் வெளிவந்துள்ளன.*

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமால் - சார்பு
கெடவொழுகல் நல்ல சமாதியு மாம்கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.

- திருக்களிற்றுப் படியார் 34

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய் - குறள் 359

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று - நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர்உரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்.

- நெஞ்சு விடுதூது 23-25 (குறள் 348)

6. குறிப்புரை: சிவப்பிரகாச அடிகளும் கம்ப நாடரைப் போலத் திருக்குறளைத் தம் இலக்கியங்களில் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். அவற்றை முற்றுங் குறிப்பிடுதல் இயலாது. ஒருசில எடுத்துக்காட்டுக்களை மட்டும் இங்குக் குறிப்பிடுதல் சாலும்.

தளர்ந்துழி உதவும் கல்வி
தானெனத் துருவா சப்போர்

கொளுந்தனி முனிவர் கோமான்
குறுகலும். - பிரபு, மாயை 34

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். - குறள் 415

குழலும் யாழும் இனியவெனக்
கூறா வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும் உடற்கின்பம்
மருவ வோடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிகவினிய
விளைய நுகரும் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்தும்
செய்தாள் மோகம் ஈன்றோரை. பிரபு. மாயை 32

அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ். - குறள் 64

மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. - குறள் 65

குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்
மழலைச் சொல்கேளா தவர். - குறள் 66

காலை யரும்பிப் பகலெல்லாம்
போதா யிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பெறாமல் - பிரபு பிரபு 56

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். - குறள் 1227

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடையை - மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்துத் திரிகுவர்மற்
றுந்தும் சிவிகையினை யூர்ந்து.

- நால்வர் நான்மணி மாலை 33

இப்பாடலில் குறள் 37 முழுதும் இடம்பெற்றது.

பாயு மலர்த்தாள் பொழில்சூழும் வெங்கைப் பழமலைசீர்
ஆயு முனிவரர் தாமே முனிவரு ளாக்குதல்போல்
நோயுமந் நோய்க்கு மருந்துந் தரநிற்கும் நாற்பகவில்
தோயு மருங்கில் பெருமுலை மாதர் திருக்கண் களே.

- திருவெங்கைக் கோவை 5

*இப்பாடலில் 1109 வது திருக்குறள் முழுதும் இடம் பெற்றது.*

வாய்மை எனினும் புலரியைக் கூறுதல் வாரணங்காள்
சேய்மை யறுநங் கொழுநர்தங் கூட்டம் சிதைத்தெமக்குத்
தீமை பயந்தமையால் வெங்கை நாயகர் செய்தவறத்
தூய்மை யுணர்ந்தவர் வாய்மையன் றாமெனச்
சொல்லுவரே.

- திருவெங்கை 211

வாய்மை யெனப்படுவ தியாதெனில் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.
- குறள் 291

அனிச்சமு மன்னத்தின் தூவியு மாத ரடிமலர்க்குச்
சனித்த நெருஞ்சிப் பழமென் றறிந்தும்........

- திருவெங்கை 810

அனிச்சமு மன்னத்தின் தூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.
- குறள் 1120

ஏனைச் சான்றோர் பெருமக்கள் எனக் குறிப்பிட்டது, புலவர் வரிசையில் கச்சியப்பச் சிவாசாரியார், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், குமரகுருபரர், அதிவீரராமர் போன்ற கவிஞர் பெருமக்களாவர்.

7. குறிப்புரை: இராமலிங்க அடிகளார் அருளிய திருவருட்பாவில் பல இடங்களில் திருக்குறள் கையாளப்பட்டிருப்பது காணலாம். அவற்றுள் சில:

.................................... ஆய்ந்தோர் சொல்
கூத்தாட்டவை சேர்குழாம் விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறள்மொழியும் தேர்ந்திலையே

- நெஞ்சறிவுறுத்தல் 410, 11

செல்லாவிடத்துச் சினந்தீது செல்லிடத்தும் -குறள் 302

இல்லதனிற் றீயதென்ற தெண்ணிலையே-மல்லல் பெறத்
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க என்றதனைப்
பொன்னைப் போற் போற்றிப் புகழ்ந்திலையே - துன்னி
அகழ்வாரைத் தாங்கு நிலம் போல வென்னும்
திகழ்வாய் மையுநீ தெளியாய்
நெஞ்சறிவுறுத்தல் 433, 34, 35 (குறள் 302, 305, 151)

8. எதிர் நிரல் நிறை; திருக்குறளின் சிறப்பினை இடைக்காடரும், அவ்வையும் முறையே "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்" என்றும், "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்" என்றும் பாராட்டினர்.

9 குறிப்புரை: நன்னெறி சொற்றவர் சிவப்பிரகாச அடிகள், திருவெங்கை யுலாவில்,

"வற்புறுத்த வோர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொறுத்தி யோதும் துணிவுபோல் - தற்பதத்தால்
ஓதும் பிரமமொரு தானென்ப தொன்றனைமால்
காதுபவம் பத்தெடுத்துக் காட்டினோன்" என்கிறார்.

10. "வள்ளுவன் றன்னை உலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

- என்பது பாரதியார் வாக்கு. உலக மொழிகள் பலவற்றுள்ளும் திருக்குறள் மொழி பெயர்ந்திருப்பது பாரதியார் வாக்கினை மெய்ப்பிக்கிறது.

11. குறிப்புரை: "திருவள்ளுவர் அறத்தில் நின்று, பொருளில் புகுந்து, இன்பத்தில் இயைந்தால் அவர்தம் உள்ளம் புலனாகும்."

"திருவள்ளுவர் அருளிய திருக்குறள் என்னும் தெய்வ மறையினிடத்தில் எனக்குத் தணியாக் காதலுண்டு. காரணம் பலப்பல. சிலவருமாறு: திருவள்ளுவர் முப்பால் கூறி

வீட்டுப்பால் விடுத்தது; அறப்பேற்றுக்கு இல்வாழ்க்கையைக் குறித்தது; பெண்ணை வெறுத்தல் முதலிய போலித் துறவுகளைக் கடிந்தது; மனமாசகற்றலே துறவென்று இயற்கை நுட்பத்தை விளக்கியது; இயற்கைப் பொது நெறியை அறிவுறுத்தியது. இன்ன பிற.''

- திரு. வி. க. வின் திருக்குறள் விரிவுரை அணிந்துரை.

12. ......மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றும் வல்லமையைத் தம்முள் இணக்கம் கொண்டு நிகழ்ந்தால் தான் ஒருவா ஆற்றலுடையவராய் மதிக்கப்படுவர். அவர் செய்கைகளும் வல்லமையாய் நிகழ்ந்துநிறைவேறும். திருவள்ளுவர் அத்தகைய தெய்வத்திரு அமைந்தவர். அவர் திருக்குறளும் அதனால் முப்பாலாய் முகிழ்த்தது. அறத்துப்பால் ஞான வல்லமையும், பொருட்பால் செயல் வல்லமையும், இன்பப்பால் ஊக்க வல்லமையும் மிக்கு மக்கட்கு வாக்கு, காய, மன வலிமைகளைப் பெருக்கி வருகின்றன.

- அழகரடிகள், தமிழ்மறைச் சிறப்பு, பக்கம் 59

13. திருவள்ளுவர் கருத்துப் பெருகிப்பெருகி, இந்நாளில் விஞ்ஞானத்தில் விராவி, மார்க்ஸியமாகவும் தெய்விகத்தில் கலந்து காந்தியமாகவும் பரவியுள்ளது. விஞ்ஞான மார்க்ஸியமும் தெய்விகக் காந்தியமும் ஒன்றிய ஒரு கொள்கையே இக்கால உலகை ஒருமைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது. இதை உணர்ந்து தொண்டாற்ற நம் நாடு முற்பட்டால் உலகம் நலம் பெறும்.

-டாக்டர் மு.வ. அவர்கள் திருவள்ளுவர் அணிந்துரையில்

14. ஜி. யு. போப்பு எனும் மேனாட்டறிஞர், திருக்குறள், நாலடியார், திருவாசகம், திருக்கோவையார் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். திருக்குறள் மொழிபெயர்ப்பே அவரை இறவாப் புகழில் இருத்தியது.

15. எம். ஆரியல் என்னும் அறிஞர் திருக்குறளைத் தமிழ்மொழியின் சாதனை என்றே கூறுகிறார்.

> The Kural is the masterance of Tamil Literature. One of the highest and purest expressisons of human thought.
>
> M. Ariel

16. திருக்குறளில் ஒவ்வொரு செய்யுளும் ஓர் இரத்தினச் சுரங்கம் போன்றது. அச் சுரங்கத்தில் நுழைபவர் தோண்டத் தோண்ட பலவகை ஒளிமணிகளைக் காண்பர்.

It seems to me that each one of these 1330 verses is like any rich mine of precious stones and more you dig the more is your find and frequenly you stumble on stones of great lustee and beauty.

– Mr. Justice V. V. Srinivasa Iyengar
in his forward to திருக்குறள் விளக்கம்
by Thiru. Kuppuswamy Mudaliar.

17. வின்சென்ட் ஸ்மித் என்னும் வரலாற்றுப் பேரறிஞர் தாம் எழுதிய 'Ancient India' என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார்.

"_____ The Kural is described as being the most venerated and popular book south of Godavari .... the iiterary treasure, the poetic mouth piece, thehighest type of verbal and moral excellence among the Tamil people. The author taught ethical doctrin of singular purity and beauty which cannot, so far as I know be equalled in the sanskrit Literature of the north"

18. 'தேம்பாவணி' என்னும் செழுந்தமிழ்க் காப்பியம் கிறித்தவ மதக் கோட்பாட்டைக் கொண்டது; செய்தவர் வீரமாமுனிவர். இத்தாலி நாட்டைச் சேர்ந்த இவ்வறிஞர்

தமிழகம் போந்து நம் மொழியைத் துவரக் கற்றுப் பெரும் புலமை பெற்றுத் திருக்குறளின் அறம், பொருள் இரண்டையும் இலத்தீன் மொழியில் எழுதினமையால், பல மொழிவாணரும் திருக்குறளின் பெருமையுணர்ந்து மொழி பெயர்க்கலாயினர்.

19. 'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' எனும் முதுமொழியின் உண்மை உணர்ந்திடச் சோழன் அநபாயன் அனுப்பி வைத்த பெருமக்கள், ஞாலத்தை விடப் பெரியது எது? கடலினும் பெரியது எது? மலையினும் பெரியது எது? என மூன்று வினாக்கள் எழுப்பிய போது அருண்மொழியார் எனும் சேக்கிழார் பின்வரும் மூன்று திருக்குறள்களை விடையாகக் கூறினார். அவை:

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

என்பனவாம். இவர் சான்றாண்மையறிந்த சோழன் இவரைத் தம் முதலமைச்சராகக் கொண்டனன்.

20. இக்குறட்பாவின் கருத்தினையொப்பச் சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணத்தில், 'கொலை' போன்ற தீய சொற்களைக் கையாள வேண்டிய நேரத்தில், அப்பெருமான் அச்சொற்களை அஞ்சி ஒதுக்கியிருக்கும் திறன் அறிஞர் உளத்திற்கு உவகை தரும். வஞ்சக அமணர், திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்ட செய்தியைச் சொல்ல வந்த சேக்கிழார்

.......—....... தழல்கொடு புக்(கு)
அந்தண் மாதவர் திருமடப் புறத்தயல் இருள்போல்

வந்துதம் தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர்
என்றும் - திருஞான 700

சிறுத்தொண்டரும் மனைவியாரும் தம் அரும் பெறல் மகனை அரிந்திட நேர்ந்த நிலைமையை

......—....அகமலர
இருவர் மனமும் பேருவகை யெய்தி யரிய
வினைசெய்தார்.

என்றும் - சிறுத்-64

மெய்ப்பொருளாரை முத்தநாதன் வாளால் மாய்த்த நிலைமையை,

கைத்தலத் திருந்த வஞ்சகக் கவளிகை மடிமேல்
வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும்
போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தவப் பரிசே செய்ய
மெய்த்தவ வேடமேமெய்ப் பொருளெனத் தொழுது
வென்றார்

என்றும் குறிப்பிட்டது காண்க. - மெய்ப்பொருள் 15

21. பிற கோவை நூல்களில் சொல்லப்படும் பரத்தையர் ஒழுக்கங்கள் திருக்குறள் இன்பத்துப்பாலில் இல்லை, இல்லை தவறவர்க்காயினும் ஊடுதல் வல்லது அவரளிக்குமாறு என்னும் திருக்குறளால் தலைமகள் உயர்வு காட்டப்படுகிறது என்பர். திரு மு. ராகவையங்கார் (பொருளதிகார ஆராய்ச்சி)

22. திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் இறைவனைப் போற்றிய மொழிகள் திருக்குறளுக்கும் பொருந்துவதாம்.

23. எண்ணிய-பலவின்பால் படர்க்கை வினைப் பெயர்; முப்பாற்கடல் என்பதற்கேற்ப ஆடுமின் எனப் பட்டது. பூணுதிரேல்- கொள்ளுவீர் ஆயின்.

24. நாலடியாரின் தொடக்கத்திலேயே நிலையாமை பேசப்படுகிறது, அது சமண மதத்தார் சித்தாந்தம். இல் வாழ்வில் ஈடுபடும் ஒருவனுக்குத் தொடக்கத்திலேயே நிலையாமை, ந ர க ம் முதலியவற்றை வற்புறுத்துவது நன்மையாகாது,

25, 'வீடு' என்பது அன்புடை இருவர் ஆற்றிடும் இல்லறத்தில் துய்ப்பன அனைத்தும் துய்த்தபின், துய்த் தவற்றில் அவர் படிப்படியாக விலகி இறையுணர்வில் மிகுந்தவராய் உள்ளத்தில் அருள் நிறைந்து வாழ்ந்திடு தலே ஆகும். வாழ்வின் துவக்கம் அதுவே யாகும்.

26. விருந்து புறந்தருதல் முதலான மனையறங்கள் வாயிலாக ஒருவன் அன்பு செழித்துப் பின்னர் அருளாள னாகத் திகழ முடியும் என்பது கு ற ள் காட்டும் வாழ்வு நெறியாகும்.

27. 'பெண்ணெனும் 'மாயப் பிசாசு' என்று பேசு டவரும் உண்டு. அது தவறென்று பேசுவது திருக்குறள்.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

- குறள் 54

'மனைக்கு விளக்கம் மடவார்'

- நான்மணிக் கடிகை 103

28. புகழ் புரிந்து-கணவன் மனைவி ஆகிய இருவரி டத்தும் நன்மை யமைந்த புகழை விரும்பி; ஆக்கமும் ஊக்கமும் ஆகுதல்-கணவன் செயல்களுக்குத் துணை யாக இருந்து ஊக்குவித்தல் மனைவியின் சி ற ந் த இ ல் ல ற க் காப்பினாற்றான் கணவனின் முயற்சிகள் முட்டின்றி முடியும்.

வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
நமக்குரைத் தோரும் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே

குறுந்-135

நாகரிகத்தின் பேரால் இயல்புக்கு மாறாகச் செய்தல் மனை வாழ்வுக்கு நலம் தருவதன்றாம்.

29. திருக்குறள் இடுக்கண் அழியாமை அதிகாரத்தை நோக்கவும். பிழைப்பின்-தவறு செய்யின். இடித்து-கண்டித்து.

30. திருக்குறளின் பழைய உரையாசிரியர்கள் மணக்குடவர், பரிமேலழகர், பரிதியார், தாமத்தர், நச்சர், காளிங்கர், பரிப்பெருமாள், திருமலையர், மல்லர் என்பர். பிற்காலத்தில் சரவணப் பெருமாளையர், கோ. வடிவேலு செட்டியார், திரு. வி. க., அழகரடிகள், புலவர் குழந்தை, நாமக்கல் கவிஞர் போன்றாரும் உண்டு.

31. தாயினும்-தாயைக் காட்டினும்; சேயுயர்ந்தார்-மிக மேம்பட்டவர்; சாற்றுதும் - ஓதுவோம்.

32. சமயங்கள் சாத்திரங்கள் அனைத்தும் மக்கள் உள்ளத்தில் சிக்கலையும் தீராப் புதிர்களையும் விளைப்பதல்லது அமைதிக்கு வழி செய்வதில்லை; திருக்குறள் ஒன்றே மக்களுக்குச் சமயமும் சாத்திரமும் ஆகவல்லது. சிமையம்-சிகரம் போன்றுயர்ந்த.

33. தேயும்-நெஞ்சம் ஈடுபடும்; தொடர்வார்-வினைப்பெயர்.

34. திருவள்ளுவ மாலை திருக்குறளின் பெருமை உரைக்கும் புகழ் நூல். அந்நூலை ஆய்ந்தறிந்தபின், திருக்குறள் ஒன்றிலே மனஞ் செல்லுமே தவிர பிறநூற்

கண் செல்லாது "திருவள்ளுவர் காலத்துப் பெரியோரே (இதனைப்) போற்றி எடுத்துக் கொண்டனர். அப்பெரு மக்களின் பாராட்டுக்களே திருவள்ளுவ மாலை.

- அழகரடிகளார், திருவள்ளுவமாலை ஆராய்ச்சி.

உணர்ச்சிப் பிழம்பு - நல்லுணர்வின் திரட்சி. தொடர்ந் திடும் - வாழ்நாளெல்லாம் துணையாகி வரும்.

35. விலக்குவ, விதித்தன-பலவின்பால் படர்க்கை வினைப்பெயர்கள். கலைத்திறமேடை - விரிவுரை அரங் கம்; களி-மயக்கந்தரும்; புலைப்பொருள் - புன்மையான பொருள்கள்.

36. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

என்பதால் வாழ்வுக்கு நல்வழிகாட்டும் நூல்களைத் தேர்ந்து கற்பதோடு, கற்றதன்படி நிற்றல் வேண்டும்.

37. கௌடில்யரின் அர்த்தசாத்திரமும், கண்ணன் கீதைப்பொருளும் திருக்குறளின் பொருட்பாலிலேயே அடங்குவன. ஆணைத்திறத்தில் - கட்டளையிட்டுக் கூறிய வகையில். மதிசான்றிடு மாதவர் - செம்பொருள் கண்ட அறிஞர்.

38. பிறவிதோறும் உயிரைப் பற்றி வரும் அவிச்சை செம்பிற் களிம்பு போல உயிரோடு கலந்திருப்பது. இம்பர்-இப்பிறவி. ஊழின்-இருவினையின். இறுக்கம் - அழுத் தம், ஒப்புளதே-ஏகாரம் வினா.

39 மோடு-உயர்ச்சி. மோதும்-அலைமோதித் தாக் கும். பாட்டு - குறள் வெண்பா. பைந்துணை - என்றும் மாறாத காப்பு. நாட்டின் இலக்கியம்-தேசிய இலக்கியம். நாட்டிலர்-நியமிக்கத் தவறினர். தேசிய விலங்கு, பறவை, மலர் இவற்றைப் போல தேசிய இலக்கியமும் நாட்டிற்கு இன்றியமையாததாகும்.

40. அரசியல் அமைச்சியல் முதலான பொருட்பாற் குறள்களும் இல்லறத் தலைவன் தலைவியர்க்கும் பொருந்துவன ஆகும். நடு-நடுநிலைமை. நந்தெய்வம்-நம் தெய்வம் போன்ற.

41 விதி-சட்டம் தேர்தல் - வயது வந்தவர்களின் வாக்களிப்பின் அடிப்படையில் நாடாளுமன்றம் சட்ட மன்றங்களுக்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தல் (Adult Franchise). பொருள்-பொருட்பால். தேர்தலுக்கு நிற்ப வர் திருக்குறளின் பொருட்பால் அளவாவது கற்றிருத்தல் வேண்டும் என்ற சட்டம் இயற்றுதல் நாட்டுக்கு நல்லது. மாட்சியென்று விதியொன்று செய்திடல் வேண்டும் என்று கூட்டுக.

42. வருண ஒழுக்கம் என்ற பேரால் நாட்டில் சாதி சமய சண்டைகளும் பிணக்குகளும் நாளுக்கொரு புதிய வடிவம் பெற்று வளர்ந்து வருதல் கண்கூடு. கொழுத்து நின்று - வலுவுடைத்தாக எதிர்த்து.

43. அணு-அணுகுண்டு. குருதிப்புனல் விளையாட்டு-போரில் இறந்தாருடைய இரத்த வெள்ளத்தில் நடமாடும் போர்வெறி. இலங்கையில் நடைபெற்று வரும் அநாகரிக இனக்கொலைப் போர்வெறி இதற்கு எடுத்துக்காட்டு. துங்க அருள்-உயர்ந்த அருட்பண்பு. துலக்குக-பிறவினை

44. வேலை-கடல். புறம்செலும்-வெளியேறும். மெய் யறிவுச் சாலை-பகுத்துணர்ந்து செல்லும் வாழ்க்கைப் பாதை. நடைபோட்டிடும்-நடந்து செல்லும். தண்மனம்-குறட் கருத்தால் தெளிவடைந்த மனம்.

45. அணியிலக்கணம் அனைத்தும் பிறிதுமொழிதல் முதலிய மூன்றில் அடங்கிவிடும். தொல்காப்பியத்தில் உவமவியல் என்றுதான் பேசப்படுகிறது. திருக்குறளில்

வரும் உவமைகள் மக்கள் தினமும் கண்டு பழகும் அனுபவப் பொருள்களைக் கொண்டே விளக்கப்பட்டுள்ளன. தோட்டத்துப் பச்சிலை கொண்டே அரிய நோய்களைப் போக்கும் மருத்துவன் போன்றவர் திருவள்ளுவர்.

46. குற்றமும், உம்மை - இன்மையைக் குறித்தது. குறளே-ஏகாரம் தேற்றம். சிறுமை-குறைந்த ஆய்வு.

47. பெண்வழிச் சேறல் 'தன்வழி ஒழுகற் பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல்' என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். 'இல்லதென்.........மாணாக்கடை' என்ற குறளிற் சொல்வது போல இல்லாளிடம் நற்குண நற்செய்கை காணாவிடத்தும் அவள் வழியே குழைந்து செல்லுதல் பேதைமை என்பதைப் பெண்வழிச் சேறல் காட்டுகிறது.

48. உண்மை நட்பினர் அல்லர் என்பது நன்கு தெரிந்த போது, அவ்வஞ்சகச் சூழ்ச்சியாளரைத் தாமும் நகை முகங் காட்டிப் பேசி, அவர் வஞ்சனையை வென்று தம் வழிக்குக் கொணர்வதில் தவறில்லை.

49 ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம் கூடியார் பெற்ற பயன் (குறள் 1109) என்றபடி ஊடலும் கூடலும் நிறைந்த தம்பதியர் உறவினில் உண்டாகும் மகிழ்வின் முதிர்ச்சியே பேரின்பத்துக்கும் வழி கோலுகிறது. களவியலுரைகாரர் நக்கீரரும் தஞ்சைவாணன் கோவை உரைகாரர் சொக்கப்ப நாவலரும் கூறும் உரைகளில் இக் கருத்துக் காணலாம்.

50. 'மாந்தர் தம் உள்ளத்தனைய துயர்வு' என்பது வள்ளுவர் வாக்கு. உயிரிரக்கத்தால் அன்பு வளரும், அன்பு வளர உள்ளம் விரிவாகி அருட்பண்பு தலையெடுக்கும், அதனால் உலகம் போற்றும் உயர்நிலை

அடைவர். என்வே உள்ளத்தினை உயர்த்து முயற்சியில் இறங்க வேண்டும்.

51. வள்ளலாரும் காந்தியாரும் கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்கப் பாடுபட்டவராவர்.

52. 'உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.' - குறள் 294

என்னும் கருத்தின்படி வாய்மையே வெல்லும் என்று கண்டு வாழ்நாள் முழுதும் வாழ்ந்தவர் காந்தியடிகள். இந்தக் குறளை எண்ணும் போது காந்தியாரின் சத்திய சோதனை வாழ்வு நினைவுக்கு வருவது உண்மை.

53. அன்பே சிவம் என்று வற்புறுத்தும் அன்புச் சிவநெறி ஒன்றுதான் திருக்குறள் கோட்பாட்டிற்குப் பொருந்தும். மனுவாதி நூல்கள்-மனுஸ்மிருதி போன்றவை. சிராத்த கன்மங்களில் ஊனுண்ணல் தவறில்லை வேள்விகளில் உயிர்க்கொலை இன்றியமையாதது என்பன இந் நூல்கள். உயிரிரக்கம் காட்டுவதாய்ச் சொல்லும் புத்தமதம் பிறர் கொன்று தரும் ஊனைப் புசிக்கலாம் என்பது அறியத்தக்கது.

54. மழலைப் பருவத்தில் கிளிகளுக்குச் சொற்பயிற்று தல் போல் பெற்றோர் திருக்குறளைச் சொல்லிக் கொடுத்தால் குழந்தைகள் விருபத்தோடு கற்றுணரும். குழந்தைகளுக்குச் சொற்பயிற்றுந் தாய்மார் இதனை உணர்தல் நலம்.

55. இந்நாள் செய்யும் பசுமைப் புரட்சிக்கு வித்திட்டவர் திருவள்ளுவரே என்பார் டாக்டர் பா. நடராசன் அவர்கள்.

'Thiruvalluvar lays great emphasis on improved agricultural teckniques as known in those days and lays down a

scale of priorities in the use of imputs. Was he not laying the foundation of a great revolution which it took his indifferent followers two thousand years to rediscover?'

Dr B. Natarajan, M A D.Litt, in his
'Relevance of Valluvam to modern political econcmy'

56. இலம் என்றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். - குறள் 1040
என்றது, முன்னேற்றந் தரும் உழவில் கருத்தூன்றாது வறுமையில் வாடுவாரை நோக்கிக் கூறியது

57. 'வேடநெறி நில்லார் வேடம் பூண்டென் பயன்' என்பார் திருமூலர். கூடாவொழுக்கம் உடையாரைக் கடிந்தொதுக்க வேண்டும் என்பது கருத்து.

58. மூதறிஞர் வழி நடப்பவர் அவர் கொள்கைக்கு இசையும் செயல்களைச் செய்வர். இசையாதவற்றைச் செய்யார். திருக்குறளை வழிகாட்டியாகக் கொள்ளும் நாமும் குறட்கருத்துக் கிசையவே நடந்தால் வாழ்விற் குறை நேராது.

59 'ஆதிசிவன் பெற்றுவிட்டான்' என்று பாரதியார் சிவபிரானே தமிழைத் தந்தவர் என்றார். தமிழ் மொழிக்கு ஆயிரக்கணக்கான நூல்கள் இருப்பினும் திருக்குறளால் தான் அம்மொழிக்குச் சிறப்பு. பூந்தமிழாகிய மழலைச் செல்வி முப்பாலை யுண்டு வளர்ந்தாள் என்க.

60. நாட்டின் சிக்கல்களைத் தீர்க்கவல்லது திருக்குறள். பொதுவறம்-மக்கட் சமுதாயத்துக்குப் பொதுவான ஒழுக்கம். திறம்புதல் - மாறி நடத்தல். பழனம்-வயல். ஏகதேசவுருவகம்.

61. அணுயுகம் கம்ப்யூட்டர் யுகம் என்னும் புதுமை முன்னேற்ற நாகரிகங்கள் ஒருபுறம் காணப்படும். அதே

நேரத்தில் மாந்தர் நல்லுணர்வு படிப்படியாக மிக்தாழ்ந்த நிலைக்குச் செல்வதை யாரும் மறுத்திட வியலாது. குடும்பத்திற்கூடப் பெரியோர் சொல்வழி நடத்தல் சுற்றம் தழுவி வாழ்தல் அனைத்தும் பழங்கதையாய்க் கருதப் பட்டு வருகிறது. இதே நிலையிற் சென்றால் மக்கள் வெறும் விலங்குணர்ச்சியோடுதான் வாழ இயலும். அந்த வழியினின்று தப்புதற்குத் திருக்குறள் உதவும்.

62. நாடு என்பது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று திருக்குறளின் 'நாடு' என்ற அதிகாரம் விளக்குகிறது.

63. ஊருணி, பயன்மரம், மூலிகை மரம் இவை மூன்றும் ஒப்புரவாற்றுவானுக்கு எடுத்துக்காட்டாகக் குறள் சொல்லும். ஊருணியில் உண்பார்களில் வரையறையில்லை. தக்கார், தகாதார் அனைவரும் உண்டு தாகம் தீர்வர். பயன்மரம், அதனினும் சிறந்து ஊர் நடுவண் இருந்து பசி போக்குகிறது. எனினும் அளவறிந்து உண்ணாதார்க்கு நோயும் தரும். மருந்து மரம் தேவைப்படுபவர்க்கு இன்றியமையாததாவதால் அவற்றினும் சிறந்ததாகிறது. ஒப்புரவில் இம்மூன்று நிலையும் வேண்டுவதே.

64. வேரிற் பழுத்த பலா இலக்கிய இன்பங்களுக்கெல்லாம் அடிப்படையாகிய குறளுக்கு உவமை.

65. திருக்குறள் செவிலியாகவும், நட்பாகவும், வழித்துணையாகவும், தளர்ந்த மூப்பினில் ஊன்றுகோல் போல் உறுதி தருவதாகவும் மக்களுக்கு உதவ வல்லது.

பற்றுதும்-துணையாகக் கொள்வோம்: தன்மைப் பன்மை எதிர்காலமுற்று.

66. குறண்மலர் 'என்றும் புலராது யாணர் நாட்செல்லுகினும் நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையது.'

67. உருவகம்; நோய் தீர்க்கும் மூலிகைச் செடி, கொடி, மரங்களின் வேர்களின் தொடர்பு கொண்டு மலையிலிருந்து இழிந்து நாடெங்கும் ஓடும் அருவிகளும், யாறுகளும் மக்கள் உடற்பிணி நீர்வேட்கைகளைத் தவிர்ப்பது போலத் திருக்குறளிலிருந்து பொங்கித் ததும்பிவரும் அமிழ்தான கருத்துக்கள் மாந்தர் உளப்பிணி, இலக்கிய வேட்கைகளைத் தீர்க்கின்றன.

68. மா, பலா, வாழை ஆகிய முக்கனிகளும் திருக்குறள் மூன்று பால்களுக்கும் முறையே உவமையாக்கப்பட்டது. இல்லறம் துறவறம் என்னும் இரு பிரிவினவாக உள்ள அறத்துப்பால் மாம்பழச் சுவை போன்றது. மாங்கனியின் விதை நோய் தீர்க்கும் பண்பினையொப்பத் துறவியலும் பிறவி நோய் தீர்க்கும் வழி புகல்வது. முட்புறக் கனியாகிய பலா சடுதியில் புசிப்பதற்குச் சற்றுக்கடினமாக இருத்தல் போலப் பொருட்பால் சற்றுப் பொறுமையாக ஆய்ந்து காணும் நலமுடையது. இன்பத்துப்பால் எளிதாகச் சுவைத்து மகிழக் கூடிய வாழைக்கனி போன்றது என உவமை பொருந்தும்.

69. இன்பத்துப்பாற் செய்யுள் ஒவ்வொன்றும் விரிப்பின் ஒரு சிறு கதையாக அமையக் கூடியது.

70. மூன்றாம் குலோத்துங்கன் வேண்டிடக் கம்பர் இராமாயணம் பாடியதும் வரபதியாட் கொண்டான் விருப்பத்திற்கிணங்கி வில்லிபுத்தூரர் பாரதம் பாடியதும், சந்திரன் சுவர்க்கிக்காகப் புகழேந்தியார் நளவெண்பா இயற்றியதும், ஹர்ஷனுக்காகப் பாணர் நைஷதம், காதம்பரி செய்ததும் யாவரும் அறிவர். திருக்குறள் திருவள்ளுவர் திருவருளால் உருவாகியது.

71. நபிநாயகத்தின் மதம் பெரும்பாலும் வாண்முனையால் அச்சுறுத்திப் பரப்பப்பட்டது. ஏசுமதம் எதிர்காலத்தில் பல நன்மைகள் பெறலாம் என்ற விருப்பம் காட்டிப்

பரப்பப்படுகிறது. திருக்குறள் கொள்கையின் நன்மை களை உலகமே விருப்பத்தோடு ஏற்று மகிழ்கிறது.

72. மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறம்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்கா யுதிர் தலு முண்டு. -நாலடி. இளமை 9

என்பது போல நம் வாழ்நாளை அறுதியிட்டு அறிய இய லாது. பிறகு பார்க்கலாம் என்று தள்ளிப் போடாமல் திருக்குறளை இப்போதே கற்றுப் பயனடைதல் நல்லது.

73. அழகரடிகளார் சைவ சித்தாந்தச் செஞ்ஞாயிறு, சிவநெறி செஞ்சொற் கொண்டல், பெரும்பேராசிரியர் என் றெல்லாம் அறிவுலகத்தாற் போற்றப்பட்டவர். திருக்குற ளில் ஆழம் இத்துணையதென்று ஆய்ந்து கண்டவர். மதுராந்தகத்துக்கு அடுத்த பெருவெளியில் குருகுலம் அமைத்துப் பின் அதனையே திருக்குறட் பீடமாகக் கண்டு, அதன் முதற்குரவராகவும் திகழ்ந்தவர். இப்பீடம், திருக்குறள் பரப்பும் பணியில் அவர் காட்டிச் சென்ற வழி யில் குருபழநி யடிகளாரைத் தலைவராகக் கொண் டியங்கி வருகின்றது.

74. வைகறை யாமம் உள்ளம் தெளிந்த நீரோடை போல் அமைதியாக இருத்தலால் அப்பொழுது திருக்குறள் வழிபாட்டுக்கு அதனைத் தக்க நேரமாகக் கொள்ளலாம்.

75. தணிகைக் கச்சியப்ப முனிவர் 'கவி ராட்சசர்' என்ற பெருமித பட்டத்துக்குரியவர். தணிகைப் புராணம், காஞ்சிப் புராணம் இரண்டாம் காண்டம், விநாயக புரா ணம், பேரூர் புராணம் என்பன இவர் படைப்புகளுள் சிலவாகும். தணிகைப் புராணத்தில் முனிவர்,

ஆயுந் தொறுந் தொறு மின்பந் தருங்கலையாங் கறிவு
மாயுந் தொறுந் தொறு மின்பந்தரும் வள்ளல் வார்கழல்கள்

தேயுந் தொறுந் தொறு மின்பந் தருஞ்சந்து தேங்குழனிற்
றோயுந் தொறுந் தொறு நேராத வின்பஞ் சுரந்திடுமே.

- என்றுரைத் தருளினார்.

76. நெறியைப் படைக்கும், தகைமையைக் காத்திடும், துன்பம் கேடுறப் போக்கும் எனவே திருக்குறள் மூவர் தொழிலினை இயற்றுமென்க.

77. திருக்குறளினை ஒரு பெருந் தருவாகக் கொண்டால் மூன்று பால்களும் மூன்று பெருங் கிளையாகக் கிளைத்து அவற்றில் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட் பாக்களும் அத்துணை கனிகளாக எண்ணி மகிழலாம்.

78. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். - குறள் 85

விருந்து உண்பிப்பவன் நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமோ என்பதால் தானாகவே விளையும் என்று பெறப்படுகிறது. இல்லறக் கடமைகளுள் முதன்மையானதாகத் தமிழ் மாந்தர் கருதியது விருந்தோம்பலாகும். 'தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த வென்னை' என்று கண்ணகி வருந்தியதாகக் கூறும் சிலப்பதிகாரத் தொடர் விருந்தோம்பலின் முதன்மையைக் காட்டுகிறது.

79. குறள் நூலின் செய்யுட்களின் பொருள்கள் கற்குந்தோறும் புதிய புதிய ஆய்வுகளை நல்குவதாகும்.

80. செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புநபலவே,

- என்பது புறநானூறு

பொருளானாம் எல்லாம் என்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

என்னும் திருக்குறள் பொருளால் எல்லாம் ஆகும் என்று பிறர்க்கு ஒன்றும் கொடுக்காமல் இறுகப் பற்றிய மயக்கத்தால் சிறப்பில்லாத பிறவி உண்டாகும் என்னும் கருத்தைத் தருகின்றது. இதனைத் தெரிந்தும் சிலர் செல்வம் படைத்தும் அதனைப் பதுக்கி வைத்து வாழ்தல் அறிவின்மையாகும்.

81. தெண்ணீரடு புற்கை யாயினும் தாள்தந்த(து)
உண்ணலின் ஊங்கினிய தில்.

என்னும் குறள், தம் உடல் உழைப்பால் பெறுவது சிறிதாயினும் அதனால் தாம் உண்பது புல்லரிசிக் கஞ்சியாக இருந்தாலும் அது மிகவும் சிறப்பானதாகும் என்கிறது. இதனால் உழைப்பின் சிறப்பு நன்கு விளங்குகிறது.

82. இளிவரின் வாழாத மானமு டையார்
ஒளிதொழு தேத்தும் உலகு - குறள் 970

இதனால் மானமழிந்தபின் வாழாமையே இனிது என்று கூறுவதறிந்தும் தீயவழிகளில் பொருள் தொகுக்க முற்படுபவர் மானத்தைப் பொருட்படுத்தாமல் புல்லிய நெறிகளிற் செல்லுவார் தம்மை இடித்துரைப்பது இச்செய்யுளாகும்.

83. செந்தமிழ்......விளக்குவ - காப்பியங்களில் செய்யுட் பொருளை நன்கு தெரிந்து கொள்வதற்கு எடுத்துக்காட்டாக ஆளப்படும் குறள்கள் துணை செய்கின்றன. முத்தமிழ்......துணையாவன - மேடையில் விரிவுரை செய்வார்க்குத் துணை புரிகின்றன. மொழிச்சந்தம் - மொழியின் அழகினை.

84. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

என்னும் செய்யுள் 'புகழுடம்பு மேம்படுவதாகிய வாழ்வில் கேடும், புகழ் நிலை நிற்பதாகிய சாவும் அறிவில் சிறந்த

வர்க்கு அல்லாமல் மற்றவர்க்கு இல்லை' என்னும் பொருள் தரும். இந்தக் கருத்துக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர் கடையெழு வள்ளல்கள், சிறந்த இலக்கிய இலக்கண மேதைகளும், விஞ்ஞான நுண்ணறிவினரும் இதில் அடங்குவர்.

85. இணையில்லாத அறமான கொல்லாமைக்கு அடுத்த நிலையில் பொய்யாமையை வைத்துப் பேசப்படுகிறது. சான்றாண்மையைப் பேசும்போதும் 'கொல்லா நலத்தது நோன்மை' என்று திருக்குறள் கொல்லாமையை வற்புறுத்துகின்றது. எய்யாமை-அறியாமை. இடறுவர் - தவறு செய்வர்.

86. சிந்தாமணி என்னும் காப்பியத்தில் சச்சந்தன் இடிக்கும் துணையான நல்லமைச்சரை நம்பாமல் தீய கட்டியங்காரனை நம்பியதும், பாரதத்தில் துரியோதனன், வீட்டுமர் போன்ற பெருமக்களை நம்பி நல்வழி நாடாமல் சகுனி போன்றார் சூழ்ச்சிக்கு ஆளாகிக் கெட்டதும் சிந்திக்கத் தக்கதாகும்.

87. ஏழைகளுடைய பசியைப் போக்கிடும் புண்ணியச் செயல், தமக்குப் பின்னாளில் உதவுதற்கு எய்ப்பினில் வைப்பாக வைத்த புண்ணியச் செயலாகும் என்று திருக்குறள் கூறுகிறது.

88. சித்த மருத்துவத்தில் இன்றியமையாததும் அடிப்படையானதும் ஆகக் கொள்ளுவது வாத பித்த சிலேத்துமச் செயற்பாடுகளை நாடியறிந்து சிகிச்சை புரிதலாகும். திருவள்ளுவர்

> 'மிகினும் குறையினும் நோய்செயு நூலோர்
> வளிமுதலா எண்ணிய மூன்று.'

என்று குறிப்பிட்டதால் அவர் காலத்துக்கு முன்பே சித்த

மருத்துவ முறை தமிழகத்தில் ஆட்சியில் இருந்ததாகக் கொள்ளப்படும்.

89. சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்னும் முப் பொருள் உண்மையைத் தெரிவிப்பதாகும். திருவள்ளுவர், இறையுண்மை, உயிர்களின் வளர்ச்சி, இருவினையின் இயல்புகளைக் குறிப்பிடுவதால் அவர் கொள்கை திரு நெறிச் சைவத்துக்கு அடிப்படையாக விளங்கியதாகும்.

90. வேம்பும், கடுவும் (கடுக்காயும்) தீரா நோய்களை யெல்லாம் தீர்க்கும் வன்மை வாய்ந்தவை. இவையிரண் டும் உண்ணுங் காலத்தில் சுவை பயவாமல் அருசியாக வும் அருவருப்பாகவும் இருப்பினும் நோய் தீர்த்தல் தவ றாது. அதேபோல் சில குறள்கள் கடிந்துரைப்பது போல் காணப்படினும் அவை நன்மை தருவதில் தவறுவதிலை.

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். - குறள் 420

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். - குறள் 576

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. - குறள் 1050

சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. - குறள் 230

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். - குறள் 214

என வரூஉம் குறள்களைக் காண்க.

91. கரும்பில் அடியில் இருக்கும் சுவை நுனியில் இருப்பதில்லை. இடையில் கணுக்கள் நிறைந்து சுவைப் பார்க்கு இன்னாதாகும். திருக்குறள் முதற்குறள் முதல் ஈற்றுச் செய்யுள் வரை ஏற்றத் தாழ்வில்லாத சுவைதரக் கூடியது.

92. திருவள்ளுவர் கால ஆராய்ச்சி இன்னும் முடிந்த பாடில்லை. கி.மு. ஏழாம் நூற்றாண்டு என்பதிலிருந்து கி.பி. 10-ம் நூற்றாண்டு என்பது வரை, பலரும் பல விதமாக வாதிட்டுக் காலம் சென்றதே தவிர இதுதான் அப்பெருமான் வாழ்ந்த காலம் என்று திட்டமிட்டுக் கூறியவர் எவரும் இல்லை.

93. நெற்குற்ற...... நீர்மையர் - இது ஒரு நீண்ட காலப் பழமொழி. திருக்குறளின் மாட்சி உணர்ந்து வாழ்வில் அதனைப் பின்பற்றுவதின்றிக் கால ஆராய்ச்சியில் ஒருவர்க்கொருவர் முரணுவது நலம் பயவாது.

94. அண்மையில் மறைந்த திருக்குறள் அவதானி திரு. இராமையாபிள்ளை போன்றவர் நாட்டில் பெருகும் வகையில் அரசு ஊக்கம் தருதல் நல்லது. தேசிய இலக்கியப் பெருமை திருக்குறள் அடைந்திட அரசு தக்க முயற்சி எடுத்தல் இன்றியமையாதது.

95. ஆங்கிலம், தமிழ், கணிதம் இவை போலத் திருக்குறளும் தனிப்பாடமாகவும் அதற்கான தனித் தேர்வு முறைகளும் தொடக்கத்திலிருந்தே எல்லா வகுப்புகளுக்கும் அமைத்திடல் நலம் பயப்பதாகும்.

96. 'நன்றி மறப்பது நன்றன்று' 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்பன பொய்யாமொழிகள். திருக்குறள் ஆருயிர்க்குச் செய்துள்ள பேருதவி மறத்தற்கில்லை. தந்தார், வினைப்பெயர், மனத்தால் நினைந்து, மொழியால் வாழ்த்தி, வழிபாடாற்றுவது ஆகிய திரிகரண சுத்தி தேவை

97. உலகம் போற்றும் திருக்குறள் தமிழனின் தனிச் சொத்தல்லவா! அந்தப் பெருமையை எண்ணும் பூரிப் பில் மார்பு நிமிர்வதும் தோள் கொட்டுவதும் இயல்பு.

98. நேற்று வரைக்கும் - சென்ற நாளெல்லாம். புறம் செல - மறைந்தொழிய. மெய்க்குறள் நூல் - மெய்ப்பொ ருளை விளக்கும் திருக்குறள்.

99 கலையரங்கு - ஓவியம் நாடகம் நாட்டியம் போன்றவைகள். பருத்தவொலி-பட்டிமண்டபத்தில் தத் தம் வாதத்தை நிலைநிறுத்த எழுப்பும் ஆரவாரப் பேச்சு. வருத்தம் ஒன்றின்றி - எவ்வகை வருத்தமும் விளைவிக் காமல்.

100. 'முற்றும் உணர்ந்தவரில்லை முழுவதூஉம் கற் றனம் என்று களியற்க' என்பது குருபர அடிகள் வாக்கு. திருக்குறள் முற்றும் ஓதுவது போதாது. குறட் பொருள் களை ஆழ்ந்து காணவேண்டும். அடுக்குத்தொடர். தொடர்ந்து நுகரும் இன்பத்தைக் குறித்தது.

101. சின்னஞ்சிறிய பருவத்தில் எனக்குக் கல்வியின் பால் ஈடுபாடு உண்டாக்கிய அன்னையினைத் தமிழ்த் தாயாகவே கருதுவேன். இளமையில் உண்டான ஊக் கமே திருக்குறளின் பெருமையை நாடியறிய உதவியது.

102 காழ்இல் - குற்றமில்லாத. கட்டுரைத்தேன்- விரித்துரைத்தேன். தொடர்ந்திடும் - தொடர்ந்து செல் வது உறுதி.

(முற்றிற்று)



# திருக்குறள் அம்மானை

*******

கவிஞர் இளம்பூரணனார்.

1. என்றும் திருக்குறளை எண்ணி அதன்வழியே
சென்றிடுவார் வாழ்வொன்றே சீர்பெறுவ தம்மானை
சென்றிவார் வாழ்வொன்றே சீர்பெறுவ தாமாயின்
நன்றியுடன் நல்லுளங்கள் நாடிடுமோ அம்மானை
நம்பினார் கெட்டதிலை நாடறிந்த தம்மானை.

2. இல்லறத்தின் செம்மையினால் ஏனையறம் யாவுமிவண்
புல்லுவதாய் முப்பால் புகன்றிடுங்காண் அம்மானை
புல்லுவதாய் முப்பால் புகன்றிடுவ தாமாயின்
இல்லதவள்தன் சீர்த்திக் கிணையுண்டோ அம்மானை
இருமைநல மும்தருவாள் இல்லாளே அம்மானை.

3. ஓதும் திருக்குறளில் உள்ளபடி வாழ்வுற்றால்
ஏதமுறும் பேதமிவண் எய்திடா தம்மானை
ஏதமுறும் பேதமிவண் எய்திடா தாமாயின்
சாதிமதச் சங்கடங்கள் சாருவதேன் அம்மானை
தரம்கெட்டார் நாட்டின் தரம்கெடுப்ப தம்மானை.

4. எக்குலத்து மாந்தர்க்கும் ஏற்றதொரு வாழ்வியலைத்
தக்கபடி யேமுப்பால் சாற்றுவதாம் அம்மானை
தக்கபடி யேமுப்பால் சாற்றுவதாம் ஆமாயின்
எக்குறையும் மாந்தரிடை எய்தாதோ அம்மானை
எய்துவது முப்பால் இனிப்பொன்றே அம்மானை.

5. வள்ளுவனார் செய்குறளின் வண்கருத்தைக்
கற்றபினும்
உள்ளுவரோ ஊனருந்தும் ஊற்றைநிலை
அம்மானை
உள்ளுவரோ ஊனருந்தும் ஊற்றைநிலை
என்பாயேல்
எள்ளும்இழி வின்னும் இருப்பதேன் அம்மானை
இதயம் இரும்பானால் ஏதிரக்கம் அம்மானை

6. நாடுமொழி நூலெல்லாம் நல்ல திருக்குறளின்
பீடனைத்தும் போற்றிப் பெருமையுற்ற தம்மானை
பீடனைத்தும் போற்றிப் பெருமையுற்ற தாமாயின்
ஈடெனச்சொல் நூலொன்றும் இல்லையோ
அம்மானை
ஈதென்றே சங்கத்தார் எண்ணியதும் அம்மானை.

7. சொல்லோ பொருளோ சுவைபெருக முப்பாலை
வல்லார்தம் நூற்கண் மலிவித்தார் அம்மானை
வல்லார்தம் நூற்கண் மலிவித்தார் ஆமாயின்
எல்லையின்றி நூற்பெருமை ஏறியதோ அம்மானை
இன்னறுந்தேன் பால்கலப்பின் ஏற்றமன்றோ
அம்மானை

8. அவ்வை இடைக்காடர் ஆய்ந்து பொதுமறையின்
செவ்விபெறு நுட்பமதைச் செப்பினர்கா ணம்மானை
செவ்விபெறு நுட்பமதைச் செப்பினார் ஆமாயின்
இவ்வொறுநூற் கேதும் இணையின்றோ அம்மானை
இமயத்துக் கொப்பதிவண் ஏதுண்டாம்
அம்மானை.

9. ஆரியநூல் கண்டே அருங்குறள்நூல் உற்றதெனத்
தேருமறி வில்லாதார் செப்புவதுண் டம்மானை

தேருமறி வில்லாதார் செப்புவதுண் டாமாயின்
சீருளவிந் நூல்மாட்சி செப்பரிதோ அம்மானை
தெய்வநூல் மாட்சிநலம் செப்புவரார் அம்மானை?

10. ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
வாயுரைத்தல் தெய்வ வழிபாடே அம்மானை
வாயுரைத்தல் தெய்வ வழிபாடே ஆமாயின்
சேயுயரும் வீட்டின்பம் சேருமோ அம்மானை
சித்தமிருந் தால்வீடு சேர்வரிதோ அம்மானை!

11. ஆட்சிநூலாகி அரிய திருக்குறள்தான்
காட்சிபெறின் நாட்டின் கவின்பெருகும் அம்மானை
காட்சிபெறின் நாட்டின் கவின்பெருகும் ஆமாயின்
வாழ்க்கையிலே அன்பருள்கள் வாழாதோ
அம்மானை
வையம் துறக்கமென வாழ்வுயரும் அம்மானை!

# திருவள்ளுவர் திருத் தசாங்கம்

செந்தார்ப் பசுங்கிள்ளாய்! தெய்வத் திருக்குறளைத்
தந்தார் **திருப்பெயரைச்** சாற்றுவையோ - முந்தும்
பெருவுண்மை முப்பொருளால் பேதைமையைப் போக்கும்
திருவள் ளுவரென்போம் தேர்ந்து. 1

சிந்து மழலைச் செழுங்கிளியே! நாயனார்
வந்துறையு நாட்டை வகுத்துரையாய் - செந்தமிழ்தேர்
தென்பாண்டி நாடென்பார் செப்புங்கால் மக்கள்வதிர்
எந்நாடும் நாடாம் இவர்க்கு. 2

பைங்கிளியே! இங்கேவா பால்மூன்றால் நாற்பொருளும்
இங்கிசைத்தார் ஊர்தான் இயம்புகநீ - சங்கம்சேர்
கூடல் மதுரையெனக் கூறிடினும் நற்குறளை
நாடுவார் நெஞ்சதுவாம் நன்கு. 3

தேறு மொழிக்கிள்ளாய்! தெய்வப் புலவரவர்
ஆறுதனை அன்பாய் அறிவிப்பாய் - மாறின்றிச்
சொற்குறளை ஓதிச் சுவைப்பார் உளத்துவகை
நற்பெருக்கே ஆறா நவில். 4

தேனார் மொழிக்கிளியே! தேவரெம் நான்முகனார்
வானார் சிறிய மலையாதாம்? - ஊனமிலாச்
சொல்லுயரு நற்குறளைச் சொல்வார் உயர்ச்சிமிகு
நல்லுளமே பொன்வரையாம் நன்கு. 5

அந்தசொல் மரகதமே! ஐயனெம் வள்ளுவனார்
விஞ்சுபுகழ் ஊர்தி விளம்புவாய் - நஞ்சனைய
கூனல் மதியினரைக் குத்தும் குறள்மருப்(பு)
யானையவர் ஊர்தியென எண். 6

தென்மழலை அஞ்சுகமே! தெய்வச்சீர் நாவலர்க்குப்
பன்னும் படையென் பகராயோ - தன்மானம்
இல்லாரைக் குத்தி இடித்துரைக்கும் செய்யுளதே
வல்ல செழும்படையாய் வாழ்த்து. 7

சின்னஞ் சிறுகிளியே! செந்நாப்போ தார்கோயில்
முன்ன முழங்கு முரசுரையாய் - எந்நாளும்
உற்றுவகை யாற்குறளை ஓதி முழங்குமவர்
முற்றோதல் காண்அம் முரசு. 8

ஏரார் இளங்கிளியே! எந்தைபெரு நாவலர்தம்
தாரேது சற்றெனக்குச் சாற்றுவையோ - சீராரும்
தென்மதுரைச் சங்கப் புலவர் தெரிதமிழஞ்
சொன்மணக்கு மாலையெனச் சொல். 9

சோலைச் செழுங்கிளியே! தோலாச்செந் நாப்போதார்
சீலக் கொடிப்பெருமை செப்புவாய் - ஞாலத்தே
ஆதி பகவன் அருள்விளக்கித் தீதொழிக்கும்
சோதியே நற்கொடியாச் சொல். 10

## பிழை திருத்தம்

### திருவள்ளுவர் கலம்பகம்

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| முன். 3 | - | 14 | நின் து | நின் று |
| 7 | - | 22 | அறிவினாராம் | அறிவினராம் |
| 1 | 1 | 1 | கலகம்பகப்பா | கலம்பகப்பா |
| 1 | 1 | 2 | பெய்முகிலாகி | பெய்ம்முகிலாகி |
| 1 | 2 | 4 | யென்னும் | யெண்ணும் |
| 3 | 1 | 20 | வுலகனவே | வுலகெனவே |
| 4 | 1 | 36 | வழிபடுத்தும் | வழிப்படுத்தும் |
| 4 | 1 | 37 | நிறைந்தனையே | நிறைத்தனையே |
| 28 | 78 | 3 | மனமென்பே | மனமன்பே |
| 28 | 78 | 5 | ஏழிசைகள் | ஏழிசைகூர் |
| 40 | 1 | 6 | பெறுவிதம | பெறுவித்தாய் |
| 46 | 17 | 2 | தெய்வய | தெய்வ |
| 46 | 17 | 2 | நிலைறிந்து | நிலையறிந்து |
| 53 | 36 | 7 | இனிதானர் | இனிதானார் |
| 57 | 48 | 7 | விருப்புத்தோடு | விருப்பத்தோடு |

### உள்ளுதற்கினிய திருவள்ளுவம்

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 92 | 61 | 1 | பிணியிண்மை | பிணியின்மை |
| 119 | 12 | 9 | ஒருவா | ஒருவர் |
| 123 | 28 | 5 | காப்பினாற்றாள் | காப்பினாற்றான் |
| 139 | 2 | 4 | இல்லதவள் | இல்லவள் |
| 140 | 8 | 4 | இவ்வெறுநூல் | இவ்வொருநூல் |



இந்நூல் வெளிவருவதற்குப் பொருளுதவி புரிந்த நூலாசிரியரின் மாணவ அன்பர்கள் மற்றும் பெருமனப் பெருந்தகையாளர்கள்.

| | |
|---|---|
| வேளாண் வித்தகர் திரு. க. முத்துமல்லா ரெட்டியார் பொலம்பாக்கம் | 3001 |
| சிறுநல்லூர் முத்துமல்லா ந. நி. பள்ளி நிர்வாகம் | 1001 |
| சிவத்திரு. குருபழநி அடிகளார் திருக்குறள்பீடம், குருகுலம் | 1001 |
| புலவர் திரு. த. ஆறுமுகம், கண்டரச்சேரி | 2001 |
| புலவர் திரு. முத்துவடிவேல், கண்டரச்சேரி. | 1501 |
| புலவர் திரு. சோ. தண்டபாணி, கண்டரச்சேரி. | 1501 |
| புலவர் திரு நா. வேணுகோபாலன், சித்திரவாடி. | 1501 |
| டாக்டர் திரு. கோ. பெருமாள், சித்திரவாடி. | 1001 |
| திரு. வே. நித்தியானந்தம், மதுராந்தகம். | 1001 |
| புலவர் திரு. கந்தசாமி, மதுராந்தகம். | 1501 |
| புலவர் திரு. இராசேந்திரன், செய்யூர். | 501 |
| திரு இராமகிருஷ்ணன், மதுராந்தகம். | 500 |
| புலவர் திரு. இராசு, சிறுகளத்தூர். | 500 |
| திரு. இலட்சுமிபதி, கண்டரச்சேரி. | 501 |
| திரு இரத்தினவேல், கடுகுப்பட்டு | 501 |
| திரு. கி. நாராயணசாமி சித்திரவாடி. | 501 |
| திரு. சி. பட்டாபிராமன், அருங்குணம். | 400 |
| திரு. சி. நாராயணசாமி, சிறுநல்லூர். | 300 |
| திரு. சிவஞானம், சித்திரவாடி. | 251 |
| திரு. தே. கிருஷ்ணமூர்த்தி, குருகுலம் உ.பள்ளி. | 202 |
| திரு. இரத்தினவேல், கண்டரச்சேரி | 250 |
| திரு தே. சண்முகசுந்தரம், கண்டரச்சேரி | 250 |
| திரு. க. சண்முகம், கண்டரச்சேரி. | 250 |
| திரு. இராமநாதன், அருங்குணம். | 200 |
| திரு. முனுசாமி, மோச்சேரி. | 150 |
| திரு. பொன்முத்து, குருகுலம். | 100 |
| திரு. சோமசுந்தரம், முதுகரை. | 101 |
| திரு. சி. செல்வராசு, குருகுலம். | 101 |
| திரு. முனியப்பன், சின்னவெண்மணி. | 100 |
| திரு. நாராயணதாஸ், பெருவேலி. | 101 |



## ஆசிரியரின் பிற நூல்கள்

1. பாலசுந்தர விநாயகர் பதிகம்
2. பாலசுந்தர விநாயகர் ஊசல்
3. தருவருட்செயல் (செய்யுளில் சிறுகதை)
4. குருபழநியாண்டவர் நான்மணிமாலை (திரு. ந.ரா. முருகவேள் அணிந்துரையுடன்)
5. அபிராமியம்மை இரட்டை மணிமாலை
6. நால்வர் அம்மானை
7. நால்வர் நூற்றெட்டுப் போற்றியகவல்
8. அழகரடிகள் அம்மானை
9. திருவள்ளுவர் நூற்றெட்டுப் போற்றியகவல்
10. கார் எழுபது
11. இன்பவல்லி (நாடக இலக்கியம்)
12. காரைக்கால் அம்மையார் வெண்பா
13. கழுக்குன்ற நாயகி அந்தாதி

## அச்சிடப்படாமல் இருப்பன

1. மலர்வாழ் தேவியர் மலரடிப் புகழ்ச்சி
2. சிறுவர்க்கான செய்யுட்கதைகள்
3. மானனீகை முதலான நாடகத் தொகுப்பு
4. கவிதைத் தொகுப்பு (200 கவிதைகள்)